பொழிகதிர்மணியிற்செய்தபுதவுடைக்கடிகொள்வாயில்
குழைமுகம்பொருதவேற்கட்கோதையர்வினாவினோடு
விழைவொடும்விதர்ப்பர்கோமான்போந்தமைவிளம்பலோடும்
மழவிடையனையான்போந்துமாயனைத்தழுவினானே. (௪௭௩)

மழைபுறழ்தடக்கைவேந்தன்மனைப்பெருங்கிழமைபூண்ட
தொழுதகுகற்பினாளைச்சுடர்மணிக்கொம்பினொல்கி
எழில்குவிந்தனையநங்கையிறைஞ்சலுமெடுத்துமோந்து
விழைவொடுகுறங்கில்வைத்துமெய்யுறத்தழுவிக்கொண்டாள். ()

அன்னைதாடொழுதுபின்னரலத்தகக்குழம்புதோய்ந்த
பொன்னிதழ்க்கமலஞ்சேப்பப்புணர்முலைதாங்கலாற்றா
மின்னுறழ்மருங்குநேம்பமெல்லெனவொதுங்கிப்போந்து
தன்னுடைத்தாதைபைம்பொற்றாளிணைவணங்கினாளே. (௪௭௫)

வணங்கிநுண்மருங்குநோவவல்லியினொல்கிநின்ற
சுணங்கிளமுலையஞ்சாயற்சுடர்க்கொடிதனையும்வேந்தர்
நிணங்கமழ்குருதிவைவேனளனையுநோக்கிநேரார்
உணங்கியமுன்றில்வேந்தனுவகையங்கடலுளாழ்ந்தான். (௪௭௬)

பண்ணமைகலினமான்றேராயிரமிரட்டிபாய்மா
அண்ணலங்களிநல்யானையாயிரத்தறுபத்தொன்பான்
கண்ணகன்விசும்புபூத்தகற்பகத்தருவினோடும்
மண்ணிழிந்தனையபேருலாப்பதும்வழங்கினானே. (௪௭௭)

பொழிகதிர்மணிசெய்கட்டில்புனைமலர்ப்பாயல்பைம்பொன்
இழைபயில்வண்ணப்பேழையினியசாந்தாற்றியோடும்
நிழறவழ்மணிக்கண்ணாடிநித்திலமுகடுவேய்ந்த
ஒழுகொளிக்கவரியின்னவுலப்பிலநல்கினானே. (௪௭௮)

அல்லியங்கமலநீங்கியரசிற்புகுந்துவாழும்
மெல்லியல்பிரியலாற்றாவிழைவொடுபலகாற்புல்லி
மல்லலந்தெரியல்வீமன்மனைவியர்பலருமாழ்கி
எல்லையிறுயரினோடுந்தனித்தனியிரங்கினாரே. (௪௭௯)

பெருந்துயருழந்துவாடும்பிணையனார்தம்மைநோக்கி
விரிந்தபூந்துளவினோன்பின்விரைமலர்க்கோதையேகி
வருந்திமுன்னுயிர்த்ததெண்ணீர்மறிகடல்வருந்திற்றோவென்
றருந்தவர்க்கிறைவனானகோதமனாற்றினானே. (௪௮0)

அன்னையரம்மெலோதித்தோழியையருளினோக்கி
உன்னினுமிவண்மேற்காதலுளமெனவுரைக்கிலேமால்
என்னினுமின்றுதொட்டுமின்னுயிர்த்தோழியல்லை
பின்னாட்கன்னைநீயேவேண்டுவபுரிதியென்றார். (௪௮௧)

மணம்புரிபடலம் முற்றிற்று.

# மீட்சிப்படலம்.

மற்றிவைநிகழும்வேலைமகிழ்வொடுயாமன்றன்பால்
வெற்றிகொள்குருதிவைவேல்வேந்தர்கோன்விடைகொண்டேகி
அற்றமில்கேள்விசான்றவமைச்சனையினிதினோக்கி
இற்றைநாளெழுச்சியென்னவிமிழ்முரசறைகவென்றான். (௪௮௨)

## கலிவிருத்தம்.

அண்ணலங்குருதிவேலரசனேவலின்
கண்ணகன்முரசெழுகடலினார்த்தெழ
எண்ணிடவிடமிலையென்னநேமிசூழ்
மண்ணகவளாப்பெலாமலிந்ததானையே. (௪௮௩)

நிலவுவெண்கவிகைமேனிழற்றத்தண்மதிக்
கலைநிலாக்குவிந்தனகவரிகாலசெய
மலர்தலையுலகெலாம்புரக்குமன்னவன்
சிலையுலாந்தமணியந்தேரிலேறினான். (௪௮௪)

கலிகெழுமுரசினங்கறங்குமோதையால்
பொலமுகடுடைந்துமேற்போயிற்றில்லையேல்
அலர்தலைவிசும்பினிலடங்கலாவதே
நிலமிசையெழுந்துமேனிமிர்ந்ததூளியே. (௪௮௫)

இருங்கடற்றானையினெழுந்தநுண்டுகள்
பொருங்களிறுமிழ்மதம்பொழிந்ததில்லையேல்
கருங்கடலளறெழப்பருகிக்கார்க்குலம்
ஒருங்குவான்பொழியினுமொழிக்கவொண்ணுமே. (௪௮௬)

சுடர்விடுபெருமணிச்சூட்டராவின்மேல்
நெடுநிலந்துளக்குறநின்றவாற்றினால்
படரிருவிசும்பினிற்பாய்ந்தவல்லது
புடவிமேன்மிதித்திலபுரவிவெள்ளமே. (௪௮௭)

புதையிருள்சீத்தொளிபொழியுஞ்செங்கதிர்
உதயமால்வரையெழவொளியிழத்தலால்
மதிபல்வாய்வெயின்மறைத்தல்போலுமால்
கதிர்நிலாமுத்தவெண்கவிகையீட்டமே. (௪௮௮)

மழலையங்கிளிளையும்வளர்த்தபூவையும்
குழைபொருதடங்கணார்கொண்டுசூழ்வர
இழைவளர்முலையினாளிளநிலாக்கதிர்
பொழிமணிச்சிவிகையிற்போயினாளரோ. (௪௮௯)

கதிர்மணியடைப்பையுங்கால்செய்வட்டமும்
ததைமயிர்க்கவரியுந்தாங்கிமெல்லெ்ன
அதிர்குரற்கிங்கிணிசிலம்பொடார்ப்பெழ
மதரரிநெடுங்கணார்மருங்குபோயினார். (சகO)

கொடிகளுங்குடைகளுங்குழூமப்பல்லியம்
கடலுடைந்தாலெனக்கறங்கியார்த்தெழ
வடிகெழுகுருதிவேன்மன்னர்சூழ்வர
நிடதநாடடைந்தனனேமிவேந்தனே. (சகக)

அருமறைமுனிவருமமைச்சர்வெள்ளமும்
குரைகடற்றானையுங்குரவரீட்டமும்
முரசொலியதிர்குரன்முகிலினார்த்தெழ
இருநிலக்கிழவனையெதிர்கொண்டாரரோ. (சகஉ)

அகழியங்கடல்புடையணிநதுநீணிற
முகிறவழ்மதிலின்முற்றியினணிற்
புகைகமழெரிமணிப்பொன்செய்மாடத்தின்
நகைநிலாமதிதவழ்நகரமெய்தினான். (சகந)

பொருவருங்கங்கைநீர்நிறைத்துப்பூசுரர்
எரிமணிப்பொற்றசும்பேந்திமுன்வர
விரைகமழ்செழுந்தொடைவீமன்மாதொடும்
திருவளர்கோயிலிற்செல்வனெய்தினான். (சகச)

மீட்சிப்படலம் முற்றிற்று.

---

# கலிதோன்றுபடலம்.

---

...யகிவனின்னணமிருப்பவானிடைப்
பூங்கழல்விண்ணவர்போகுமெல்வையில்
தீங்குறுபடுபழிநீதுசூழ்வர
ஆங்கவர்முன்கலியடைந்ததோதுவாம். (சகரு)

வந்தவெங்கொடுங்கலிதனைவானவர்
இந்திரன்யாண்டுநீயேகுவாரெயனச்
சந்தணிமுலைத்தமயந்திமன்றல்கேட்
டந்தமில்வேட்கையாலடைந்துளேனென்றான். (சகசு)

...மமார்கோன்முறுவலெய்தியும்
...லிவந்தநீங்கெள

## 2. Question.

(*a*) மூன்றுறையரையனார் என்னசமயத்தினர் ?

(*b*) எச்சங்கத்திலிருந்தவர் ? சங்கமெத்தனை ? காலமென்ன ?

(*c*) இப்பழமொழி எதைக்குறித்துச் சொல்லுகின்றது ?

(*d*) இது எதைமருவியநூல் ? எந்தநூலோடு எண்ணப்பட்டது ?

(*e*) பதினெண்கீழ்க் கணக்காவதென்ன ?

(*f*) இந்நூல் எத்தனை உறுப்புகளடங்கிய பிண்டம் ?

(*g*) இது முதனூலா ? வழிநூலா ?

(*h*) இது எவ்வகைச்செய்யுளாற் செய்யப்பட்டது ? உதாரணமென்ன ?

## Answer.

(*a*) சமண சமயத்தினர்.

(*b*) கடைச்சங்கத்திலிருந்தவர். சங்கமூன்று. (3,000) வருஷத்துக்கு முற்பட்டது.

(*c*) அறம், பொருள், இன்பங்களின் இலக்கணங்களும், அவற்றின் பாகுபாட்டின் இலக்கணங்களுங் கூறுகின்றது.

(*d*) சங்கமருவியநூல். பதினெண்கீழ்க் கணக்கிலொன்று.

(*e*) (1) நாலடியார். (2) நான்மணிக்கடிகை (3) இனியவை நாற்பது. (4) இன்னா நாற்பது (5) கார்நாற்பது (6) களவழிநாற்பது (7) குறுந்தொகை (8) நெடுந்தொகை (9) கலித்தொகை (10) அகநானூறு (11) புறநானூறு (12) திருக்குறள் (13) திரிகடுகம் (14) ஆசாரக்கோவை (15) பழமொழி (16) சிறுபஞ்சமூலம் (17) முதுமொழிக்காஞ்சி (18) ஏலாதி. என்பவையாம்.

அடியில்வருஞ் செய்யுளாலு முணர்க.

நாலடி நான்மணி நாநாற்ப தைந்திணைமுப்
பால்கடுகங் கோவை பழமொழி - மாமூலம்
மெய்ந்நிலைய காஞ்சியோ டேலாதி யென்பவே
கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு.

(*f*) பால், இயல், அதிகாரம், செய்யுள் என நான்கு உறுப்புகளடங்கிய பிண்டம்.

(*g*) முதனூல்.

(*h*) நான்கடியாகிய நேரிசைவெண்பாவினாலும், இன்னிசை வெண்பாவினாலுஞ் செய்யப்பட்டது.

உதாரணச்செய்யுள்.

சினைத்த திதுவென்று நீர்மையை நோக்கி
மனத்த தறிந்திவார் மாணடார் - புனத்த
குடிஞை யிரட்டுங் குளிர்வரை நாட
கடிஞையுட் கல்லிடுவா ரில் (பழ-19.) } நேரிசை வெண்பா.

வினைப்பய னொன்றின்றி வேற்றுமை கொண்டு
நினைத்துப் பிறர்பனிப்பச் செய்யாமை வேண்டும்
புனப்பொன் னவிர்சுணங்கிற் பூங்கொம்ப ரன்றாய்
தனக்கின்னா வின்னா பிறர்க்கு. (பழ-14.) } இன்னிசை வெண்பா.

## 3. Question.

அடியில்வரும் பழமொழிகளுக்குத் தகுந்த செய்யுட்களை உமது பாடபுத்தகத்திலிருந் தெடுத்தெழுதுக.

(*a*) தருமந்தலையைக்காக்கும்.
(*b*) கெண்டையைப்போட்டு வராலையிழுத்தல்.
(*c*) ஏழையழுதகண்ணீர் கூரியவாளோடொக்கும்.
(*d*) வரவேண்டியது வழியில் நில்லாது.
(*e*) காட்டிலெறித்த நிலாவைப்போல.
(*f*) தன்வாயால் தானே கெடுவான்.
(*g*) கொடுத்தார்க்குக் குறையில்லை.
(*h*) உப்பிட்டவரை உள்ளளவும் நினை.

## Answer.

(*a*) வைத்ததனை வைப்பென் றுணரற்க தாமதனைத்
துய்த்து வழங்கி யிருபாலும் - அத்தகத்
தக்குழி நோக்கி யறஞ்செய்யி னஃதன்றே
எய்ப்பினில் வைப்பென் பது. (பழ-1.)

(*b*) சிறிய பொருள்கொடுத்துச் செய்த வினையால்
பெரிய பொருள்கருது வாரே - விரிபூ
விராஅம் புனலூர வேண்டயிரை விட்டு
வராஅல் வாங்கு பவர் (பழ-3.)

(*c*) தோற்றத்தாற் பொல்லார் துணையிலார் நல்கூர்ந்தார்
மாற்றத்தாற் செத்தா ரெனவலியார் - ஆட்டியக்கால்
ஆற்றா தவரழுத கண்ணீ ரவையவர்க்குக்
கூற்றமாய் வீழ்ந்து விடும் (பழ-13.)

(*d*) அங்கண் விசும்பி னகனிலாப் பாரிக்கும்
திங்களுந் தீங்குறுதல் காண்டுமால் - பொங்கி
அறைப்பா யருவி யணிமலை நாட
உறற்பால யார்க்கு முறும் (பழ-13.)

(c) தாமகத்தா னட்டுத் தமரொன் றுழுகியக்கால்
நாணகத்துத் தாமின்றி நன்கொழுகா ராயினென்
மானமர் கண்ணாய் மறந்தும் பரியலரால்
கானகத் துக்க நிலா (பழ-35.)

(*f*) பொல்லாத சொல்லி மறைந்தொழுகும் பேதைதன்
சொல்லாலே தன்னைத் துயர்ப்படுக்கும் - நல்லாய்
மணலுண் முழுகி மறைந்து கிடக்கும்
நுணலுந்தன் வாயாற் கெடும். (பழ-16.)

(g) பல்லாண்டு மீண்டிப் பழுதாய்க் கிடந்தது
வல்லான் றெரிந்து வழங்குங்கால் - வல்லை
உளநெடிது கொண்ட உறுஅ தறுமோ
குளநெடிது கொண்டது நீர். (பழ-21.)

(h) நன்கோன் றறிபவர் நாழி கொடுப்பவர்க்
கென்று முறுதியே சூழ்க எறிதிரை
சென்றுலாஞ் சேர்ப்ப வதுபோல நீர்போயம்
ஒன்றிரண்டாம் வாணிக மில. (பழ-10.)

## 4. Question.

அடியில்வரும் வினாக்களுக்குப் பாடபுத்தகத்திலுள்ள பாட்டைப் போல வசனமெழுதிக்காட்டுக.

(a) கூலிக்குச்செய்துண்ணுமாறு எது ?

(b) ஒருபக்கம நீரொழுகப் பாலொழுகுமாறு எது ?

(c) சுமையொடு மேல் வைப்பாமாறு எது ?

(d) காய்பெற்ற தெங்கப்பழம் என்பது யாது ?

(e) சுரத்திடைப்பெய்த பெயல் எது ?

(f) குன்றின் மேலிட்ட விளக்கு எது ?

(g) கொல்லிமேற் கோட்டுவைத்தார் யார் ?

(h) இருதலைக்கொள்ளிபோல்வார் யார் ?

## Answer.

(a) மறுமைப்பயனை ஆராயாமலும், கொடுத்தற்குத் தகுதியுடையாரைப் பகுத்தறியும் உணர்வு சிறிதுமில்லாமலும் தமது புகழை மாத்திரங் கருதிக்கொடுக்கின்றவர்களுடைய கொடையானது கூலிக்குச்செய்துண்ணுமாறு ஆகும். (பழ-18.)

(b) அரசனானவன் நீதிமுறையைத்தெரிந்து செல்வமுடையாருக்கும், வறுமையுடையாருக்கும் சிறிதும் முறைமையில மாறுபடாதவனாகி நேர்மையாக ஒத்து நடத்தல்வேண்டும். அப்படி முறைமையை அறிந்து நேர்மையாக நடவாதிருத்தல் அச்செய்கையானது ஒருபக்கம் நீரொழுகப் பாலொழுகுமாறு ஆகும். (பழ-12.)

(c) சிறந்த போகங்களை யனுபவித்து நடக்கின்ற செல்வமுடையவர் தருமத்தைச்செய்து அருளுடையாராகக் கடவர். அவ்வருளுடையராதலே சுமையொடு மேலவைப்பா மாறுபோலும். (பழ-6.)

(d) பிறர்க்குக்கொடுத்தலுந், தானனுபவித்தலும் அறிந்துசெய்யாதவன் அடைந்த ஒலிக்கின்ற முரசையுடைய செல்வமாகிய அப்பொருளானது காய்பெற்ற தெங்கம்பழம் ஆகும். (பழ-7.)

(e) ஒளித்துவைக்கும் இயல்புடையார் சேர்த்துவைத்தபொருள்கள் (பகைவர்களைத்) துரத்தும் இயல்புள்ள அரசர்களுக்கே அனுபவிக்கப்படும் பொருள்களாகும். அதுவல்லாமலும் சாருங்காலத்திலும் அப்பொருள்கள் உதவியாகமாட்டா. (ஆதலால்) வறுமைத

துன்ப மிகுந்தவர்களுக்கு உதவும்படி சிறிதுபொருளைத் தருதல் சுரத்திடைப்பெய்த பெயல் ஆகும். (பழ-22.)

(*f*) அறிவுடையோர் கோபிக்கும்படி பெருங்குற்றங்களைப் பல நாளும் மிகுதியாகச் செய்துவந்தாலும் அவற்றுள் எவ்வளவு சிறிதாயினும் ஒருகுற்றமும் கீழ்மக்களிடத்துத்தோன்றமாட்டாது. உயர் மக்களிடத்துண்டாகும் குற்றம் ஒன்றேயானாலும் அக்குற்றம் குன்றின்மேலிட்டவிளக்கு ஆகும். (பழ-24.)

(*g*) அடங்கியொழுகித் தம்மிடத்துள்ள ஐம்பொறிகளைப்புறத்திற் செல்லவிடாமற் காத்துத் தாம் செய்யத்தொடங்கிய ஒழுக்கங்களை மன, மொழி, மெய்களால் மாட்சிமைப்பட்டு இவ்வுலகில் உடம்பு கிடக்க இறந்துசெல்லும் மறுமையுலகத்துக்கு உறுதியாகிய காவலை இளமைப்பருவத்தில் செய்துகொண்டவரோ கொல்லிமேற் கோட்டு வைத்தார் ஆவார். (பழ-28.)

(*h*) பெரிய நட்பினரிடத்தும் அந்நட்பினருக்குப் பகையாயினாரிடத்தும் வேறுபாடில்லாமற்போய் (இருவரில் ஒருவரிடத்து அன்பு) நீங்கினார்போல (அவ்வொருவருடைய செய்தியை மற்றவரிடத்தில்) சொல்லி அவ்விருவரில் ஒருவரிடத்து (மனம்) பொருந்தி ஒருமைப்பாடில்லாதவரோ இருதலைக்கொள்ளியாவார். (பழ-36.)

## 5. Question.

(*a*) ஆடூஉ முன்னிலை, மகடூஉ முன்னிலையென்றலென்ன? வகைக்கோருதாரணம் எழுதுக.

(*b*) (1) அமையொடு வேய்கலாம் வெற்ப. (2) விரிபூ விராஅம் புனலூர. (3) வளியாற்றிரையுலாம் வாங்குநீர்ச்சேர்ப்ப. இவை எந்தெந்த நிலத்தலைவனைக் குறிக்கு முன்னிலை?

(*c*) நிலமெத்தனை? அவையெவை? விபரம்வேண்டும்.

## Answer.

(*a*) ஒரு ஆண்மகனை முன்னிலையாக நிறுத்திக்கூறப்படுஞ் செய்யுள் — ஆடூஉ முன்னிலையாம். ஒருபெண்மகளை முன்னிலையாக நிறுத்திக் கூறப்படுஞ் செய்யுள் — மகடூஉ முன்னிலையாம்.

உதாரணம்.

பெரியார்க்குச் செய்யுஞ் சிறப்பினைப் பேணிச்
சிறியார்க்குச் செய்துவிடுதல் - பொறிவண்டு
பூமே லிசைமுரலு மூர வதுவன்றோ
நாய்மேற் றவிசிடு மாறு. (பழ-37) } ஆடூஉ முன்னிலை.

வினைப்பய னொன்றின்றி வேற்றுமைகொண்டு
நினைத்துப் பிறர்பனிப்பச் செய்யாமை வேண்டும்
புனைப்பொன் னவிர்சுணங்கின் பூங்கொம்பரன்னாய்
தனக்கின்னா வின்னா பிறர்க்கு. (பழ-14.) } மகடூஉ முன்னிலை.

(*b*) (1) குறிஞ்சிநிலத் தலைவனைக்குறித்தது (2) மருதநிலத் தலைவனைக்குறித்தது (3) நெய்தனிலத் தலைவனைக்குறித்தது.

(c) முல்லைநிலம், குறிஞ்சிநிலம், மருதநிலம், நெய்தநிலம், பாலைநிலம் என ஐந்தாம்.

விபரம்=காடும் காட்டைச்சார்ந்த நிலமும் முல்லைநிலம். மலையும் மலையைச்சார்ந்தநிலமும் குறிஞ்சிநிலம். வயலும் வயலைச்சார்ந்த நிலமும் மருதநிலம். கடலும் கடலைச்சார்ந்த நிலமும் நெய்தநிலம். வனாந்தரமும் வனாந்தரத்தைச் சார்ந்தநிலமும் பாலைநிலம்.

## 6. Question.

(a) அடியில்வரும் உயிரளபெடைகள் இன்னின்னவகையைச் சேர்ந்தவெனத் தெளிவாயெழுதி, நன்னூல் சூத்திரமுஞ்சொல்லுக. (1) விராஅம் புனலூர (2) வராஅஅல் வாங்குபவர். (3) இசைவ கொடுப்பதூஉம் (4) இல்லென்பதூஉம். (5) தராஅதறுமோ? (6) முழுவதூஉம் கற்றனமென்று.

(b) இவ்வளபெடைகளன்றி உயிரளபெடையில் வேறுவகையுமிருந்தால் உதாரணத்தோடும் விளக்குக.

(c) ஒற்றளபெடை யென்பதென்ன? உதாரணமென்ன? நன்னூல் சூத்திரமென்ன?

(d) உயிரளபெடைக்கும், ஒற்றளபெடைக்கும் மாத்திரை யென்ன? மாத்திரையைக்குறிக்குஞ் சூத்திரமென்ன?

## Answer.

(a) (1) விராஅம் (2) வராஅஅல் (4) பதூஉம் (5) தருஅ இவை செய்யுளிசை யளபெடைகளாம். (3) கொடுப்பதூஉம் (6) முழுவதூஉம் இவ்விரண்டும் இன்னிசையளபெடைகளாம்.

"இசைகெடின்மொழிமுதல் இடைகடை நிலைநெடில், அளபெழும் அவற்றவற் றினக்குறில்குறியே" (நன்-எழு-36-சூ.)

(b) தழீஇக்கொண்டான், தீமையை ஒரீஇ, எனச்சொல்லிசையளபெடைகளும்; ஆடூஉ முன்னிலை, மகடூஉ முன்னிலை என எழுததுப்பேறு அளபெடைகளும் உள.

(c) ங், ஞ், ண், ந், ம், ன், வ், ய், ல், ள், ஃ இப்பதினோரெழுத்தும் குறிற்கீழும் குறிலிணைக்கீழுமாக முறையே இடையிலுங், கடையிலும் அளபெடுப்பதாம். (உதாரணம்.) இலங்ங்கு, எங்ங்கு, மடம்ம், அம்ம்.

"ஙஞணநமன வயலளஆய்தம், அளபாங்குறிலிணை குறிற்கீழ் இடைகடை, மிகலேஅவற்றின் குறியாம்வேறே" (நன்-எழு-37-சூ.)

(d) உயிரளபெடைக்கு மாத்திரைமூன்று. வராஅஅல் ஈரளபெடுத்ததால் மாத்திரை நான்கு, ஒற்றளபெடைக்கு மாத்திரை ஒன்று.

"மூன்றுயிர் அளபிரண் டாம்நெடில் ஒன்றே - குறிலோடை ஐஔக்குறுக்கம் ஒற்றள-பளைஒற் றிஉக்குறுக்கம் ஆய்தம் - கால்குறள் மஃகான் ஆய்தமாத்திரை" (நன்-எழு-சூ-44.)

## 7. Question.

அடியில்வருந் தொடர்மொழிகளுக்கு அருத்தமெழுதிக், கீற்றிட்டமொழிகள் இன்ன இன்ன ஆகுபெயரெனவும் ஞாயத்தோடு எழுதுக.

(1) ஆய்ந்தவறிவின ரல்லாதார் பல்லுரைக்கு.

(2) நிரப்பிடும்பை மிக்கார்க்குநவ வொன்றீதல்.

(3) பொல்லாதசொல்லி மறைந்தொழுகும் பேதை.

(4) வயமாப்போல் ஆலித்துப்பாயும் அலைகடற் றண்சேர்ப்ப

(5) வசையன்று வையத்தியற்கை.

(6) தனக்கின்னா வின்னா பிறர்க்கு.

(7) புனத்த குடிஞையிரட்டும் குளிர்வரை நாட.

(8) நன்கொன்றறிபவர் நாழிகொடுப்பவர்க்கு.

## Answer.

(1) ஆராய்ந்தறிந்த அறிவுடையார் அல்லாத மூடர்கள் (தம்மை நிந்தித்துக்கூறும்) பல இழிசொற்பொருளுக்கு. "உரை" யென்னுஞ் சொல்லின்பெயர் அச்சொல்லாலறியப்படும்பொருளை யுணர்த்துவதால் சொல்லாகுபெயர்.

(2) வறுமையினது துன்பமிகுந்தவர்களுக்கு உதவும்படி சிறிது பொருளைத்தருதல். "ஒன்று" என்னும் வரையறைப் பண்புப்பெயர் அவ்வளவைக்கொண்ட பொருளையுணர்த்துவதால் எண்ணலளவையாகுபெயர்.

(3) (புறத்திலே ஒருவர்மேல்) குற்றத்தைச்சொல்லி (கண்டவிடத்தில் அவர்க்கு இனியவனாகாமல்) மறைந்துநடக்கும் அறிவில்லான். "பேதை" யென்னும் அறியாமையை யுணர்த்தும் பண்புப்பெயர் அவ்வறியாமையையுடைய ஆண்மகனை யுணர்த்துவதால் பண்பாகுபெயர்.

(4) சிங்கம்பாய்வதுபோல ஒலியாநின்று அலைகள்பாய்கின்ற கடலினது குளிர்ந்த துறையையுடையானே. "வயமா" என்னுஞ் சிங்கத்தின்பெயர் அதன் தொழிலாகிய பாய்ச்சலை யுணர்த்துவதால் முதலாகுபெயர்.

(5) பழிப்புச்சொல்லன்று, உலகத்தாருக்குரிய இயற்கையேயாம். "வையம்" என்னும் உலகத்தையுணர்த்தும் பெயர்ச்சொல் அவ்வுலகத்திலுள்ள மனிதரையுணர்த்துவதால் இடவாகுபெயர்.

(6) தனக்குத் துன்பந்தருஞ்செயல்கள் மற்றவர்க்குந் துன்பஞ்செய்வனவாகும். "இன்னா" வென்னும் பண்புப்பெயர் தனக்குக் காரணமாகிய செயலையுணர்த்துவதால் காரியவாகுபெயர்.

(7) வயலிடத்துள்ள கோட்டான்கள் ஒலிக்கின்ற குளிர்ந்த மலையைச்சேர்ந்த நாட்டையுடையானே. "வரை" யென்னுங்கனுவின்

பெயர் சினையாகுபெயராய் மூங்கிலையுணர்த்த அம்மூங்கில் தானியாகுபெயராக மலையையுணர்த்தியது. ஆதலால் இது இருமடியாகுபெயர்.

(8) ஒருவர்செய்த உபகாரத்தை மறவாதிருக்கக் கருதுவோர் தாழிதானியங் கொடுப்பவாக்கு "தாழி" யென்னும் முகத்தல் (=மொள்ளுதல) அளவையின்பெயர் அவ்வளவைக்கொண்ட தானியத்தை யுணர்த்துவதால தானியாகுபெயர்.

## 8 Question.

(a) எதுநேரும், எதுநேராது? (b) எது இடர்ப்படுக்கும், எது இடர்ப்படுக்காது? (c) எது எது இலலாதது? (d) எது தோன்றாது? (e) எதுநன்று? (f) எது நீங்கிவிடும்? (g) எவரெவர் இலர்? (h) எது அரிது? பாடபுத்தகத்தி லுள்ளனபோலக்கூறுக.

## Answor

(a) கற்றேயுந் தேயாதுசொல (பழ-17.)

(b) புன்சொல் இடர்ப்படுக்கும, அதுவன்றி இன்சொல் இடர்ப்படுதில (பழ-9.)

(c) நகைகொன்றன செல்வுலகமில். (பழ-4.) நீர்போயும் ஒன்றிரண்டாம் வாணிகமில். (பழ-10) முதலிலார்க்கூதியமில் (பழ-30.) நாய்வால் எனறுநிருந்துதலில் (பழ-38.)

(d) பேதைக்குரைத்தாலும் தோன்றாதுணர்வு. (பழ-39.)

(e) கற்றலிற் கேட்டலேநன்று. (பழ-32.)

(f) அறஞ்செய்ய அல்லவை நீஙகிவிடும். (பழ-29.)

(g) கடிதுயிற் கல்விடுவாரிலர். (பழ-19.) கொடுத்தேழையாயினரிலர். (பழ-20.) பசுக்குதவிற்குத்துவாரிலர். (பழ-26.)

(h) தெளியாதனத தேற்றலரிது (பழ 15)

## 9 Question.

" திங்களுக்கீங்குறுதல் காண்டும்" என்பதின் பூர்வகதையென்ன?

## Answer

துருவாச முனிவருடைய சாபத்தால் இந்திரனுடைய செல்வமெல்லாம் திருப்பாற்கடலில் ஒளித்தன. இதையறிந்த இந்திரனும தேவர்களும் வேண்டிக்கொள்ளவே திருமால மந்தரகிரியை மத்தாக நாட்டி, வாசுகியென்னும் பாம்பைக் கயிறாகப்பூட்டி, சந்திரனைத் தாணாகநிறுத்து, ஓடதியென்னும பூண்டுகளை நிறைத்து, தேவர்களும் அசுரர்களும் இருபக்கமும் வலிக்கச்செய்து அப்பாற்கடலைக்கடைந்து அமுதமெடுத்தனர். பின்பு அவ்விறைவனே மோகினியவதாரமாகி அசுரர்கள் தங்களுக்குள் தாங்களே மடியும்படிசெய்வித்து அந்த அமுதத்தைத் தேவர்களுக்கு பங்கிடுகையில் மடியாதுநின்ற ஓரசுரன் தேவர்களைப்போல உருவெடுத்து அவர்களுடன்கலந்து அமுதத்தைவாங்கி உண்ணக்கருதுகையில் சந்திரனும, சூரியனும் திரு

மால்பால் இவன் அசுரனென்றுவெளிப்படுத்தினார்கள். உடனே அவ்விறைவன் அமுதம்பகிர்ந்த அகப்பையால் அவ்வசுரன்தலையை வாங்கினார். அத்தலை இராகுவென்னும் பாம்பாகவும், உடல் கேதுவென்னும் பாம்பாகவும் உருக்கொண்டு தம்மைக்காட்டிய குற்றத்திற்காகக் கிரகணகாலத்தில் சந்திர சூரியரைவிழுங்கி உமிழ்கின்றன என்பதாம் (பழ-31.)

## 10. Question.

அடியில்வரும் பழமொழிப் பாட்டுகளின் கருத்தடங்கிய பாட்டுக்களை உமது பாடபுத்தகத்திலிருக்கும் குறள்வெண்பாவி லெடுத்தெழுதுக.

(1) தங்குற்றம் நீக்கல ராகிப் பிறர்குற்றம்
எங்கேனுந் தீர்த்தற் கிடைப்புகுதல்-எங்கும்
வியனுலகில் வெள்ளாடு தன்வளி தீரா
தயல்வளி தீர்த்துவிடல் (பழ-40.)

(2) நன்கொன் றறிபவர் நாழி கொடுப்பவர்க்
கென்று முறுதியே சூழ்க எற்றிறை
சென்றுலாஞ் சோப்ப வதுபோல நீர்போயும்
ஒன்றிரண்டாம் வாணிக மில் (பழ-10.)

(3) தெற்ற வொருவரைத் தீதுரை கண்டக்கால்
இற்றே யவரைத் தெளியற்க-மற்றவர்
யாவரே யாயினு நன்கொழுகார் கைக்குமே
தேவரே தின்னினும்வேம்பு (பழ-34.)

(4) வினைப்பயனொன்றின்றி வேற்றுமை கொண்டு
நினைத்துப் பிறர்பனிப்பச் செய்யாமை வேண்டும்
புனப்பொன வவிர்சுணங்கிற் பூங்கொம்ப ரன்னாய்
தனக்கின்னா வின்னா பிறர்க்கு (பழ-14.)

## Answer.

(1) ஏதிலார் குற்றம்போற் றங்குற்றங் காண்கிற்பிற்
றீதுண்டோ மன்னு முயிர்க்கு (குறள்-29.)

(2) தினைத்துணைநன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வார் பயன்றெரி வார் (குறள்-16.)

(3) மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தந்
தகுதியான் வென்றுவிடல் (குறள்-27.)

(4) மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்
அறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு (குறள்-32.)

## 11. Question.

(a) "முதலிலார்க் கூதியமில்" முதலெது ? ஊதியமெது ?

(b) கொல்லிமலை யெங்குள்ளது ? யாருடையது ?

(c) தக்குழிநோக்கி அறஞ்செய்ய வேண்டியதென் ?

(d) பூத்துக்காயாமரம் எவை ? விதைத்தாலு முளையாதவித்தெது ?

(e) தோற்றம் அரிதாயமக்கட்பிறப்பென்றது என்ன சிறப்பென்னே ?

(f) முரசுடைச்செல்வ மென்பதென்ன ?

## Answer.

(a) முற்பிறப்பிற்செய்த நல்வினையாகிய புண்ணியமே முதலாகும். இப்பிறப்பிலே யனுபவிக்கும் செல்வமே அதனது ஊதியமாகும்.

(b) மலையாளத்திலுள்ளது. சோழனுடையது.

(c) தகுதியில்லாத தீயோர்க்குப் பொருளைக்கொடுத்தால் அப்பொருளைக்கொண்டு அத்தீயோர் செய்யுந் தீமைககாரியங்கள் கொடுத்தோனையுஞ் சார்ந்ததால் தகுந்தவர்களுக்கே கொடுக்கவேண்டும். அதனால்வரும நல்வினையின்பயன் கொடுத்தோனுக்குமுண்டாம்.

(d) பாதிரிமரம் முதலியனவாம். பதர் முதலியனவாம்.

(e) மக்களாகப் பிறப்பவர் நல்வினையினால் தேவர்களாகவும், தீவினையினால் நரகர்களாகவும் இருவகைப்பற்றையும் முற்றுந்துறந்த வழி வீட்டுலகததாராகவும், இருப்பராதலால் எல்லாபபிறப்பினும் மக்கட்பிறப்பு சிறந்ததாகும். ஆதலால்தோற்றமரிதாய மக்கட்பிறப்பென்று சிறப்புகூறப்பட்டது.

(f) பெருஞ்செல்வததினர் காலை, நண்பகல், மாலைகளில் தமது மாளிகையில் முரசுகொட்டுவிப்பர். அதற்குக்காரணம் அவருடைய செல்வம. ஆதலால் முரசுடைச்செல்வமென்பது பெருஞ்செல்வ மென்பதைக் குறிக்கவந்த ஓர்வகைக்குறிப்பு.

## 12. Question.

(a) "மக்கட்பிறப்பு" இதில் மக்களென்பதுபோலப் பன்மையாகவேவரும பெயாசசொல நான்கெழுதுக.

(b) "சென்றுலாஞ்சேர்ப்ப" "விராஅம் புனலூர" இவற்றில் உலாம், விராஅம் எனபன என்னசொற்கள் ? எப்படியிருக்கவேண்டும ? இப்படியானதற்குச் சூத்திரமென்ன ?

(c) "நீர்போயும் ஒன்றிரண்டாம் வாணிகமில்" "என்றும்" "வழக்கலுங், தய்ததலும்' இவற்றிலுள்ள உம்மைகளுக்குப்பொருளெழுதுக. உம்மை எததனைப்பொருளில்வரும் ? சூத்திரஞ்சொல்லுக.

(d) (1) "செய்யாமைவேண்டும்" இதில் இருதிணை மூவிடப் பொதுச்சொல் எது ? அதுபோல நான்கெழுதுக.

(2) "பூங்கொம்பரன்னாய்" இதிற்போலியெது ? அதுபோல மூன்றெழுதிச சூததிரமும் அதிலுள்ள மற்றப்போலிகளுக்குதாரணமும் வரைக.

(3) "வாங்கீர்ச்சேர்ப்ப" வாங்குநீர் இங்கு என்னசொல்.

(4) "வயமாப்போல்" என்றது எதை ? வயத்தின் சிறப்பென்ன ?

(5) அலைகடல், "அலைக்கடல்" இவற்றின்புணர்ச்சி பேதமென்ன? பொருளென்ன?

(6) "வாய்ச்சொல்லும் பொல்லார்" இதில் வாய்ச்சொல் எத்தனைப்பொருளால் மயங்கும்.

(7) "பேதைக்குரைத்தாலும்" இதில் பேதையென்பதுபோலச்சொல்லால் அஃறிணையும் பொருளால் உயர்திணையுமானசொல் ஐந்தெழுதுக.

## Answer.

(a) மாந்தர், மன்பதை, பலர், சிலர்.

(b) பெயரெச்சம். இவை உலாவும், விராவும் என்றிருக்கவேண்டும். "செய்யும் என்னெச்சவீற் றுயிர்மெய் சேறலும் - செய்யுளுள் உம் உந்தாகலுமுற்றேல் - உயிரும் உயிர்மெய்யும் ஏகலுமுளவே" என்பது சூத்திரம். (வினை-22-சூ.) இதனால் ஈற்றுயிர்மெய்கெட்டது.

(c) முன்னது இறந்ததுதழீஇய எச்சவும்மை. பின்னது முற்றும்மை. மற்றவையிரண்டும் எண்ணும்மை. உம்மை எட்டுப்பொருளில்வரும் "எதிர்மறை சிறப்பையம் எச்சமுற்றளவை - தெரிநிலை ஆக்கமோடும்மை எட்டே" எனபது சூத்திரம் - (இடை-6-சூ.)

(d) (1) வேண்டும். வேறு, இல்லை, உண்டு, தகும். என்பன.

(2) கொம்பர். வண்டு=வண்டர். சுரும்பு=சுரும்பர். பொதும்பு=பொதும்பர் என்பன. "மகர இறுதி அஃறிணைப்பெயரி னகரமோடுறழா நடப்பன வுளவே" என்பது சூத்திரம். (எழு-67-சூ.) மரம்=மரன். சாம்பல்=சாம்பர். மதிள்=மதில். முதலியவாம்.

(3) அன்மொழித்தொகைப் பெயர்ச்சொல். வளைந்தநீரையுடையது=கடல்.

(4) சிங்கத்தை. எல்லாமிருகங்களையும் வெல்லவல்லது. வயம்=வெற்றி.

(5) அலைகடல்=அலைகின்ற கடல். வினைத்தொகை நிலைத்தொடராகும். அலைக்கடல்=அலையையுடைய கடல். உம்-வே. உருபும் பயனுமுடன் றொக்கதொகைநிலைத்தொடராகும்.

(6) வாயாற்சொல்லுஞ்சொல், வாயினின்று உண்டாகுஞ்சொல், வாயினதுசொல் என மூன்றுபொருளால் மயங்கும்.

(7) கோ, வேள், தோன்றல், தையல், பெண்.

## 13. Question.

பின்வரும் பதங்களுக்குப் பகுபத முடிபுகூறுக. கொள்ளி, பாத்து, நல்கூர்ந்தவர், துப்புரவு ஆட்டியக்கால், பொல்லார், பிறிது, யாப்பு, நாறுத, நமர், வள்ளன்மை, நோற்பது.

## Answer.

கொள்ளி=(தீயைக் கொள்ளுவது என்றால்) கொள்-பகுதி, ள்-சந்தி, இ-வினைமுதற்பொருண்மை விகுதி. (தீயாற் கொள்ளப்படுவது என்றால்) இ செயப்படுபொருண்மை விகுதி.

பார்த்து=(பகு என்பதன் மரூஉவாகிய) பா-பகுதி, த் சந்தி, த்-இறந்தகால இடைநிலை உ-வினையெச்சவிகுதி.

நல்கூர்ந்தவர்=நல்கூர்-பகுதி, த் - சந்தி, த் - இறந்தகால இடைநிலை, அ-சாரியை, வ்-சந்தி, அர்-பல்லோர்படர்க்கை விகுதி, சந்தியாகிய தகரம் நகரமானது மெலித்தல் விகாரம்.

துப்புரவு=து-பகுதி, ப்-சந்தி, பு-புடைபெயர்ச்சிவிகுதி, உரவு-விகுதிமேல்விகுதி, உகரக்கேடுசந்தி.

ஆட்டியக்கால்=ஆடு-தன்வினைப்பகுதி, பகுதிவிகாரப்பட்ட ஆட்டு-பிறவினைப்பகுதி, இன்-சாரியை, உகரக்கேடுசந்தி, சாரியையீற்று னகரம் கடைக்குறைவிகாரம், அ-சாரியை, யகரககரமெய்கள் சந்தி, கால் எதிர்கால வினையெச்சவிகுதி.

பொல்லார் பொல்லா-பகுதி, ஆர் - பலர்பாற்படர்க்கை விகுதி, விகுதி ஆகாரம முதற்குறை விகாரம். பகுதியீற்று ஆகாரம் கடைக்குறையெனினும் அமையும்.

பிறிது=பிற-பகுதி, இ-சாரியை, பகுதியீற்று அகரம் கடைக்குறைவிகாரம், து-ஒன்றன்படர்க்கை விகுதி.

யாப்பு=யா பகுதி, ப சந்தி, பு-புடைபெயர்ச்சிவிகுதி.

மாறுத=நாறு-பகுதி, ஆ எதிர்மறைவிகுதி, உகரகேடுசந்தி, ஆ வினைத்தொருபகுதி த்-எழுத்துப்பேறுகிய விரித்தல விகாரம், அ பெயரெச்சவிகுதி.

நமர்=நாம-பகுதி, அர்-பல்லோர்படர்க்கைவிகுதி, ஆகாரம் அகரமானது குறுக்கலவிகாரம.

வள்ளன்மை வள் பகுதி, அல் - பகுதிப்பொருள்விகுதி, லகரம் னகரமானது சந்தி, மை-விகுதிமேல் விகுதி.

நோற்பது=நோல-பகுதி, ப் எதிர்கால இடைநிலை, லகரம் றகரமானதுசந்தி, அ-சாரியை, து-புடைபெயர்ச்சி விகுதி.

## 14 Question.

(1) இருபாலென்ன? (2) அறமெத்தனை? (3) பிறப்பெத்தனை? (4) செல்வமெத்தனை? (5) முத்துப்பிறப்பிடமெத்தனை? (6) வினையெத்தனை? (7) [illegible]பாலென்ன? (8) காக்கும ஐந்தென்ன? (9) யாட்சிமைப்பட வேண்டிய மூன்றென்ன?

## Answer.

(1) இம்மை, மறுமை.

(2) இல்லறம், துறவறம் என இரண்டு.

(3) தேவர், மக்கள், விலங்கு, பறவை, நீர்வாழ்வன, ஊர்வன, தாவரம் என ஏழு.

(4) கல்விச்செல்வம், பொருட்செல்வம் என இரண்டு.

(5) யானைத்தந்தம், பன்றிக்கொம்பு, இப்பி, பாக்குமரம், வாழை, நந்து, சங்கு, மீன்தலை, கொக்குத்தலை, தெண்கன்னுசுது, மூங்கில்,

கமுகு, மூங்கில். பசுவின்பல், பாம்பு, மேகம், சந்திரன், உடம்பு, முதலே என இருபதிடத்திற் பிறக்கும்.

(6) நல்வினை, தீவினை என இரண்டு.

(7) முடி, கொண்டை, சுருள், பனிச்சை, குழல் என ஐந்து. முடி — உச்சியில் முடிப்பது. கொண்டை—பக்கத்தில் முடிப்பது. சுருள்—பின்னே செருகுவது. பனிச்சை—பின்னால் பின்னிவிடுவது. குழல் = சுருட்டிமுடிப்பது.

(8) மெய், வாய், கண், மூக்கு, செவி, எனப்பொறி ஐந்து.

(9) மனம், வாக்கு, காயம், எனக்கரணம் மூன்று.

| 15 Question. Answer. | 15. Question Answer. |
|---|---|
| கூற்று = யமன் | மாண்டார் = பெரியோர் |
| அயிர் = சிறியபொருள் | குடிஞை = கோட்டான் |
| ஓம்புதல் = பாதுகாத்தல் | கடிஞை = பிட்சாபாத்திரம் |
| நுகர்தல் = அனுபவித்தல் [இல | ஐம்பால் = ஐந்துவகைக்கூந்தல் |
| அமை = உட்டொளையில்லா மூங் | உலப்பு = அழிவு |
| உழந்தல் = வருந்துதல் | விசும்பு = ஆகாயம் |
| பழஞ்செய் = பழவயல் | ஏமம் = காவல் |
| தோற்றம் — பிறப்பு | கனறுதல் — கோபித்தல் |
| தணிப்பு — நீக்கம் | துப்புரவு = உணவு |
| சுணங்கு — தேமல் | அறைகு = சொல்லுவேன் |
| நீராழி — நீரையுடையகடல் | வெற்பு = மலை |

## நீதிநெறி விளக்கம்.

---

### 1. Question.

(a) நீதிநெறி விளக்கமென்பதற்குப் பொருள் எழுதுக.

(b) இலக்கணக்குறிப்பு பூரணமாய்ச் சொல்லுக.

(c) (1) இந்நூலாசிரியர் யார்? (2) அவர்செய்த வேறு பிரபந்தங்களெவை

(d) ஆசிரியர் சரித்திரத்தை பத்துவரிக்கு மேற்படாமல் வரைக.

### Answer.

(a) நீதியாகிய நெறியைவிளக்கும் தீபம்போல்வதாகிய நூல் என்பது பொருள்.

(b) நீதி - அஃறிணைப் படர்க்கைப் பண்புப்பெயர்ச் சொல். நெறி - இதுவுமப்படியே. விளக்கம் - அஃறிணை ஒன்றன் பாற்படர்க்கைத் தொழிலாகு பெயராகிய காரணப்பெயர்ச்சொல் விளக்கு பகுதி, அம் தொழிற்பெயர் விகுதி, ககரமாகிய வலித்தல் விகாரம். ... மூன்றுசொல்லும் சந்தியாதி முறையே இருபெயரொட்டுப் பண்புத்தொகை நி

லைத்தொடராகவும், பின்னது இரண்டாம்வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகைநிலைத்தொடராகவும் புணர்ந்த நீதிநெறிவிளக்கமென்பது நூலுக்கு இரண்டாம் வேற்றுமைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர்ச்சொல்லாயிற்று. என்பது இலக்கணம்.

(c) (1) குமரகுருபர சுவாமிகள்.

(2) திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா, மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ், மீனாட்சியம்மை இரட்டைமணிமாலை, மீனாட்சியம்மை குறம், மதுரைக் கலம்பகம், பண்டார மும்மணிக்கோவை, சிதம்பரச் செய்யுட்கோவை, சிதம்பர மும்மணிக்கோவை, சிவகாமியம்மை இரட்டைமணிமாலை, சகலகலாவல்லிமாலை, முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ், காசிக்கலம்பகம், திருவாரூர் நான்மணிமாலை, தனிப் பாடல்கள் முதலியவாம்.

(d) குமரகுருபரசுவாமிகள் பாண்டிநாட்டிலே ஸ்ரீவைகுந்தமென்னும் திருப்பதியில் வேளாளர் குலத்தில் சைவசமயத்தில் ஊமையாகப்பிறந்து திருச்செந்தூரையடைந்து, அவ்விடத்திலுள்ள முருகக்கடவுளால் அம்மூமை நீங்கப்பெற்றுப் பின்பு மதுரையிற்சென்று சிலநாள்வசித்துத் தருமபுர மடாலயத்தைச் சார்ந்து, அங்குள்ள மாசிலாமணி ஞானசம்பந்ததேசிகரை ஞானாசிரியராக அடைந்து அவரால் மூவகைதீட்சையும் ஆசாரியாபிஷேகமுஞ் செய்யப்பெற்று அங்கிருந்து காசிக்குச்சென்று சிவதரும பரிபாலனம் நடத்தி ஓர் மடாலயமுங்கட்டி நீதிநெறியாகிய இந்நூலையும்பாடிச், சிலநாளிருந்து அகண்டபரிபூரண சிவத்தில் ஒடுங்கினர்.

## 2 Question

(a) (1) இந்நூல் எதைக்குறித்துச் சொல்லுகின்றது? (2) எத்தனைச் செய்யுளுடையது?

(b) (1) இந்நூல் முதனூலா? வழிநூலா? (2) எத்தனைகாலத்துக்கு முற்பட்டது?

(c) இது எவ்வகைப்பாவினாற் செய்யப்பட்டது.

## Answer

(a) (1) அறம், பொருள், இன்பம், என்னும் இவற்றினிலக்கணமும், இவற்றின் பாகுபாட்டினிலக்கணமுங் கூறுகின்றது. (2) 100-செய்யுட்களையுடையது.

(b) (1) முதனூல். (2) ஏறக்குறைய (200) வருஷத்துக்கு முற்பட்டது.

(c) பழமொழியைப்போலப் பெரும்பாலும் நேரிசைவெண்பாவாலும், சிறுபான்மை இன்னிசை வெண்பாவாலும் செய்யப்பட்டது.

## 3. Question

அடியில்வரும் விஷயங்களுக்குச் செய்யுளெழுதுக.

(a) பொன்மலர் நாற்றமுடைத்துபோலும். இருப்பது யாது?

(b) சலியாத கற்பதருவைப்போல்வார் யார் ?

(c) கருமமே கண்ணாயினார் யாது செய்வர் ?

(d) பலராலிகழப்படான் யார் ?

(e) அறிவு என்று சொல்லப்படுவது எது ?

## Answer.

(a) எத்துணைய வாயினுங் கல்வி யிடமறிந்
துய்த்துணரா வில்லெனி னில்லாகும் - உய்த்துணர்ந்தும்
சொல்வன்மை யுண்டெனி னொன்றா மஃதுண்டேல்
பொன்மலர் நாற்ற முடைத்து. (நீதி-2.)

(b) கண்ணேக் கரும்பா நகைமுகமே நாண்மலரா
இன்மொழியின வாய்மைமேய தீங்காயா-வண்மைப்
பலமா நலங்கனிந்த பண்புடையாரன்றே
சலியாத கற்ப தரு. (நீதி-10.)

(c) மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்டுஞ்சார்
எவ்வெவர் தீமையு மேற்கொள்ளார் - செவ்வி
அருமையும் பாரா ரவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணாயினார். (நீதி-12.)

(d) வள்ளன்மை யில்லாதான் செல்வத்தின் மற்றையோன்
நல்குரவே போலு நனிநல்ல - கொன்னே
அருளில னன்பிலன் கண்ணறைய னென்று
பலரா லிகழப்படான். (நீதி-16 )

(e) வஞ்சித் தொழுகு மதியிலிகாள் யாவரையும்
வஞ்சித்தோ மென்று மகிழன்மின் - வஞ்சித்த
எங்குமுள னொருவன் காணுங்கொ லென்றஞ்சி
அங்கங்குலைவ தறிவு. (நீதி-19.)

## 4. Question.

(a) யாராருக்கு யாரார் தெய்வமாவார் ?

(b) நாவின் புறநக்கிக் கொல்லுங் கவயமா எதற்குபமானம் ?

(c) செங்கட்புலியே றறப்பசித்தும் புல்லைத்தின்னாதது எதற்குபமானம் ?

(d) சிற்றுளியாற் கல்லுந்தகரும் கொல்லுலைக் கூடத்தால் தகரா. இதுபோலென்ன ?

(e) வெங்காரம் வெய்தெனினு நோய்தீர்க்கும சிங்கிகுளிர்ந்துங் கொல்லும். அதுபோல் யாது ?

## Answer.

(a) குலமகளுக்குக்கணவனும், புதல்வர்களுக்குத் தந்தைதாயாரும், தவசிகளுக்குக் குருவும, உலகத்தார் யாவருக்கும் அரனும் தெய்வமாவார். (நீதி-9.)

(b) தீயசெயலைச் செய்வாருடைய செல்வம் பெருகினாலும் தீய செயலால்வந்த செல்வங்கள் துன்பத்தைத்தரும். என்பதற்கு உபமானம். (நீதி-18.)

(c) நல்லொழுக்கத்தில் தவறாது நடப்பவர்கள் வறுமைவந்த காலத்திலும் தீய ஒழுக்கத்தைசெய்ய முயலார் என்பதற்கு.(நீதி-15)

(d) முற்றும் படித்தறிந்தவர் ஒருவருமில்லையெனக் கருதித் தாங்கள் முழுதும் படித்தறிந்தவராகச செருக்குக்கொள்ளா திருக்கக்கடவா. என்பதாம். (நீதி-4.)

(e) அன்புடையவர் கசப்பானசொல்லைச் சொல்லினாலும் அது இனிமையைத்தரும். அன்பில்லாதவர் மதுரமாகிய சொலலைச் சொல்லினும் அது விஷமேயாம். (நீதி-14.)

## 5. Question

பின்வரும் நீதிநெறிவிளக்கப் பாட்டுக்குத்தகுந்த செய்யுட்களைக் குறளிலிருந்தும், பழமொழியிலிருந்தும் நீபடித்தவற்றில ஒவ்வொன்று கூறுக.

இனியவ ரென்சொலினு மின்சொல்லே யின்னார்
கனியு மொழியுங் கடுவே - அனல்கொளுந்தும்
வெங்காரம் வெய்தெனினு நோய்தீர்க்கு மெய்பொடிப்பச்
சிங்கி குளிர்ந்துங் கொலும். (நீதி-14.)

## Answer.

இனிய வுளவாக வின்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று. (குறள்-13.)

புன்சொல்லு நன்சொல்லும் பொய்யின் றுணர்கிற்பார்
வன்சொல் வழியராய் வாழ்தலு முண்டாமோ
புன்சொல் விடர்பபடுப்ப தலலா லொருவனை
இன்சொல் விடர்ப்படுப்ப தில. (பழ-9.)

## 6. Question.

அடியில்வரும் செய்யுட்களில் (1)க்குச் சொல்லிலக்கண முடிபும் (2) க்குப் பொருட்புணர்ச்சி இலககணமும எழுதுக.

(1) வஞ்சித் தொழுகு மதியிலிகாள் யாவரையும்
வஞ்சித்தோ மென்று மகிழன்மின் - வஞ்சித்த
எங்கு முளனொருவன் காணுங்கொ லென்றஞ்சி
அங்கங்குலைவ தறிவு.

(2) பிறராற் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டு
மறவாமே நோற்ப தொன்றுண்டு - பிறர்பிறர்
சீரெல்லாந் தூற்றிச் சிறுமை புறங்காத்து
யார்யார்க்குந் தாழ்ச்சி சொலல்.

## Answer.

(சொல்லிலக்கணமுடிபு.)

(1) வஞ்சித்து:—செயப்படுபொருள் குன்றாத செய்து என்னும் வாய்பாட்டு இறந்தகாலத் தெரிநிலைவினையெச்சம். அது ஒழுகும் என்னும் பெயரெச்சத்தைக்கொண்டு முடிந்தது.

ஒழுகும்;—செயப்படுபொருள் குன்றிய செய்யும் என்னும் வாய்பாட்டுக் காரியப்பொருட்டாகிய நிகழ்காலப்பெயரெச்சம். அது காரணப்பொருட்டாகிய மதியிலிகாள் என்னும் வினைமுதற்பெயரைக் கொண்டு முடிந்தது.

மதியிலிகாள்:—பண்படியாகப்பிறந்த உயர்திணைப் பலர்பாற்படர்க்கைப் பெயர்ச்சொல். அது விளித்தற் பொருளதாகிய எட்டாம் வேற்றுமை உருபேற்று மகிழன்மின் என்னும் வினைமுற்றைக்கொண்டு முடிந்தது.

யாவரையும்:—வினாவடியாகப்பிறந்த உயர்திணைப் பலர்பாற்படர்க்கைப் பெயர்ச்சொல். அது அழித்தற்பொருளதாகிய இரண்டாம் வேற்றுமை உருபேற்று வஞ்சித்தோம் என்னும் வினையைக்கொண்டு முடிந்தது.

உம்:—முற்றுப்பொருளைத் தருவதாகிய ஓரிடைச்சொல். அது யாவர் என்னும் பெயர்சசொல்லை யடுத்துவந்தது.

வஞ்சித்தோம்:—செயப்படுபொருள் குன்றாத உயர்திணைத் தன்மைப்பன்மை உடன்பாட்டு இறந்தகாலத் தெரிநிலைவினைமுற்று. நாம் என்னும் தோன்றா எழுவாயைக்கொண்டு முடிந்தது.

என்று:—வினைப்பொருளில் வந்ததோரிடைச்சொல். இது வஞ்சித்தோம் என்னும் வினையையடுத்துவந்தது. ஆதலால் இது இடைச்சொலடியாகப்பிறந்த வினையெச்சமன்று.

மகிழன்மின்:—செயப்படுபொருள் குன்றாத உயர்திணை எதிர்மறை ஏவற்பன்மை வினைமுற்று. இது மதியிலிகாள் என்னும் பெயரைக்கொண்டு முடிந்தது.

வஞ்சித்த:—செயப்படுபொருள் குன்றாத அஃறிணைப் பலவின்பாற்படர்க்கை உடன்பாட்டுத் தெரிநிலை வினையாலணையும்பெயர். இது அடைதற்பொருளதாகிய இரண்டாம்வேற்றுமை யுருபேற்று காணும் என்னும் வினையைக்கொண்டு முடிந்தது.

எங்கு:—வினாவடியாகப்பிறந்த அஃறிணைப் பலவின்பாற் படர்க்கை இடப்பெயர்ச்சொல். இது இடப்பொருண்மைத்தாகிய ஏழாம் வேற்றுமை உருபேற்று உளன் என்னுங் குறிப்பு வினையாலணையும் பெயரைக்கொண்டு முடிந்தது.

உம்:—முற்றுப்பொருட்டாகிய இடைச்சொல். இது எங்கு என்னும் பெயர்ச்சொல்லை யடுத்துவந்தது.

உளன்:—பண்படியாகப்பிறந்த உயர்திணை ஆண்பாற்படர்க்கைக் குறிப்பு வினையாலணையும்பெயர்ச்சொல். இது ஒருவன் என்னும்

பண்படியாகப்பிறந்த பொருட்பெயரோடு இருபெயரொட்டுப் பண்புத்தொகைநிலையாகிக் கருத்தாப்பொருட்டாகிய எழுவாயுருபேற்றுக் காணும் என்னும் வினையைக்கொண்டு முடிந்தது.

காணும்:—செயப்படுபொருள் குன்றாத உயர்திணை யாண்பாற்படர்க்கை உடன்பாட்டு எதிர்காலச்செய்யுமென்னும் வாய்பாட்டுத் தெரிநிலைவினைமுற்று. அது ஒருவன் என்னும கருத்தாவைக்கொண்டு முடிந்தது.

கொல்:—அசை நிலைப்பொருட்டாகிய ஓரிடைச்சொல். இது காணும் என்னும் வினையையடுத்துவந்தது.

என்று:—வினைப்பொருளில்வந்ததோ ரிடைச்சொல். இது அஞ்சியென்னும் வினையெச்சத்தை யடுத்துவந்தது.

அஞ்சி:—செயப்படுபொருள் குன்றாத உடன்பாட்டு இறந்தகாலத் தெரிநிலை வினையெச்சம். இது குலைவது என்னும் தொழிற்பெயரின் பகுதியைக்கொண்டு முடிந்தது.

அங்கம்:—அஃறிணை ஒன்றன்பாற் படர்க்கைப் பெயர்ச்சொல். இது வினைமுதற்பொருளதாகிய முதல் வேற்றுமையுருபேற்றுக்குலைதல என்னுந் தொழிற்பெயரின் பகுதியைக்கொண்டு முடிந்தது.

குலைவது:—அஃறிணை ஒன்றன்பாற்படர்க்கைத் தொழிற்பெயர்ச்சொல். இது வினைமுதற்பொருளதாகிய எழுவாயுருபேற்று அறிவு என்னுந் தொழிற்பெயரைக்கொண்டு முடிந்தது.

அறிவு:—அஃறிணை ஒன்றன்பாற்படர்க்கைத் தொழிற்பெயர்ச்சொல். இது பெயர்ப்பயனிலையாகக் குலைவது என்பதைக்கொண்டு முடிந்தது.

(பொருட்புணர்ச்சி இலக்கணம்.)

2. பிறரால்+பெருமை=வேற்றுமைப்புணர்ச்சி மூன்றும்வேற்றுமைத் தொகாநிலைத்தொடர்.

பெருமை+சுட்டு=அல்வழிப்புணர்ச்சி. பண்புத்தொகை நிலைத்தொடர்.

சுட்டு+வேண்டுவான்=வேற்றுமைப்புணர்ச்சி. இரண்டாம்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர்.

வேண்டுவான்+யாண்டும்=அல்வழிப்புணர்ச்சி. எழுவாய்த் தொகாநிலைத்தொடர்.

யாண்டு+உம் - அல்வழிப்புணர்ச்சி. இடைச்சொற்றொகா நிலைத்தொடர்.

யாண்டு+மறவாமே=வேற்றுமைப்புணர்ச்சி. எழாம்வேற்றுமைத் தொகை நிலைத்தொடர்.

மறவாமே+நோற்பது=அல்வழிப்புணர்ச்சி. வினையெச்சத் தொகாநிலைத்தொடர்.

நோற்பது + ஒன்று = அல்வழிப்புணர்ச்சி. இருபெயரொட்டுப் பண்புத்தொகை நிலைத்தொடர்.

ஒன்று+உணடு = அல்வழிப்புணர்ச்சி. எழுவாய்த் தொகாநிலைத் தொடர்.

உண்டு+பிறர்=அல்வழிப்புணர்ச்சி. வினைமுற்றுத் தொகாநிலைத் தொடர்.

பிறர்+பிறர் = அல்வழிப்புணர்ச்சி. அடுக்குத் தொகாநிலைத்தொடர்.

பிறர்+சீர்=வேற்றுமைப்புணர்ச்சி. ஆறும்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர்.

சீர்+எல்லாம்=அல்வழிப்புணர்ச்சி, பண்புத்தொகை நிலைத்தொடா.

எல்லாம்+தூற்றி = வேற்றுமைப்புணர்ச்சி. இரண்டாம்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர்.

தூற்றி+சிறுமை=அல்வழிப்புணர்சசி. வினையெச்சத் தொகாநிலைதொடா.

சிறுமை+புறம்=வேற்றுமைப்புணர்ச்சி. இரண்டாம்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர்.

புறம்+காதது=வேற்றுமைப்புணர்ச்சி. ஏழாம்வேற்றுமைத்தொகைநிலைத்தொடர்.

காத்து+யார்=அல்வழிப்புணர்ச்சி. வினையெச்சத் தொகாநிலைத் தொடர்.

யார்+யார்க்கும்=அல்வழிப்புணர்ச்சி. அடுக்குத் தொகா நிலைத் தொடர்.

யார்க்கு+உம்=அல்வழிபபுணர்ச்சி. இடைச்சொற் றொகாநிலைத் தொடா.

யார்க்கும்+தாழ்ச்சி. வேற்றுமைப்புணர்ச்சி. நான்காம் வேற்றுமைத் தொகாநிலைத்தொடர்.

தாழ்ச்சி+சொலல்=வேற்றுமைப்புணர்ச்சி. இரண்டாம்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர்.

## 7. Question.

அடியில்வருஞ் சொற்றொடர்களுக்கு அருத்தம் எழுதுக.

(1) உய்த்துணர்வில்லெனி னில்லாகும் உய்த்துணர்ந்தும் சொல்வன்மை.

(2) கற்றுணர்நோக்கிக் கருத்தழிக கற்றதெல்லாம் எற்றே.

(3) மெய்யுணர்ந்தார் பொய்மேற் புலம்போக்கார்மெய்யுணர்ச்சி

(4) மற்றையோன் நல்குரவேபோலு னிநல்ல.

(5) உறுதிபயப்ப கடைபோகாவேனு மிறுவரைகாறுமுயல்ப.

(6) புலியேறறப்பசித்துந் தின்னுவாம் பைங்கட் புனத்தபைங் கூழ்.

## Answer.

(1) ஆராய்ந்து அறிதல் இல்லையானால் (அக்கல்விகள்) இல்லையாம். அவ்வாறு ஆராய்ந்து அறிந்தும் (பிறருக்கு ஏற்கச்சொல்லும்) சொல்லினது வன்மை.

(2) படித்தறிந்தவர்களைப்பார்த்து நாம் கற்றது முழுவதும் எத்தன்மையதாகுமெனக் கருதி மனம் வருந்துக.

(3) (பிறப்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களையும் உண்மையறிவால் அறிந்தவர்கள் நிலையில்லாதனவாகிய விஷய இன்பங்களில் ஐம்புலன்களையும் செலுத்தாமல் மெய்ம்மையாகிய முதற்பொருளைப் பாவித்தல்.

(4) ஈகைக்குணமுடையானுடைய தரித்திரமே மிகுதியும் நல்லனவாகும்.

(5) அடைதற்குரிய நன்மையைத்தரத்தக்க முயற்சிகள் முடியாவாயினும் முடியும் எல்லைவரையும் (அறிவுடையார்) முயற்சிசெய்வர்.

(6) ஆண்புலிகள் மிகப்பசியடைந்தும் ஈரமான இடமுடையபுனத்திலுள்ள பயிர்களை உண்ணுவாம்.

## 8. Question.

(*a*) எத்துணையவாயினும், உற்றுழியும், யாண்டும், இவை என்ன உம்மைகள்.

(*b*) கலனே கலனல்லால். இதில் கலன் என்பது எதற்குப்போலி அதைச்சார்ந்த மற்றப்போலிகளையும் சூத்திரமும் எழுதுக.

(*c*) ஒருவன் "யாம் கற்றனமென்று" சொல்லுதல் வழுவமைதியா? வழாநிலையா? ஏன்?

(*d*) "பொன்மலர் நாற்றமுடைத்து" இதனீற்றில் என்னசொல் குறைந்துவந்தது? அதற்கு இலக்கணமென்ன? சூத்திரமென்ன?

(*e*) அகமகிழ்க, கருத்தழிக, தந்தை, கற்றதெல்லாம். இவை என்ன வழுவமைதி?

(*f*) நோற்பதொன்று, அனைத்தெவையும், இவை என்னதொடர்?

(*g*) தெய்வமுளது, இதில் தெய்வமென்னதிணை. அதுபோல நான்கு எழுதுக?

(*h*) இன்புதல்வர்க்கன்றே, எற்று, இவர்க்குநாம், வியவாமையன்றே, இவற்றில் அன்றே-எற்று-வியவாமை என்பன என்ன சொற்கள்?

(*i*) பைம்பொற்பூண், சிறுவாழ்நாள் உயிர் என்பனவற்றை "பைம்பூண்" "சிற்றுயிர்" என்றதற்கு இலக்கணமென்ன? சூத்திரமென்ன?

(*j*) (1) சினைவினை முதல்வினையோடு முடிவதற்கும். (2) இலக்கணப்போலிக்கும் ஒவ்வோருதாரணமும் சூத்திரமும் எழுதுக.

(*k*) பொன்மலர், தம்முன்னர். இவை எத்தனைப்பொருளால் மயங்கும் சூத்திரமென்ன?

## Answer.

(*a*) முன்னது உயர்வு சிறப்பு. பின்னது இறந்தது தழீஇயது. மற்றது முற்று.

(*b*) கலம் என்பதற்குப்போலி. சுரும்பு = சுரும்பர். பந்தல்—பந்தர். மதில—மதிள். முதலியவுமாம். "மகர இறுதி அஃறிணைப் பெயரில் னகரமோடுறழா நடப்பனவுளவே" (எழு-67-சூ.)

(*c*) வழாநிலையேயாம். ஒருவன் தனக்குள்ளே தன்னைப்பற்றிக் கருதும்போதும், பேசும்போதும் தனனைத் தனித்தன்மைபபன்மையாகவைத்துக் கருதுவதும் பேசுவதும் இயல்பாதலால் வழாநிலையேயாம்.

(*d*) "போலும்" என்னுஞ்சொல் குறைந்துவந்தது. அப்படிக் குறைதலைச் சொல்லெச்சம் என்னல்வேண்டும். "பெயர்வினை உம்மைசொல் பிரிப்பென ஒழியிசை, எதிர்மறை இசையெனுஞ் சொல்லொழிபொன்பதுங், குறிப்புந்தத்தம் எச்சங்கொள்ளும்" (பொது-சூ-9.)

(*e*) முன்னிரண்டுந் திணைவழுவமைதி. பின்னிரண்டும் பால்வழுவமைதி.

(*f*) இருபெயரொட்டுப் பண்புத்தொகை நிலைத்தொடர்.

(*g*) சொல்லால் அஃறிணையும், பொருளால் உயர்திணையும் ஆதலால் இருதிணைக்கும்பொதுவாம். பிள்ளை-தாய்-தந்தை - கடவுள் முதலிய.

(*h*) அன்றே:—தேற்றப்பொருளில்வந்த இடைச்சொல்.

எற்று:—இடைச்சொலடியாகப்பிறந்த ஒன்றன்படர்க்கைக் குறிப்புவினைமுற்று.

வியவாமை:—எதிர்மறைத் தொழிற்பெயர்ச்சொல்.

(*i*) ஓர்வகைக்குறிப்பாகிய மரபு வழுவமைதி. "ஒன்றொழி பொதுச்சொல் விகாரந்தகுதி, ஆகுபெயர் அன்மொழி வினைகுறிப்பே, முதல்தொகை குறிபபோ டீனைபிறவும், குறிப்பிற றருமொழி அல்லன வெளிப்படை" (பெய-சூ-12.)

(*j*) (1) தலைவணங்கித் தாழப்பெறின். (2) புறங்கடை.

(*k*) பொன்னாற் செய்யப்பட்டமலர், பொன்னாகியமலர் எனவும், தமது முன்னர், தமக்கு முன்னர் எனவும், இருபொருளால் மயங்கும். "தொக்குழிமயங்கும் இரண்டுமுதல் ஏழ், எல்லைப் பொருளில் மயங்குமென்ப" (ந-பொது-சூ-22.)

## 8. Question.

அடியில்வரும அரும்பதங்களுக்குப் பொருளெழுதுக.

| Question. | Answer | Question. | Answer. |
|---|---|---|---|
| நாஙகு = | மிகுதி | இலைமுகம் = | வெற்றிலைநுனி |
| உய்த்தல் = | ஆராய்தல் | கணணுறையன் = | தாக்ஷிணியமில்லான் |
| முழுமணி = | பெரிய இரததினம | இறுவரை = | சாகுந்தனை |
| கனஙகுழை = | கனததகாதணி | கணடுஞ்சார் = | நித்திரியார் |
| வியப்பு = | மதிபபு | கறுப்பு = | கோபம் |
| பெருஞ்சுட்டு = | மிக்கமதிப்பு | கவயமா = | காட்டுப்பசு |
| புறங்காததல = | பாதுகாததல் | நல்கூர்ந்தார் = | வறுமையுடையாா |
| அடிகள = | குருக்கள் | வள்ளன்மை = | ஈகைத்தன்மை. |

---

## கம்ப ராமாயணம்.

---

### Question.

(a) கம்பராமாயண மென்பதற்குப் பொருளென்ன?

(b) இலக்கணக் குறிப்பென்னை?

(c) இராமாயணத்தைச் செய்வித்தவர்யார்?

(d) எக்காலத்தில் பாடப்பட்டது? எவ்விடத்தில் அரங்கேற்றப் பட்டது?

(e) எந்தயுகத்தில் இராமாயணயுததம் நடந்தது?

(f) சமுஸ்கிருததநி லிதைக் கவியாகச்செய்தவர் யார்?

(g) நாரதர் வான்மீகிமுனிவர்க்கு உபதேசிததநெப்படி.

(h) இது முதனூலா? வழிநூலா?

### Answer.

(a) கம்பரால் செய்யப்பட்ட இராமனது சரித்திரத்தைத் தெரிவிக்கும் நூல் என்பது பொருள்.

(b) கம்பர்+ராம+அயனம் என மூன்றுசொல் இரண்டு சந்தி பெற்று முன்னது தமிழ்மொழி இலககணப்படி மூன்றும்வேற்றுமை உருபும்பயனு முடன்தொக்கதொகை நிலைத்தொடராகவும், பின்னது வடமொழி இலக்கணப்படி தீர்க்கசந்தியாகவும் புணர்ந்தன. கம்பர் தமிழ்மொழி. மற்றவிரண்டும் வடமொழி. ராம+அயனம் என்பதில் ராம எனனும் பெயர் இராமசரித்திரததை யுணர்த்துவதால் முதலாகுபெயர் ராமாயணமென்பது தன்னையுணர்த்துதற்குக் கருவியாயுளள நூலைத் தெரிவிப்பதால் காரியவாகுபெயர். கம்பர் என்னும் படாக்கைபபெயா பிறிதினியைபு நீக்கியவிசேடணம். என்பது இலக்கணம்.

(c) முதனூலாற் பெயர்பெற்ற வழிநூல்.

(d) வெண்ணெய்நல்லூர்ச் சடையப்பமுதலியாரும், சோழமகாராசனுமாம்.

(e) (1000) வருஷத்துக்கு முற்பட்டது. சீரங்கத்தில் பங்குனிமீ அஸ்த நட்சேத்திரத்தில் அரங்கேற்றியது.

(f) திரேதாயுகத்தில் நடந்தது.

(g) ஆதியில் வால்மீகிமுனிவராலும், அதன்பின் பற்பலமுனிவராலும் கவிஞராலும், செய்யப்பட்டன.

(h) ஆதியில் திருப்பாற்கடலிலுள்ள நாராயணமூர்த்தி தாம் இராமனாகவும் ஆதிசேடன் சங்கு சக்கரங்கள் தமது தம்பியராகவும் தேவர்கள் வானரங்களாகவும் அவதரித்து இராவணனைச் சங்கரிப்போம் எனத் தேவர்கள் பயத்தையொழித்து இந்த இரகசியம் வெளிப்படக்கூடாதெனவும் உத்தரவளித்தனர். இதையுணர்ந்த நாரதமாமுனிவர் பிறருக்குரைக்காவிடில் தமக்குள்ள குறைநீங்காதென நினைந்து புற்றிடங்கொண்டிருந்த வால்மீகருக்கு உபதேசிக்க அவர் சமுஸ்கிருதத்தில், இராமாயணத்தைப் பாடியருளினர். பிறகு அதைத் தமிழில் கம்பர் கவியாகச்செய்தனர்.

## 2. Question

(a) இந்நூல் எத்தனை உறுப்புகளடங்கிய பிண்டம்.

(b) இந்நூல் முழுமையும் கம்பரால் பாடப்பட்டதா?

(c) இது தவிர வேறு இராமாயணமுந் தமிழில் உண்டா?

(d) கம்பருடைய காலத்திருந்த வித்துவான்கள் யார்)

(e) கம்பராற் செய்யப்பட்ட வேறு பிரபந்தங்களெவை?

(f) கம்பருடைய சமயமென்ன? மரபென்ன?

(g) இந்நூல் எதனோடு சேர்த்து எண்ணப்பட்டது?

(h) எவ்வகைப் பாவினாற்செய்யப்பட்டது? உதாரணமென்ன?

(i) கம்பருடைய சரித்திரத்தை 20-வரிக்குமேற்படாமலெழுதுக

## Answer.

(a) காண்டம், படலம், செய்யுளென மூன்றுறுப்படங்கிய பிண்டம்.

(b) அன்று. பாலகாண்டம், அயோத்தியாகாண்டம், ஆரணியகாண்டம், கிட்கிந்தாகாண்டம், சுந்தரகாண்டம், உயுத்தகாண்டமென ஆறுகாண்டங்கள், கம்பராலும் ஏழாவதுகாண்டமாகிய உத்தரகாண்டம் ஒட்டக்கூத்தப்புலவராலும் பாடப்பட்டன.

(c) சங்கத்து இராமாயணம் ஒன்றிருந்ததாகச் சொல்லுகிறார்கள். ஆனால் வழங்கிவருவது கம்பராமாயணமே.

(d) ஒட்டக்கூத்தப்புலவர், புகழேந்திப்புலவர், ஔவையார் முதலானோர்

(e) சடகோபரந்தாதி, சரஸ்வதியந்தாதி, ஏரெழுபது, சிலையெழுபது, தனிப்பாடல்கள் முதலியன.

(*f*) வைணவசமயம், அரசகுலமெனச் சிலர் சொல்லுகிறார்கள்.

(*g*) இதிகாசங்களோடு சேர்த்து எண்ணப்பட்டது.

(*h*) நான்குசீராகிய கலிவிருத்தங்களினாலும், ஐந்துசீராகிய கலிநிலைத் துறையினாலும், அறுசீர் எழுசீர் முதலிய ஆசிரியவிருத்தத்தினாலும் செய்யப்பட்டது.

(உதாரணச் செய்யுள்.)

(நான்குசீராகிய கலிவிருத்தம்.)

பெருந்தடங் கட்பிறை நுதலார்க் கெலாம்
பொருந்து செல்வமுங் கல்வியும் பூத்தலால்
வருந்தி வந்தவர்க் கீதலும் வைகலும்
விருந்து மன்றி விளைவன யாவையே. [கம்-3.]

(ஐந்துசீராகிய கலிநிலைத்துறை.)

ஆழ மதியும் மருளும் மறனும் மமைவும்
ஏழின் மிடல்வீ ரமுமீ கையுமெண்ணில் யாவும்
வீழின் நிலையும் மிவைவே மியினோர்க்கு நின்ற
பாழும் முழுதும் மிவனே கெடப்ப மனனே [கம்-10]

(எழுசீராகிய ஆசிரியவிருத்தம்.)

புண்ணியம் புரிந்தோர் புகுவது துறக்க
மென்னுமீ தருமறைப் பொருளே
மண்ணிடை யாவ ரிராகவ னன்றி
மாதவ மறத்தொடும் வளர்த்தார்
எண்ணருங் குணத்தி னவனினி திருந்திவ்
வேழுல காளிட மென்றால்
ஒண்ணுமோ வதனின் வேறொரு போக
முறைவிட முண்டென வுரைத்தல். [சம்-8.]

(*i*) கம்பர் சரித்திரம்.—கம்பர் ஏறக்குறைய 1000 வருஷத்திற்கு முற்பட்டு திருவழுந்தூரிற்பிறந்து எளிமை பிறலை வெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப முதலியார் வீட்டில் வளர்ந்து மாடுமேய்த்துத் தொழில் செய்துவந்தனர். ஒருநாள் வயிரபுரமென்னும் ஊரில கம்பந் தினையும் விதைத்த வயலைக்காத்திருந்து பதினைந்து நாழிகை மேல் நித்திரைவந்து அருகேயிருந்த காளிகோயிலிலுறங்கினார். பின்பு தினைப்புனத்தைக் குதிரைமேய்வதாகக் கனாக்கண்டெழுந்து பார்க்கவே அங்ஙனமே நடந்தது. அது கண்டு குதிரையை அதட்டியும் போகாமையால் மீளவும் அக்கோயிலெதிர்சென்று அழுதனர். காளி உள்ளமிரங்கிப் பீஜாட்சரத்தை நாவிலே எழுதி பிரசாதிக்கவே சரஸ்வதிவரமுண்டாகி ஒருகவிபாடிக் குதிரையைக் கொன்றும் மீளவும் அக்குதிரை அவ்வூர் அதிகாரியாகிய காலிங்கராயனுடையதாதலால் யாவருங் கேட்டுக்கொண்டபடி அக்கவியின் கடையடியை மாற்றி உயிர்ப்பித்தனர். இதையறிந்த சடையப்பமுதலியாரும் தங்

கனென்னும் சோழராசனும் அவன்மகனாகிய குலோத்துங்க சோழனும் விசேஷமாகச் சன்மானித்துவந்தனர். அதன்பின்னர் முதலியாரும் அரசனுங் கேட்டுக்கொள்ளவே இராமாயணத்தைப்பாடி தில்லைமூவாயிரவர் முதலியோர்களையொப்பமும்பெற்றுச் சீரங்கத்தில் சீரங்கநாதர் சந்நிதியில் அரங்கேற்றிவாழ்ந்திருந்தனர் என்பதாம்.

## 3. Question.

உமது பாடம்வரையும் அடங்கிய இராமாயணக்கதையை சங்கிரகமாக எழுதுக.

## Answer.

சரயு என்னும் தெய்வநதிப்பாய்ச்சலுள்ள கோசலம் என்னும் நாட்டில் அயோத்தியாபுரியென்னும் ஒரு பட்டணமுண்டு. அப்பட்டணத்துக்கரசனாகிய தசரதமகாராசன் அறுபதினாயிரம் வருடம்வரையில் புத்திரப்பேறில்லாமல் மனம்வருந்தித் தனது குலகுருவாகிய வசிட்டரை யிரந்து கேட்டுக்கொண்டான். அம்முனிவர் இனி திருமால் அவதரித்து இராவணசங்காரம் பண்ணப்போகிறதை மனத்திலெண்ணி அரசனை நோக்கி:—ஐயா தசரதமன்னவனே! காசிபமுனிவருக்குப் பேரனும், விபாண்டக முனிவருக்குக் குமாரனுமாகிய கலைக்கோட்டுமாமுனிவரென்பவரொருவருளர். அம்முனிவரை உத்தமனையுடைய குமாரனாகிய உரோமபாதனென்னும் அரசன் பன்னிரண்டுவருஷம் தன்னாட்டில் மழையில்லாமையால் பெரியோர் சொற்படி இருபெண்களை அனுப்பி வஞ்சனையாகத் தன்னாட்டிற்கு அழைப்பித்தனன். அம்முனிவர் வந்தபோதே மழையும்பெய்தமையால் பெய்யக் கடைசியாய்த் தனது குமாரத்தியாகிய சாந்தை என்பவளை அவருக்குப் பாணிக்கிரகணஞ்செய்து தன்னாட்டிலிருத்தி உபசரித்துவருகின்றான். ஆதலால் அந்த மகாரிஷியை நீபோயழைத்துவந்து புத்திரகாமேஷ்டியென்னும் யாகத்தைச்செய்தால் புத்திரப்பேறு உண்டாகுமெனச் சொல்லினர். அதுகேட்ட வேந்தன் அம்முனிவரை அழைத்துவந்து யாகத்தை நிறைவேற்றவே அவ்யாகத்தினின்றும் ஒருபூதம்வெளிப்பட்டு, பொற்றட்டில் பிண்டசாதத்தைக்கொண்டுவைத்து மீளவும் வந்தவழியே புகுந்துமறைந்தது. மகாராசன் அதை மூன்றுபிடியாகப்பிடித்துத் தனது பிரதானமனைவியராகிய மூவரில் முறைப்படி கௌசலைக்கும், கைகேயிக்கும், சுமித்திரைக்கும் ஒவ்வொரு பிடிசாதத்தைக்கொடுத்து, சேஷமாயிருந்ததையும் சுமித்திரைக்கே யளித்தனன். அதனால் அவர்கள் கருக்கொண்டு கௌசலை இராமபிரானையும், கைகேயி பரதாழ்வானையும், சுமித்திரை இலக்ஷுமணப்பெருமாளையும், சத்துருக்கனையும் பெற்றெடுத்தனர். பின்பு இந்நால்வரும் நான்குவேதம்போல வளர்ந்துவருகையில் விசுவாமித்திர முனிவர்வந்து தமதுயாகத்துக்கு இடையூறுசெய்யும் அரக்கரையொழிக்கும்படி இராமபிரானை யனுப்பிவைக்கத் தசரதமகாராசனைக்கேட்டனர். அவ்வரசன் பிரிவாற்றாதிருந்தும் வசிட்டமுனிவருடைய சொல்லால் மனமிசைந்தனுப்பவே விசுவாமித்திரரோடு இராமரும், இளையபெருமாளும் பின்தொடர்ந்துசென்று கோசல நாட்டையும் சரயு நதியையுங்கடந்து அப்பால் அங்கதேசத்தைக்கண்டு அன்றையதினம் அங்கிருந்து மறுநாள் ஒருபாலைவனத்

தையடைந்து, அங்கு முனிவரால் உபதேசிக்கப்பட்ட பலை, அபலை என்னும் இரண்டு திருமந்திரங்களையும்பெற்றுப், பின்பு தாடகையினுடைய வரலாற்றையும் முனிவரால் கேள்விப்பட்டுத் தாடகையையும் வதைபுரிந்து, பின்னும் விசுவாமித்திரர்கொடுத்த தெய்வாஸ்திரங்களையும் பெற்றனர். அதன்மேல் கோமதி, கௌசிகை என்கின்ற நதிகளின் வரலாற்றையுங் கேட்டுணர்ந்து சிலதூரம்நடந்து அங்கொரு சோலையைக்கண்டு அச்சோலையினுடறியவேண்டிய மாபலியின் கதையுந்தெரிந்து அச்சோலையின்கண்ணே விசுவாமித்திரர் யாகஞ்செய்ய இருவரும் அந்தயாகத்தைக் காத்திருந்தனர். அப்போது இராக்ஷதர்கள் பற்பல மாய்கையைச் செய்துகொண்டிருக்கத் தாடகையின் புத்திரர்களாகிய சுபாகு, மாரீசன் என்னும் இருவர் வந்தெதிர்த்தார்கள் எதிர்க்கவே இராமபிரானவிட்ட ஒருபாணமானது ஒருவனை யமபுரத்திலும், மாரீசனைக் கடலிலும் சேர்த்தது. முனிவரும் யாகத்தை முற்றுவித்தனர். அப்பால் சிலதூரம்நடந்து சோணமாநதியையுங்கண்டபின்பு ஒரு சோலையைக்கண்டு இராமபிரான் அச்சோலையின் வரலாற்றைவினவ முனிவர் துருவாசமுனிவருடையகதையும் திதியென்பவருடைய கதையுஞ்சொல்லக்கேட்டுணர்ந்து, சுப்பிரமணியர் பிறந்த ஸ்தலமுங்கண்டு கங்கை நதியின் வரலாற்றையுந்தெரிந்து விசாலைதேசத்தரசனுடைய உபசாரமும் பெற்றுக் கல்லாயிருந்த அகலிகைக்குச் ஸ்ரீராமபிரான் பெண்ணுருவளிக்கக் கடைசியாய மூவரும் மிதிலாபுரியைச்சார்ந்தார்கள். அங்கு மிதிலைக்கரசனாகிய ஜனகன் தனது யாகத்தைமுடித்து சபையில் வந்தபிறகு விசுவாமித்திரரைநோக்கி இவர்கள் யார் இவர்களவரலாற்றைச் சொல்லவேண்டுமென்று கேட்கவே, முனிவர் இவர்களுடைய குலமுறையும் நடந்த வர்த்தமானங்களையுஞ் சொல்லியருளினார் என்பதாம்.

## 4 Question.

அடியில்வருஞ் சொற்றொடர்களிலடங்கிய பூர்வ கதைகளைச் சுருக்கி எழுதுக.

(a) "குலமணித்தோட்சம்பரனைக் குலத்தொடுந் தொலைத்து" என்றதெப்படி ?

(b) விசுவாமித்திரனை "அருந்தவத்தோன்" என்றதேன் ?

(c) "கைவண்ண மங்குக்கண்டேன்" என்றதெப்படி ?

(d) "கால்வண்ண மிங்குக்கண்டேன்" என்றதெப்படி ?

(e) காமனாசிரமத்தை "அங்கவிலம்" என்றதேன் ?

(f) சிவபிரானை "கங்கைபுடையூற்றுஞ் சடையான்" என்றதெப்படி ?

(g) சீதை எப்படிப்பிறந்து இராமபிரானை மணந்தாள் ?

(h) சிவபிரானை "உமைக் கொருபாகத்தொருவனும்" என்றதெப்படி ?

(i) "[illegible]ழிக் கதிர்த்திங்கள்" திங்களுக்குக் கலைதேய்ந்து வளருதுமெப்படி ?

## Answer.

(a) சம்பரன்கதை:—பூர்வத்தில் சம்பராசுரனென்னும் அசுரனொருவனிருந்தான் அவன பல அசுரர்களைத் தன்னுடன்படுத்தித் தேவநகரமாகிய அமராபதியிற்புகுந்து தேவர்களையும் தேவேந்திரனையும் உபத்திரவம்புரிந்து இந்திரனுடைய அரசாக்ஷியைத் தான் மேற்கொண்டு தேவர்கள் யாவரையும் புறக்கடித்தான். அதுபொறாத இந்திரன் அயோத்திமா நகரத்தில்வந்து தசரதனிடத்தில் முறையிட்டனன். தசரதனும் அவற்குப் பிரதானமனைவியர் மூவரில் இரண்டாவதாகிய கைகேயியைத் தேர்நடத்தும் சாரதியாக அமைத்துச்சென்று அவ்வசுரனோடு யுத்தம்புரிந்தனன். அசுரர்கள் மாயையில் வல்லவர்களாதலால் பற்பல மாயையும்பண்ணித் தசரதன் எவ்விதத்திலும் வெற்றியடையாத வகையைச் செய்தார்கள். பின்பு சாரதியாகிய கைகேயி தனக்குமுன்னமே தவளாங்கனென்னு முனிவன் கற்பித்திருந்த மாயையை நீக்கவல்ல மந்திரத்தை உச்சரித்தனள். அம்மந்திரபலத்தால் அம்மாயையெல்லாம் சூரியனைக்கண்ட பனிபோலத் தொலையவே அதுசமயத்தில் தசரதமகாராசன் சம்பரனையும் அவனைச்சார்ந்த அசுரர்களையும் வெற்றிகொண்டு அமராவதியைத் தனதுவசப்படுத்தி மீளவும் அந்நகரத்தைத் தன்னிடம் அடைக்கலம்புகுந்த இந்திரனுக்குக் கொடுத்தனன். அதன்மேல் கைகேயியைமகிழ்ந்து உனக்குவேண்டிய வரத்தைப் பெற்றுக்கொள்ளென்ன, அவளும இரண்டுவரம் எனக்குத் தரவேண்டும் அவை எனக்கு வேண்டியபோது பிரசாதிக்க வேண்டுமெனப் பெற்றுக்கொண்டனள் என்பதாம். பிந்தி இவ்விரண்டுவரங்களில் ஒன்றினால் பரதன் அரசாக்ஷிசெய்யவும் இராமபிரான் பதினாலுவருடம் கானகஞ்செல்லவும் கேட்டுக்கொண்டாள். (இரா-13.)

(b) விசுவாமித்திரமுனிவர் தாம் அரசனாயிருந்து கௌசிக மகாராசனெனப் பெயர்பூண்டு அயோத்தியாநகரத்தை யாண்டுவந்த காலத்தில் ஒருநாள் சேனைசமுத்திரத்தோடு புறப்பட்டுக் காட்டிற்சென்று வேட்டையாடிக் களைத்து வசிட்ட மகாமுனிவருடைய ஆச்சிரமத்திற் போய்ச்சேர்ந்தார். இதைக்கண்ட வசிட்ட முனிவர் நமது அரசனும் சேனையும் இளைப்புற்றார்களென உணர்ந்து காமதேனுவை (பசு) அழைத்து அவர்களை உபசரிக்கக் கட்டளையிட்டார். அப்பசுவும் அப்படியேயியற்ற அரசனும், சேனையும் நல்லுணவுகளையுண்டு களைநீங்கினர். பின மன்னவன் அப்பசுவைத் தமக்குத் தரும்படி முனிவரைவேண்ட முனிவர் அப்பசு ஒருப்படுமாயின் அழைத்துப் போகலாமென்ன, அரசன் தமது சேனைகளோடு அப்பசுவைப் பிடித்துக்கட்ட முயலுகையில் அது சேனையையெல்லாம் படுசூரணப்படுத்தி முனிவர்பால் அடைக்கலம்புகுந்தது. அதுகண்ட வேந்தன் சினந்து எல்லாம் முனிவருடைய மந்திரபலத்தா லாகின்றனவென்று துணிந்து, முனிவரைக்கொல்லும்படி போர்தொடங்கி அனேக அஸ்திரங்களைப் பிரயோகிக்க முனிவர் தமது யோகதண்டைத் தரையிலூன்றி அப்பாணங்களையெல்லாம் விழுங்கச்செய்தமையால் அரசன் தம்மால் முடியாமையைக்கருதி தபோபலத்திற்கு மிஞ்சிய பலமில்லையெனத்தேர்ந்து செங்கோலு, முடியுந்துறந்து தபஞ்செய்ய

வனத்திற்குச்சென்று ஒருவராலுஞ் செய்யக்கூடாத கடினதவஞ்ச நாலுதிக்குகளிலுமிருந்து செய்து வசிட்டராலேயே பிரமரிஷியெனப் பேரும்பெற்றனர் ஆதலால் "அருந்தவத்தான்" எனப்பட்டது.

(c) கைவண்ணமங்கண்ட தாடகைகதை:—ஆதியில் கந்தருவர் குலத்தில் சர்சரவரசனுக்குப்பிறந்த சுகேதுவென்பானொருவனுளன். அவன் புத்திரப்பேறில்லாமல் பிரமனைநோக்கித் தவஞ்செய்ய பிரமா பிரசன்னமாகி உனக்குப் புத்திரனில்லையாயினும் ஆயிரமதயானையையொத்த பலமுடைய சௌந்தரியமுள்ள ஒரு புத்திரி பிறப்பாளென அநுக்கிரகித்துப் போயினார். அதன்மேல் ஒரு புத்திரியைப் பெற்று அவளுக்குத் தாடகையென நாமமிட்டுத் தனது குலத்துதித்துள்ள சுந்தனென்பவனுக்கு மணஞ்செய்வித்தான். அச்சுந்தன் மாரீசன், சுபாகு என்னும் இரு குமாரர்களைப்பெற்று மனைவியைப் பாலகரிலும் புதல்வர்கள் அதிக பலசாலிகளாயிருப்பதைக் கண்டு மிகக்காவமுகொண்டு ஒருநாள் அகஸ்திய ராச்சிரமத்தண்டைவந்து பிருங்களையெல்லாம் கொன்று விருக்ஷங்களையெல்லாம் பிடுங்கியெறிந்து அதர்மஞ்செய்தனன். அப்போது அகஸ்தியர் அவனைக் கோபத்துடனே பார்க்கவே அவன் சாம்பலாயினன். அதன்மேல் தாடகையும் அவள் புத்திரரும் முனிவரையெதிர்க்கவே முனிவர் சினந்து நீங்கள் அரக்கராகக்கடவீரென்று சபித்தனர். பின்பும் அகஸ்தியரைவெல்ல முடியாமல் இராவணனுடைய பாட்டனாகிய சுமாலியையடைக்கலம் புகுந்து அவனுடைய பிள்ளைகளாக முறைகொண்டு இராவணனுடைய சொற்படி நடந்து அகஸ்தியராச்சிரமத்தைவிட்டு விசுவாமித்திருடையயாகத்துக்கு இடையூறியற்றினார்கள். அம்முனிவர் சினந்து இராமனையழைத்துப்போய் தாடகையை முதலிலே கொல்லுவித்தனர். ஆதலால் "கைவண்ணமங்குக்கண்டேன்" என்னப்பட்டது. (இரா-25.)

(d) கால்வண்ணங் கண்ட அகலிகை கதை:—தேவேந்திரன் கௌதமர் மனைவியாகிய அகலிகையின்மேல் மோகங்கொண்டு ஒருநாள் அம்முனிவரைப் பிரிக்கும்பொருட்டு நடுச்சாமத்தில் சேவலுருக்கொண்டு கூவ முனிவர் உதயகாலமெனக் கருதி ஸ்நானஞ்செய்யச் சென்றனர். அத்தருணத்தில் தேவேந்திரன் கௌதமரைப்போல உருக்கொண்டு அவளை அணைகையில் இதைத் தமது ஞானத்தாலறிந்தமுனிவர் நீராடாமற்றிரும்பி விரைந்துவந்தனர். இதையுணர்ந்த இந்திரன் முனிவர்சாபத்துக்கு அஞ்சி பூனைவடிவெடுத்து ஓடத்தொடங்கினன் உடனே முனிவர் தகாதகாரியஞ்செய்த இந்திரனைநோக்கி நீயொருயோனியை விரும்பியகாரணத்தால் உனக்கு உடம்புமுழுமையும் ஆயிரம் யோனியாகக் கடவதெனச் சபிக்கவே தேவர்கள் வேண்டுகோளின்படி பார்ப்பவர்க்குமாத்திரம் ஆயிரமுங் கண்களாகத் தெரியக்கடவதென அனுக்கிரகஞ்செய்தனர். அதன்பின்பு அச்செய்கைக்கு இணங்கியிருந்த அகலிகையைநோக்கி நீயும் அவ்விந்திரனுடைய துர்ச்செய்கைக்கு மனமுவந்திருந்தபடியால் இதுமுதல் கல்லாகக்கிடப்பாயெனச் சபித்துப் பின்பு அவள் வேண்டுகோளுக்கிரங்கி அம்முனிவர் இராமபிரான் திருவவதாரஞ்செய்து

வர் சினந்து சபிக்கவே அறுபதினாயிரவரும் சாம்பராயினர். பின்பு இதையறிந்த அஞ்சுமான்சென்று கபிலமுனிவருக்கு வழிபாடியற்றிக் குதிரையைக்கொண்டுவந்து யாகத்தை முடிப்பித்தான். அதன்பின் அவன் வமிசத்திற்பிறந்த பகீரதனென்னு மரசன் சாம்பராய்ப்போன தனது முந்தாதைகள் நற்கதியடையும்படி வசிட்டருபதேசத்தால் பிரமா, சிவன், கங்கை இவர்களைக்குறித்து அனேகவருடந் தவஞ்செய்து சுவர்க்கத்திலிருந்த கங்கையைப் பூமிக்குக்கொண்டுவந்தான். கொண்டுவந்தும் அந்த கங்கை பிரவாகித்து வந்தால் உலகமெல்லாம் நாசமாகுமெனக்கருதி அதன்வேகத்தை யடக்கும்படி வேண்டிக்கொள்ளவே சிவபிரான் பூமியின்கண் வந்திருந்து பிரவாகித்துவருங் கங்கையைத் தமது சடாபாரத்திலடக்கிப் போதுமான மட்டும் சடையி னொருமுனையால் கங்கையைப் பூமியில் விட்டனர். அதுசென்று பாதலத்திற் சாம்பராயிருந்தவர்மேல படவும் அவர்களும் நற்கதியடைந்தனர் என்பதாம். ஆதலால் "கங்கைபுடையூறலுஞ்சடையானும்" என்னப்பட்டது. சகரர் தோண்டியகாரணத்தால கடலுக்குச் சாகரமெனவும், பகீரதனால் கொணடுவரப்பட்டதனால் கங்கைக்குப் பகீரதியெனவும் ஒருபெயருண்டு. [இரா-17.]

(ஏ) சீதைபிறந்ததின் வரலாறு:—சீதாபிராட்டி முற்பிறப்பில் பிரகஸ்பதியின் குமாரராகிய குசத்துவசருக்குப் புத்திரியாகப்பிறந்து வேதவதியென்னும் பெயரினளாயிருந்தாள். அப்போது குசத்துவசர் தனது மகளை விஷ்ணுவுக்கேகொடுத்து அவரை மருமகனாக்கக் கருதி எப்படிப்பட்டவர்களுக்கும் இப்பெண்ணைக் கொடேனென்று உறுதி பகர்ந்திருந்தனர். சிலகாலத்துக்குப்பின் தம்பு என்னுமோர் அசுரன் அழுக்காற்றினால் அவரைக் கொலைசெய்யவே அவர் மனைவியும் அவர் உடலைத்தழுவி யிறந்தனள். இவ்வாறு தாய்தந்தையரையிழந்து தனித்திருந்த வேதவதி தகப்பனகருத்தை முற்றுவித்து விஷ்ணுவையே மணம்புரியும்படி தவஞ்செய்துகொண்டிருந்தாள். அதுசமயத்தில் இராவணன திக்குவிஜயம்பண்ணிக்கொணடு அம்மார்க்கமாகவந்து இந்தப்பெண்ணைக்கண்டு மோகித்து இந்தப்பெண்ணினுடைய விரத்தாந்தமெல்லாந் தெரிந்து எவ்வகையிலும் இவளைப்புணரவேண்டுமென்னுங் கருத்துடையவனாய்ப் பற்பல இதமான மொழிகளைக்கூறினான். அதுகேட்ட வேதவதி சற்றும் இணங்காததைக்கண்டு அரக்கன் காமவெறி மீறி அம்மனுடைய மயிரைப்பற்றியிழுத்துப் பலாதகாரப்படுத்தினான். உடனே அம்மன் சினந்து பாதகன்தீண்டிய கூந்தலைத் தனது கையாலறுத்துவிட்டு நெருப்பைமூட்டி அவனைநோக்கி "அடாபாதகா! உன்கையாற் பரிசித்தவுடலை இனியான் வைத்திருக்கமாட்டேன். இதோ தீயிற்பாய்ந்து உயிரைவிடுகின்றேன். உன்னை வதைக்க நானே மறுபடி பிறப்பேன். இப்போது உன்னைச் சபிப்பேனேயாகில் என்தவங் குறைபடும்" என்று சொல்லித் தீயிற்குதித்துவிட்டுப் பின்பு இலங்காபுரியில் பொற்றாமரைமலர்மேல் ஒரு திவ்ய குழந்தைவடிவாயெழுந்திருந்தனள். இராவணன் வழக்கப்படி சிவபூசைக்குவேண்டிய மலர் கொய்யும்படி அத்தடாகத்தருகேசென்று இக்குழந்தையைக்கண்டு பேரவாவோடும் எடுத்துவந்து தனது மாளிகைசேர்ந்து இந்தக்குழந்தையைத் தானே வளர்த்துக்கொள்ளும்படி தீர்மானித்துச் சோதிடர்களைய

ழைப்பித்துக்கேட்கவே அவர்கள் இந்தப்பெண்ணினால் இந்நகரத்துக்கு இடையூறுவருமெனப் புகன்றனர். அதையுணர்ந்த இராவணன் ஒரு பேழையைச்செய்து அதில் இவ்வ குழந்தையை உட்புகுத்திச் சமுத்திரத்தில் விட்டனன். அப்பெட்டியானது ஜனக மகாராஜனுடைய மிதிலாபுரியின் கடற்கரையோரஞ்சேர்ந்து மண்ணினாலே மூடப்பட்டிருந்தது. பின்பு ஜனகன் புத்திரகாமேஷ்டியென்னும் யாகஞ்செய்தவற்கு யாகசாலையைச் செப்பமிடத் தான்பொன்னேர்கொண்டு உழுதான். உழவே கொழுவினுனியில் இப்பெட்டியகப்பட்டு திறந்துபார்க்கையில் பெண்குழந்தையாயிருக்கக்கண்டு வியந்து வளர்த்தனன். அம்மனும் சீதை என்றும் பெயரைத்தாங்கி விஷ்ணுவினுடைய அம்சமாகிய ஸ்ரீராமபிரானை மணந்து இராவண சம்மாரத்துக்கு ஏதுவாயினள். என்பதாம்.

(h) உமைக்கொருபாகந் தந்தவரலாறு:—பிருங்கிமா முனிவரென ஒருமுனிவரிருந்தனர். அவர் உமாதேவியை வலம்வராமல் சதாகாலமும் சிவபிரானையாத்திரம் வலம்வந்து நமஸ்கரித்துச் செல்லுவது வழக்கம். இதிப்படியிருக்க ஒருநாள் உமாதேவி பரமசிவனை நோக்கி பிருங்கிமாமுனிவன் ஒருநாளும் நம்மிருவரையும் வலம்வாராமல் உம்மைமாத்திரம வலம்வரும்காரணம் யாதெனவினவ அதற்குச் சிவபெருமான் இஷ்டசித்தி பெறவிரும்புவோர் உன்னையும், மோக்ஷத்தைபெற விரும்புவோர் என்னையும் வலம்வருவார் என்றனர். இதுதெரிந்துணர்ந்த அம்மனும சுவாமியை எக்காலமும் பிரியாமல் ஒருடலாயிருக்கவேண்டுமெனக் கருதி அதற்கேற்ற தவத்தைச்செய்து இடதுபாகத்தையடைந்தனள் என்பதாம். இதுபற்றியே சிவபிரானுக்கு அர்த்தநாரீசுவரர் என ஒரு திருநாமமுமுளது. ஆதலால் "உமைக்கொரு பாகத்தொருவனும்" என்னப்பட்டது. (இரா-7.)

(i) திங்களின்கலை தேய்வதும வளர்வதுமாகிய வரலாறு:—தக்கனென்பவன் தான்பெற்ற பெண்கள் (50) பேரில் (27) பெண்களைச் சந்திரனுக்கும், மற்றப்பெண்களைக் காசியமுனிவருக்கும், மனுதருமனுக்கும் விவாகம் புரிவித்தனன். பின்பு சந்திரன் நட்சத்திரங்களாயிருக்கும் இந்த (27) பெண்கள்மீதும் ஒருபடித்தான அன்புவையாது உரோகணிமீது மிகுந்த அன்பு பாராட்டிவருகையில் மற்றப்பெண்கள் தந்தையாகிய தக்கனுக்கறிவிக்க அவன் சந்திரனையழைப்பித்து வேண்டிய நீதிமொழிகளைக்கூறச் சந்திரன் கேளாமையால், உனது பதினாறுகலை (கலை=கிரணம்.) யும் நாளொன்றுக்கு ஒவ்வொன்றாகத் தேயக்கடவதெனச் சபித்தான். இப்படி ஒவ்வொருகலையாகத் தேயப்பட்ட சந்திரன் ஒற்றைக்கலையான காலத்தில் பரமசிவனை அடைக்கலம்புகப் பரமசிவன் அச்சந்திரனைத் தமது சடையிற்றாங்கி மீண்டும் வளரக்கடவதென்று அனுக்கிரகஞ் செய்தனர். ஆதலால் "கலையாழித் திங்களெனப்பட்டது." (இரா-29.)

## 5. Question.

நீர்படித்த கம்பராமாயணச்செய்யுளில் (1) அவையடக்கம், (2) நாட்டுச்சிறப்பு, (3) அரசன்சிறப்பு இவற்றைக்குறிக்குஞ் செய்யுள் ஒவ்வொன்று எழுதுக.

## Answer.

(1) முத்தமிழ்த் துறையின் முறை போகிய
உத்தமக் கவிகட்கொன் றுணர்த்துவென்
பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும்
பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ. } அவை யடக்கம்.

(2) கலஞ்சுரக்கும் நிதியங் கணக்கிலா
நிலஞ்சுரக்கு நிறைவள நன்மணி
பிலஞ்சுரக்கும் பெறுதற் கரியதங்
குலஞ்சுரக்கு மொழுக்கங் குடிக்கெலாம். } நாட்டுப் படலம்.

(3) தாயொக்கு மன்பிற் றவமொக்கு நலம்பயப்பில்
சேயொக்கு முன்னின் றொருசெல் கதியுய்க்கு நீரான்
நோயொக்கு மென்னின் மருந்தொக்கு நுணங்குகேள்வி
ஆயப் புகுங்கா லறிவொக்கு மெவர்க்கு மன்னோ. } நகரப் படலம்.

## 6 Question

(a) இருவர்க்கொருதனிக் கொழுநன் யார்?

(b) கமலப்பெருஞ் செல்வக்கடவுள் யார்?

(c) எழுதரிய திருமேனிக் கருங்கடல்யார்?

(d) இவ்விருந்த வள்ளலையே யனையான் யார்?

(e) நின்றவுயிரெல்லாந் தன்னுயிரெனக் கருதுந் தன்மையவன் யார்?

(f) செம்பொற் பருவரையும், வெள்ளிப்பருப்பதமும் போல்வார் யார்?

## Answer

(a) சுப்பிரமணியர் (b) பிரமன் (c) இராமபிரான் (d) பரதன் (e) தசரதன் (f) இலட்சுமணரும் சத்துருக்கரும்.

## 7. Question.

(a) கடலிடைக்கலந்த நீத்தம் எப்படியிருந்து எப்படியாயிற்று?

(b) இருவர்க்கொருதனிக் கொழுநன் என்பதற்கு இருவிதபொருள் கூறுக.

(c) தசரதமகாராசன் எவற்றால் எவற்றையொத்தான்?

(d) விசுவாமித்திரர் அடைக்கலம் புகுதற்குக் குறித்த இடங்களெவை?

(e) "கண்ணிலான் பெற்றிழந்தா னெனவுழந்தான்" என்பதால் விளங்கும் ஞாயமென்ன?

(f) வண்மையும், திண்மையும், உண்மையும், வெண்மையும் ஏன் அந்நாட்டில் விளங்குதலில்லை?

(g) கோபத்திலமிக்கார் யார்?

(h) சங்குறை கரத்தோடுதாங்கிய மற்ற ஆயுதங்களெவை?

## Answer.

(a) அளவில்லாத வேதங்களினால் சொல்லப்பட்ட பிரமம் ஒன்றாயிருந்ததுபோல முதலில் ஒன்றாகவிருந்து, அப்பிரமம் சமயங்கள் தோறும் பரவியதுபோலப் பின்பு ஏரி, குளம், நதிமுதலிய இடங்களிற் பரவியது.

(b) (1) தெய்வயானை, வள்ளியம்மன், என்றும் இருவர்க்கும் ஒப்பற்றகணவனாகிய சுப்பிரமணியன (2) ஸ்ரீதேவி, பூதேவி என்னும் இருவர்க்கும ஒப்பற்றகணவனாகிய திருமால். (பிற்பட்ட அருத்தம் பொருத்தமிலது.

(c) அன்பினால் மாதாவையும், நன்மையைச்செய்வதினால் தவத்தையும், முன்னின்று யாவரையும செல்லத்தக்ககதியில சேர்ப்பதனால் புதல்வனையும், துன்பத்தரும் நோய்க்குத் தண்டிப்பதாகிய மருந்தையும், நூற்கேள்விகளைத் தெரிவிக்கும் தன்மையில அறிவையும ஒப்பாவான்?

(d) கயிலாசமலை, திருப்பாற்கடல், பிரமவுலகம், சுவர்க்கவுலகம், திருவயோத்தி இவையே.

(e) தசரதமகாராசன் பிறவிக்குருடன்போல அறுபதினாயிரம் வருஷம் புத்திரனில்லாதிருந்து (அப்பிறவிக்குருடனுக்குத் தவத்தினால இடையே கண்கிடைத்ததுபோல) புத்திரகாமேஷ்டியென்னும் யாகத்தினால் தனக்கு இடையே புத்திரப்பேறு கிடைக்கப்பெற்று (அப்பிறவிக்குருடன் மீட்டுங்கண்ணை யிழந்ததுபோல) தானும் புத்திரனை யிழக்கும்படி நேர்ந்ததால் "கண்ணிலான்பெற்றிழந்தானெனவுழந்தான" என்னப்பட்டது.

(f) சிறிதும் அந்நாட்டில் தரித்திரமென்பதில்லாமையினால் வண்மையாகிய ஈகைத்தொழில் விளங்குதலில்லை. எதிர்த்து போர்செய்கின்றவர்கள் இல்லாமையினால் அந்நாட்டாருடைய திண்மையாகிய பராக்கிரமம் விளங்குதலில்லை. அந்நாட்டார் பொய்பேசுவதற்குத் தெரியாதவராகையால் உண்மை விளங்குதலில்லை. அந்நாட்டாருக்குப் பலவாகிய நூற்கேள்விகள் பொருந்தியிருப்பதினால் அறிவில்லாமையென்பது சிறிதுமில்லையாம்.

(g) விசுவாமித்திரமுனிவரும், துருவாசமுனிவருமாம்.

(h) சங்கு, சக்கரம், வில், வாள், தண்டு, இவையே பஞ்சாயுதம்.

## 8. Question.

(a) (1) இராமபாணம் எதுபோல உருவிச்சென்றது? (2) எவ்வெப்பொருளை உருவியது? இவற்றைக்குறிக்கும் பாகத்தைப் பாட்டிலிருந் தெடுத்தெழுதுக.

(b) "கைவண்ணமங்குக்கண்டேன் கால்வண்ணமிங்குக்கண்டேன்" என்று யார் யாருக்குச் சொல்லினர்? சந்தர்ப்பமென்ன?

(c) "கோமகன்றன் டன்னிருமுன்னையுருக் கொடுத்திவன் போக" இது யாருக்கு யார்சொன்னது? சமயமென்ன?

(d) மறைநான்கு மனையார்கள் எப்படி வளர்ந்தனர் ?

(e) "சொலலொக்குங் கடியவேகச்சுடுசரம்" எனபதிலுள்ள உபமானத்தை விளக்குக.

(f) அயோத்தியோடுசேர்த்து எணணப்பட்ட புண்ணியக்ஷேத்திரங்க ளெவை ?

(g) "யாவா இராகவனன்றி மாதவம் அறததொடும் வளர்த்தார்" இதற்கு இரணடருத்தம் வரைக.

(h) "பித்தர்சொன்னவும், பேதையர்சொன்னவும், பத்தர்சொன்னவும் பன்னப்பெறுபவோ" இதனுல் விளங்குவதென்ன ? இச்செய்யுளுக்குப பெயரென்ன ?

(i) தசரதனை அறமூர்த்தியென்றதேன் ?

## Answer

(a) (1) கல்லாப்புலவர்க்கு நல்லோர்சொன்ன பொருளெனப போயதனறே.

(2) உலையுருவக் கனலுமிழ்கட் டாடகைதன் னுரமுருவி மலையுருவி மரமுருவி மணணுருவிற றெருருவாளி.

(b) விசுவாமித்திரா இராமனைநோக்கிச் சொல்லியது. விசுவாமித்திரரும், இராமபிரானும் மிதிலாநகரத்தருகே போகும்போது இராமருடைய பாதஙகளபட்டுக கல்லுருவாயிருந்த அகலிகை பெணணுருவாயினதால அதைககணட விசுவாமித்திரர் இராமனைப்புகழ்ந்து, தாடகைசமமரத்தில் கைவலியும், இஙகுத திருவடிவலியும் கணடேனென்றா.

(c) விசுவாமித்திரர் ஜனகமகாராசன் சபையில் சொல்லியது. ஜனகன் நம்மிடத்திலிருக்குமவிலலை இச்சிறுவன் வளைப்பானே ? இல்லையோவென ஐயுறறநேரத்தில் இராமபிரானைப்புகழ்ந்து விசுவாமித்திரர் பேசியருளினது.

(d) முதன்மையாகிய நூற்பொருளையறிதலில் சாரதிக்குத் தலைவர்களாகவும், வில்வித்தைகள முழுதும் தோல்வியடைநத பகைவரைப்போல ஏவிய தொழில்களைசசெயயவும், பூரண சந்திரோதயத்திற் பொங்கியெழும் அலைகடலைபபோல அறிவிலுயர்ந்து வளர்ந்தார்கள்.

(e) பெரியோர்கள் அனுக்கிரகித்தாலும், சபித்தாலும் அச்சொற் பயன்தவறுதலுபோல இராமபாணமும் குறிதப்பாது என்பதாம்.

(f) அயோத்தி, மதுரை, மாயை, காசி, காஞ்சி, அவந்தி துவாரகை என ஏழு.

(g) (1) இராகவனைக் குறிக்நல்லாமல் மாதவத்தை அறத்தொடுமே வளர்ததாராயாவர் ? (2) இராகவனேயல்லாமல மாதவத்தை அறத்தொடுமே வளர்ததார யாவா ?

(h) பித்தர் முதலியோர் சொல்லிய சொற்களிலுள்ள குற்றங்களைப் பெரியோர் மதியாது இகழாததுபோல எனது செய்யுளிலுள்ள

குற்றங்களையும் ஆராய்ந்தெடுத்து என்னை இகழாமற் பாதுகாப்பனெனக் கிரந்தகர்த்தா சொல்லுகின்றூர். இக்கவிக்கு அவையடக்கமெனப்பெயர். அவையடக்கமாவது = கற்றோர்சபைக்கு அடங்கி நடப்பது.

(i) தன்னுயிர்போல மன்னுயிர்களைக் காத்திரக்ஷிப்பவனுதலால் இவ்வாறு கூறப்பட்டது.

## 9. Question.

(a) இராமர், பரதர், இலக்குமணர், சத்துருக்கர், என்னுமிந்நால்வரும் யாருடைய அமிசமாகவிருந்து திருவவதாரஞ் செய்தார்கள்.

(b) இந்நால்வரும் எவ்வாறு பிறந்தனர் ?

(c) இந்நால்வரையும் பெற்ற தாய்மார்பெயரை எழுதுக.

(d) இந்நால்வருடைய பெயருக்கும் அர்த்தமென்ன ?

(e) இவர்களுடைய திருமேனியின் நிறமென்ன ?

(f) தசரதன், இராகவனை, புரந்தரன், விஸ்வாமித்திரன், இமையோர், நான்முகன், அயோத்தி இப்பெயர்களுக்குச் சொல்லைப்போலப் பொருளெழுதுக ?

(g) இராமர் ஆட்சிசெய்த-நாடு-நகர்-ஆறு-மலை-இவற்றின் பெயரென்ன ?

(h) (1) இராமருடைய வமிசம்யாது ? (2) வமிசம் எத்தனை ?

(i) இராமாவதாரஞ் செய்தவற்குக் காரணமென்ன ?

## Answer.

(a) இராமர்—விஷ்ணு அமிசம். பரதர்—பாஞ்சசன்னியமென்னும் சங்கினது அமிசம். இலக்குமணர்—ஆதிசேடனுடைய அமிசம், சத்துருக்கர்—சுதரிசனமென்னும் சக்கரத்தினுடைய அமிசம்.

(b) தசரதமகாராசன் அறுபதினாயிரம் வருஷம்வரையில் புத்திரப்பேறில்லாதிருந்து தமது குலகுருவாகிய வசிட்டருடைய ஆக்கினையால் கலைக்கோட்டுமுனியை அழைத்துவந்து புத்திரகாமேஷ்டி செய்யவே அக்கினியினின்றும் புறப்பட்டுவந்த பூதமொன்று கொண்டுவந்துகொடுத்த பிண்டபிரசாதத்தை அவ்வரசன் தனது மனைவியர் மூவருக்கும் கொடுக்கவே அதைவாங்கியுண்டவர்கள் அதனுல் திருக்கருக்கொண்டு இந்நால்வரையும் பெற்றெடுத்தார்கள்.

(c) கௌசலாதேவி ஸ்ரீராமனையும், கைகேயிதேவி பரதாழ்வானையும், சுமித்திராதேவி முதலில் இலக்குமணப்பெருமாளையும், பின்னர்ச் சத்துருக்கனையும் பெற்றார்கள். (இராமர், பரதர், இலக்குமணர், சத்துருக்கர் முறையே ஒருவர்க்கொருவர் மூத்தவராம்.)

(d) இராமர்=களிப்பிப்பவர். பரதர்=உலகைத்தாங்குபவர். இலக்குமணர்—அழகுடையார். சத்துருக்கர்—சத்ருநாசர்.

(e) இராமர்—கரியதிருமேனி. பரதர்—பொன்னிறம். இலக்குமணர்—பொன்னிறம். சத்துருக்கர்=வெள்ளிநிறம்.

(*f*) தசரதன் = பத்துத்திக்கிலுஞ் செலுத்துந் தேருடையான்.
இராகவன் = இரகுவென்னும் அரசன்மரபிற்பிறந்தோன்.
புரந்தரன் = பகைவருடலைச்சேதிப்பவன். (இந்திரன்.)
விஸ்வாமித்திரன் = ஆக்கலும், அழித்தலுமுடையான்.
இமையோர் = இமைகொட்டுதலில்லாதவர். (தேவர்கள்.)
நான்முகன் = நான்குமுகங்களையுடையான். (பிரமன்.)
அயோத்தி = யுத்தஞ்செய்து வெல்லப்படாதது.

(*g*) கோசலநாடு, அயோத்திநகரம், சரயுநதி. இமயமலை.

(*h*) (1) சூரியவம்மிசம் (2) சூரியன் சந்திரன், அக்கினி, என மூன்றுவமிசம் உள்ளன.

(*i*) இராக்கதருடைய உபத்திரவம் பொறுக்கமாட்டாத தேவர் முனிவர்களுடைய இடுக்கணைத்தீர்த்து அறத்தை நிலைபெறச்செய்வ தற்கேயாம்.

## 10. Question.

(1) ஐவர்யார் (2) மறைநான்கு என்ன (3) ஏழுலகு எவை (4) நன்றுஞ்செய்வதற் கிடையூறானவை எவை? (5) முத்தமிழ் எவை (6) வள்ளல்கள் யார் (7) கற்பகமுதலிய தருக்களெவை. (8) திசைகளெத்தனை? (9) வினையெத்தனை.

## Answer.

(1) ஐவர் – மெய், வாய், கண், மூக்கு, செவி, என்னும் ஐவர்.

(2) மறைநான்கு – இருக்கு, தைத்திரியம், சாமம், அதர்வணம்.

(3) நாவல், இறலி, குசை, தெங்கு, புட்கரம், கிரவுஞ்சம், கமுகு.

(4) காமம், வெகுளி, மயக்கம், எனமூன்று,

(5) இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ், என மூன்று.

(6) குமணன், சகரன், சகாரன் செம்பியன், துந்துமாரி, நளன், நிருதி (இவர்கள் முதலெழுவள்ளல்) அக்குரன், அந்திமான், அரிச்சந்திரன், கன்னன், சந்திமான், சிசுபாலன், தந்தவக்கிரன் (இவர்கள் இடையெழுவள்ளல்) எழினி, ஓரி, காரி, பாரி, நள்ளி, பேகன், மலையன். (இவர்கள் கடையெழுவள்ளல்) ஆக இருபத்தொருபேர்.

(7) கற்பகம், சந்தானம், மந்தாரம், பாரிசாதம், அரிச்சந்தனம். என ஐந்து.

(8) கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு, வடகிழக்கு, வடமேற்கு, தென்கிழக்கு, தென்மேற்கு என எட்டு. அன்றியும் ஆகாயத்தையும் பூமியையுங் கூட்டிப் பத்து என்பாருமுளர்.

(9) நல்வினை, தீவினை, யென இரண்டு.

## 11. Question.

அடியின்வருஞ் சொற்றொடர்களுக்குத் தெளிவாகப் பொருள் எழுதுக.

(1) எதிரின் மிடல்வீரமு மீகையு மெண்ணில் யாவும்.
(2) இன்றளிக்கும் பகலுக்கே னிடைதுயிற்கு மிழலிருக்கை.

(3) குன்றனிக்குங் குலமணித்தோட் சம்பரனை.

(4) முறைசெய்து கடைத்தலையான் முன்மொழியப் பின்மொழி முனிவனுங்கே.

(5) அருவலிய திறலினரா யறங்கெடுக்கும் விறலரக்கர்.

(6) வெருவரச்சென் றடைகாம வெகுளியென நிருதரிடை விலக்காவண்ணம்.

## Answer.

(1) குற்றமற்ற பலம்பொருந்திய வீரமும், பராக்கிரமமும் கொடையும் ஆராயுமிடத்து மற்ற குணங்கள் யாவும்.

(2) இனிய தளிர்களையுடைய கற்பகவிருட்சங்கள் நல்லதேனை இடையில் துளிக்கின்ற நிழலில் அரசிருத்தல.

(3) மலையினது அழகைக்கொடுக்கின்ற பலஜாதிரத்தினங்களால் செய்யப்பட்ட அணியணிந்த தோள்களையுடைய சம்பராசுரனை.

(4) பேரிகைமுழக்கம் நீங்காத முற்றத்தையுடைய தசரதன் முன்னமேசொல்ல முனிவன் பின்னர்ச்சொல்லுவானுங்கே.

(5) பிறரால் வெல்லுதற்கரிய மிகுந்த வலிமையையுடையவர்களாய் தருமத்தையழிக்கின்ற வெற்றியையுடைய அரக்கர்கள்.

(6) அஞ்சும்படி மேலிட்டுப்போர்செய்கின்ற காமமும், வெகுளியும் போல இராக்கதர் மத்தியில் விலக்காதவிதம்.

## 12. Question.

(1) அன்மொழித்தொகை (2) இருபெயரொட்டுப் பண்புத்தொகை (3) முதனிலைத் தொழிலாகுபெயர் (4) காரணவாகுபெயர் (5) பண்பாகுபெயர் (6) ஒருபொருட்பன்மொழி (7) வினைத்தொகை நிலைத்தொடர் (8) தொழிலடியாகப் பிறந்தபெயர் இவற்றிற்கு இராமாயணத்தில் நீர் படித்தபாடத்துள் உதாரணம் எடுத்துக்காட்டுக.

## Answer.

(1) ஆண்டகை, பெருந்தகை=அன்மொழித்தொகை.
(2) கரதலம், குன்றக்கல்=இருபெயரொட்டுப் பண்புத்தொகை.
(3) கனி, அடி - முதனிலைத் தொழிலாகுபெயர்.
(4) சிலை, குலமலர் — காரணவாகுபெயர்.
(5) வள்ளல், செம்மல்=பண்பாகுபெயர்.
(6) அடங்கானி, பெருந்தடங்கண்=ஒருபொருட் பன்மொழி.
(7) சுடுசரம், உமிழ்கண்=வினைத்தொகை நிலைத்தொடர்.
(8) பிறை, நீத்தம்=தொழிலடியாகப் பிறந்தபெயர்.

## 13. Question.

அடியில்வருபவைக்குப் புணர்ச்சிவிதியும், நன்னூல்சூத்திரமும் தெளிவாக எழுதுக.

(*a*) மாண்+நகர். (*b*) பொய்+மாண். (*c*) அருமை+உயிர். (*d*) காலன்+வேலான். (*e*) நுணங்கு+கேள்வி. (*f*) நாடு+அணி.

## Answer.

(a) மாண்+நகர்=மாணகர். குற்றெழுத்தைச்சாராத ணனக்கள் வருமொழி நகரந்திரிந்தபின் கெடும். "குறிலணைவில்லா ணனக்கள வந்த, நகரந்திரிந்துழி நண்ணுங்கேடே" (மெய்-சூ-7.) இவ்விதியால ஈற்றுணகரங்கெட்டு "ணலமுன்றனவும் ளனமுடன்னவும், ஆகுந தநக்கள் ஆயுங்காலே" (மெய்-சூ-34.) இவ்விதியால் வருமொழி நகரம் ணகரமாகத்திரிந்தது.

(b) மொய்+மாண்=மொய்ம்மாண். குற்றெழுத்தைச்சார்ந்தயகர மெய்யின்பின் வருமொழிமுதலில் மெல்லினம் வந்தால் இரட்டிக்கும். "எண்மூவெழுத்திற் றெவ்வகைமொழிக்கு, முனவருஞணமய வக்கள் இயல்பும், குறிலவழி யத்தனி யைநொது முன்மெலி மிகலுமாம்" (உயி-சூ-8.) இவ்விதியால் குறிலைசசார்நதயகரத்தினபின மெல்லினமாகிய மகரமிகுநதது.

(c) அருமை+உயிர்=ஆருயிர். "ஈறுபோதல்" என்றதனல் அருமையின்மை விகுதிகெட்டு "ஆதிநீடல்" என்றதனல் அகரம ஆகாரமாகநீண்டு "இன்னபிறவும் பண்புக்கியல்பே" எனறதனல நடுநின்ற உகரங்கெட்டது. (பத-சூ 9.) வருமொழி உகரம நிலைமொழியீற்று மெய்யின்மேலேறியதற்கு விதி "உடனமேலுயிர்வந மதானறுவதியல்பே" (மெய்-சூ-1.) எனபதனறகொள்க.

(d) காலன்+வேலான்=காலவேலான். நிலைமொழியீற்று னகரங் கெட்டது சந்தி. "பொதுப்பெயாஉயாதிணைப் பெயாகளஈற்று மெய் வலிவரின் இயல்பாம் - ஆவியரமுன வனமை மிகா சில விகாரமாம் உயர்திணை" (உயி - சூ-9.) சில விகாரமாம்உயர்திணை எனறதனல் உயர்திணைப் பெயரீற்று மெய்கெட்டது.

(e) நுணங்கு + கேள்வி = நுணங்கு கேள்வி "வன்றொடரல்லன முன் மிகா அல்வழி" (உயி-சூ - 31.) இவ்விதியால் அலவழிப் புணாசசியாகிய வினைத்தொகைநிலைத்தொடரில் இயல்புபெற்றது.

(f) காடு+அணி=காட்டணி. "நெடிலோ டுயிர்த்தொடர் குற்றுகரங்களுள் டறவொற்றிரட்டும் வேற்றுமை மிகவே" (உயி-சூ-33.) என்றதனல் நிலைமொழியில் டகரமெய் இரட்டித்து காட்டு என்றாகி "உயிர்வரின் உக்குறள் மெய்விட்டோடும். யவவரின இய்யாம் முற்றும் அற்றொரோவழி" (உயி சூ-14.) இதனல் நிலைமொழியீற்று+குற்றியலுகரம்கெட்டு, "உடனமேல உயிாவந்தொனறுவதியல்பே" (மெய்-சூ-1.) என்றதனல நின்ற மெய்யோடு உயிாசம்பந்தப்பட்டது.

## 14. Question.

இதன் கருத்தடங்கிய செய்யுளொன்று பழமொழியில் இருந்தெடுத்தெழுதுக.

"கல்லொக்கு நெஞ்சிற்றங்கா தப்புறங் கழன்றுகல்லாப்
புல்லர்க்கு நல்லோர்சொன்ன பொருளெனப் போயதன்றே"

### Answer.

பூத்தாலுங் காயா மரமுமுள மூத்தாலும்
நனகறியார் தாமு மனியுளர் - பாத்தி
விதைத்தாலு நாறாத வித்துள பேதைக்
குரைத்தாலுந் தோன்றா துணர்வு. [பழ-39.]

## அரிச்சந்திர புராணம்.

---

### 1. Question.

(*a*) (1) அரிச்சந்திரன் (2) சந்திரமதி (3) லோகிதாசியன் இவர்கள் முற்பிறப்பில் யார்? எனிப்படி யவதரித்துத் துன்பமடைந்தார்கள்.

(*b*) அரிச்சந்திரன்கதையைச் சுருக்கியெழுதுக.

(*c*) அரிச்சந்திரபுராணஞ்செய்த கவிராயன் யார்? அவர் சரித்திரமென்ன?

(*d*) அப்புலவரால் செய்யப்பட்ட வேறுநூலெவை.

### Answer.

(*a*) (1) அரிச்சந்திரன் செய்தி:—முன்னொருகாத்தில் நீலலோகிதன் என்னும் அரசனொருவனிருந்தனன். அவன் மூன்றுலகத்திலும் தனது செங்கோன்மை நடக்கும் ஆட்சிச்செல்வந் தனக்கு அருள் செய்யவேண்டுமெனத் தபதிற்சிறந்த விசுவாமித்திரமுனிவரைப் பிரார்த்தித்தான். அம்முனிவர் வேந்தனைநோக்கி நீ விரும்பியபடி மூவுலக அரசாக்ஷியும் கைகூடவேண்டுமென்றால் நீ எழுஜனனமெடுத்து ஜனனந்தோறும் விசேஷித்த தவமாவது முயலவேண்டுமெ, அவ்வாறு முடியாவிடின் ஒருஜனனத்தில் மிகவுந்துன்பத்தை யனுபவிக்கவாவதுவேண்டும். அஃதன்றி மூவுலக ஆட்சிகூடாது எனப் புகன்றனர். அதற்கு மன்னவன் நுமது ஆணைப்படியே ஒருஜனனத்திலேயே எல்லாத்துனபங்களையும அனுபவிக்கும்படி நேர்ந்தேனெனக்கூற முனிவர் அவ்வண்ணமே ஆகுகவென வரமீந்துசென்றனர். ஆதலால் அவ்வள்ளலே அயோத்தியாபுரிக்கு அரசனாகிய திரிசங்கு மகாராசனுக்குப் புதிரனாகப்பிறந்து அரிச்சந்திரனென்னும் பெயரினனாய் அரசுபுரிந்து விசுவாமித்திரரால் பலவகையாகிய துன்பங்களையெல்லாம் நுகர்ந்து, இறுதியில முனிவர்வாக்கியப்படி மூவுலக அரசாட்சியைக் கைக்கொண்டனன் என்பதாம்.

(2) சந்திரமதிசெய்தி:—முற்காலத்தில் இவ்வுலகில் சோதிமான் என்னும் வேந்தனொருவன் அறநெறிவழுவாது அரசாண்டு புத்திரனில்லாமல் வெகுதுன்புற்றுக் கடவுளைக்குறித்துத் தவமியற்றி ஒரு புதல்வியைப் பெற்றான். அக்குமரிபிறந்தகாலம் நல்லகாலம் அல்ல. மேலும் செல்வத்திற்கு அழிவு உண்டாகும். ஆதலால் எங்கு ஆவது விட்டுவிடவேண்டுமென்று சோதிடசாத்திரிகள் சொல்லவே மன்னவன் கலங்கி நின்றனன். இதையறிந்த அமைச்சன் அரசனுக்கு உறுதிமொழி சொல்லலாயினான். “முன் மதுரையென்னும் பேர்

பெற்றநகரத்தைச் சித்திரபானுவென்னுந் தோன்றல் ஆண்டனன். அவனுக்கு ஒருமகள் பிறந்தாள். மணிமாலிகையென்பது அவள் பெயர். அவள் ஒருவரையும் விவாகம்புரிய விருப்பமில்லாளாயிருக்கத் தந்தை கவலையுற்றுத் திருமாலைப் பிரார்த்திக்கவே அத்திருமால் ஓரரசகுமாரன் வடிவெடுத்து எய்தினன். மன்னவன் அக்குமாரனை நோக்கித் திருமாலென்றறியாமல உன் குலம் எது? பெற்றோர் யாவர்? பேர் என்ன? ஊர் என்ன? என்று வினவ அவன் நானோர் இராசபுத்திரன் காசிபர் கோத்திரத்தவன். பெற்றோரை நானறியேன், எனக்கு எல்லாம் இடந்தான் என்பேர் சீபதியென்றனன். அதற்கு வேந்தன் நீ யென்புதல்வியை மணம்புரியவேண்டுமென்று பிரார்த்திக்கவே அவ்வாறே மணம்புரிந்தனன். பின்னர் சிலநாளிருந்து தன்தேசம் செல்லவேண்டுமெனக்கூற அரசன் ஊருமில்லை உற்றாருமில்லையென்று முன்னமேசொல்லி இப்போது இவ்வாறு கூறுதல் தகுதியோ? என வினவினன். அதற்குத் திருமால் அவர்கள் தேடிவந்தால் உனக்கு இடர்வருமென்று கூறி மணிமாலிகையென்பவளுக்குமாத்திரந் தனது உண்மையைப்பகர்ந்து யாவருமறியாமல் அவளிடம் வந்துகொண்டு போயிருந்ததினால் அவள் கருவுற்றனள். இந்த இரகசியமறியாத தோழிமார் கணவனைப்பிரிந்தபின் நினதுமகள் கருவுற்றனளென்று நரபதிக்குச்சொல்லவே அவனுணர்ந்து தன்மகளை நித்திரைசெய்கையில் ஓர் பேழையில்வைத்து ஆற்றில்விட்டனன். அவள் திருப்பாற்கடலில் சேர்ந்து திருமாலால் ஆதரிக்கப்பட்டு விஷ்ணுவர்த்தமானனென்னும் ஒரு புதல்வனைப்பெற்றாள். அக்குமாரன் இவ்வுலகில் சால்மலீத்தீவையாண்டான். அதுவின் சாத்திரத்திற்கு அமைந்து அதுபோல உனது மகளையும் நீக்கிவிடின் அவளுக்கு நற்காலம் உண்டாயின் சிறப்படைவாள்'' என்று அமைச்சன் விசாரதன் கூறினன். அரசனும் அதற்கிணங்கி நித்திரை செய்துகொண்டிருக்குந் தனதுமகளைப் பெட்டியில்வைத்துப் பிரவாகத்தில் விட்டனன். அப்பெட்டியை மயனென்பவனெடுத்துப்பார்த்துப் பெண்ணிருக்கக்கண்டு வியந்துவிடுத்தவுடன் அவள் வணங்கிநின்றாள். அப்போது மயன் நீ தீர்க்க சுமங்கலியாயிருவென்று ஆசீர்வதித்தனன். எனக்கு விவாகமேயில்லை, என்னைத் தேசத்திற்கு அனிஷ்டமென்று ஆற்றில்விட்டதாகச் சொல்லினள். அம்மயன் எனது தவத்தினால் சந்திரமதி என்னும் பெயருடையவளாய் மாங்கல்ய சூத்திரத்தோடு பிறப்பாய் என்று அனுக்கிரகித்துப் போயினர். உடனே தீக்குழியிற்பாய்ந்து கன்னோசி நாட்டரசனாகிய மதிதயனுக்குப் புத்திரியாக சுமங்கல்ய சூத்திரத்தோடு பிறந்தனள். முன்பிறப்பின் பயனால் அரிச்சந்திரனைமணந்து இவ்வகைத் துன்பமெல்லாம் பட்டனள் எனபதாம்.

(3) லோகியதாசியன். செய்தி:—முன்னொருகாலத்தில் தக்ஷகன் என்னும் பாம்பானவன் இந்திரனிடம் போகும்போது தனது குமாரனையுங்கூட அழைத்துக்கொண்டுபோய் குபேரனுடைய பட்டணமாகிய அளகாபுரியினருகில் நிறுத்திவிட்டுத் தான்மாத்திரம் உள்ளே சென்றனன். அப்போது தக்ஷகனுடைய புத்திரனாகிய சிறுபாம்பானவன் அரம்பாஸ்திரீயின் மனைவாயிலுக்குக் குறுக்காகப் படுத்திருந்

தனன். இதையறிந்த குபேரன் மகனாகிய நளகூபரன் சர்ப்பம் இவ்விடம் வந்து படுத்திருப்பதால் கெடுதிவருமென நினைத்துத் தனது கைவாளால் அப்பாம்பைத் துண்டித்துக்கொன்றான். இதையுணர்ந்த தக்ஷகன் தனதுமகனை நளகூபரன் கொன்றபடியால் அவனைப் பார்த்து நீ பாம்பைக்கொன்றபடியால் அப்பாம்பினாலேயே கடிபட்டு நீ யிறப்பாயெனச் சபித்துப் பின்பு மிருதசஞ்சீவினிமருந்தால் தன் மகனையும் உயிர்ப்பித்தனன். இந்தச்சாபத்தை யேற்றுக்கொண்ட அந்நளகூபரன் அமிசத்தை யுடையவனாகவும், அரிச்சந்திரனுக்குப் புத்திரனாகவும், லோகிதாசியன் பிறந்து பழயசாபத்தின்படி இப்பிறப்பில் தக்ஷகனாகிய அப்பாம்பினாலேயே கடிக்கப்பட்டு உயிர் துறந்து பின்பு திரிமூர்த்திகளுடைய அனுக்கிரகத்தினால் அது நீங்கி மீளவும் உயிர்த்தெழுந்தனன் என்பது.

(b) அரிச்சந்திரனுடைய கதை:—பூர்வம் தேவலோகத்தில் கூடப்பட்ட ஓர் சபையில் தேவேந்திரன் அங்குள்ளவரை நோக்கிப்பூமியில் சத்திய விரதனாகவும், பரதாரகமனமில்லாதவனாகவும் ஒரு புருஷன் உண்டோ? வென்று வினவ அதற்கு வசிட்டமுனிவரெழுந்து சொல்லுகின்றார்:—"கோசலநாட்டில் அயோத்தியா நகரமென்றோர் பட்டணமுளது. அந்நகரத்தில் சக்கரவர்த்திகள் அறுவரில் ஒருவனாகிய எனது மாணாக்கன் அரிச்சந்திரனென்பான் அரசாண்டுவருகின்றான். அவன் சூரியவமிசத்தரசரில் ஒருவனாகிய திரிசங்கு மகாராசனுக்குப்புத்திரன். சத்தியந்தவறாத வாய்மையன். பரதாரகமனமென்பதைக் கனவிலும் நினையான் அவனுடைய அறநெறிவழுவாத செங்கோன்மையைப்பற்றி நான் சொல்லவல்லேனல்லவென்றார். உடனே விசுவாமித்திர முனிவரெழுந்து அதை மறுத்து எவ்வகையிலும் அவனை அசத்தியவானாகக் காட்டுகிறேனென்ன, இருவருக்கும் சபதம்நேர்ந்தது. அந்தச் சபதப்படியே விசுவாமித்திரர் பூமியில்வந்து ஒரு ஆரணியத்தி லிருந்துகொண்டு, சில முனிவர்களை அரிச்சந்திரன்பாலனுப்பித் தேவலோகத்தில் யாகஞ்செய்ய விசுவாமித்திர முனிவருக்கு ஒருவன் யானைமேலேறி இரத்தினத்தை யெறியும் உயரம் பொற்குவையல் வேண்டுமெனக் கேட்பித்தனர். அவ்வாறே அரசன் தரும்படி சம்மதித்தபின்னர் விசுவாமித்திரரே அம்மன்னவன் முன்னிலையிற்சென்று அந்நிதியைப்பெற்று, அவன் அடைக்கலத்திலேயே அப்பொருளை வைத்துக், காட்டிற்சென்று சிலமிருகங்களையனுப்பி அரசனுடைய நாடு நகரமெல்லாம் அழித்துவரக் கட்டளையிட்டார். அவ்வாறே அவைகள்செய்ய, வேந்தன்முனிந்து மிருகங்களை வேட்டையாட மனைவிமக்களோடும் வனத்திற்குச்சென்றான். இம்மிருகங்கள் இறந்துபோகக்கண்ட முனிவர் சினந்து ஹோமத்தினின்றும் ஒருகாட்டுப்பன்றியைத் தோன்றுவித்து அரசனிடமனுப்ப, அரசனுமதைப் பலவாறு துன்புறுத்தியலைப்பித்தான். அதுகண்டமுனிவர் மீளவும் சினந்து இரண்டு நீசஸ்திரீகளைத் தமது நாசித்தொளையினின்றும் பிறப்பித்துக் "காவலன்பாற்சென்று அவன் களிக்க நீங்கள் இன்னிசைபாடி அதற்குப் பரிசாக அவனது பூச்சக்கரகுடையாகுதல் உங்களை விவாகஞ்செய்யவாவது சொல்லுங்கள்" என்றனுப்பினார். இப்பெண்களுக்கு

சென்று அவ்வாறே இயற்ற, அரசனைதமறுக்கக், கடைசியாய் விசுவாமித்திரரோ நேராகச்சென்று மன்னவனைக்கண்டு பலவாறு இகழ்ந்து எனது பெண்களென்று மறியாமல் அவர்கள் கேட்டதை யில்லையென்றுமறுத்த நீயா ? சக்கரவர்த்தியெனக் கூற, அரசன் தகாதவற்றைக்கேட்டால் எப்படிக் கொடுப்பது ? அது தவிர வேறெவற்றைக்கேட்டாலுங் கொடுப்பேனென்று பணிந்தான். உடனே சமயம் வாய்த்ததென்று முனிவர் உனது இராச்சியமும், பொருளும் முற்றும் எனக்குத் தருவாயென்ன, அரசன் அப்படியே கையளித்தனன். இவையாவும் பெற்ற முனிவர் மன்னவனை நோக்கி: உன்பால் முன்னர் யாகத்திற்காகப்பெற்றபொருளை உன்னடைக்கலத்திலேயே வைத்துப் போனேனாதலால் அப்பொருளெங்கே ? யென, அரசன் அப்பொருளும் உம்முடைய இராச்சியத்தில்தா னிருக்கின்றதென்றான். முனிவர் அப்பொருளைநீக்கி நீ இராச்சியம் ஒப்புவியாததினால் அப்பொருளை நீக்கி நீ இராச்சியம் ஒப்புவியாததினால் அப்பொருளை வேறே நகரத்திற்சென்று சேகரித்துத் தரவேண்டுமென்ன, வேந்தனுஞ் சம்மதித்து 40-நாள் தவணையும்பெற்று முனிவர்கடன்வாங்க அனுப்பிய நக்ஷத்திரகனோடும் மனைவி மகனோடும் வழியில் பல துன்பங்களை நுகர்ந்து காசிநகரம்வந்து தனது மனைவியாளையும் மகனையும் ஒரு மறையோனுக்குவிற்று தான் மயானங்காக்கும் வீரவாகுவுக்கு அடிமையாகி துன்பமுற்றிருக்கையில் லோகிதாசியன் தான் அடிமைப்பட்டிருக்கும் பிராமணனுக்கு சமித்து முதலிய கொய்துவரச்சென்று பாம்பினால் கடிக்கப்படிறந்தனன். அதைக்கேள்விப்பட்ட சந்திரமதி காட்டிற்சென்று அந்நள்ளிரவில் மகனையெடுத்து மயானத்திற்சேர்த்து அங்குள்ள எரிகொள்ளிகளை அடுக்கி சமஸ்காரஞ்செய்ய யத்தனிக்கையில் அந்தச் சுடலைகாத்திருந்த அரிச்சந்திரனும் வந்து எனது எஜமானுக்குச் சேரவேண்டிய கூலியைக்கொடாமல் சுடலாகாதெனத் தடுத்தனன். உடனே சந்திரமதி மகனையங்குவைத்துவிட்டு தன்னெஜமானிடம்போய் பொருள்வாங்கிவரலாமென வரும்வழியில் அந்நகரத்தரசன் குமாரனைக் கள்ளர்கொன்று வழியிலெறிந்துவிட்டுப் போய்விடவே சந்திரமதி அக்குழந்தையையெடுத்து குழந்தைதக்காக இரங்கி யழுதனள். தேடிவந்தசேவகர் இவளே யிக்குழந்தையைக் கொன்றவளென்று பழிசுமத்தி அரசனிடங் கொண்டுபோகவே அரசனும் இவளைக்கொல்லும்படி வீரவாகுபால் ஒப்புவித்தான். அவனும் தன்னடிமையாகிய அரிச்சந்திரனை ஏவ அரிச்சந்திரனும் கொலைசெய்ய யத்தனிக்கையில் அப்பொழுதும் விசுவாமித்திரர்வந்து இப்போதேனும் ஒருபொய் சொல்லென்ன அரசனும் சந்திரமதியும் ஒருபோதும் சொல்லோமென மறுக்க முனிவரும் தனது எண்ணம் முற்றுப்பெறாமையைக்கருதி வசிட்டரிடஞ்செய்த சபதத்தின்படி மீளவும் தபஞ்செய்யச் சென்றனர். அப்பால் திரிமூர்த்திகளும் பிரசன்னமாகி அரிச்சந்திரனைக்கூவி சந்திரமதியை வெட்டவொட்டாமற் றடுத்து சத்தியவந்தனெனப் புகழ்ந்து நடந்த விர்த்தாந்தமெல்லாஞ்சொல்லி தத்தமிடஞ்சென்றனர். அவர்களனுக்கிரகத்தால் இறந்தமகனும் உயிர்பெற்றனன். அரசனும் சிம்மாசனாதிபதியாய் வாழ்ந்திருந்தனன் என்பதாம்.

(c) வீரகவிராயரென்பது அவருடைய இயற்பெயர். ஆசு, மதுரஞ், சித்திரம் வித்தாரம் ஆகிய நான்குகவிகளில் இவர் ஆசுகவிபாடுந் திறமையைப்பற்றி வீரனுசு கவிராயரென்னுஞ் சிறப்புப்பெயரும் இவர்க்குளது. இவர் சைவசமயத்தினரெனக் காப்புச்செய்யுளாற் றோன்றுகின்றது. இவருடைய மரபு இன்னதென விவரணமாகத் தெரியாவிடினும் சிலர் வேளாளமரபென உத்தேசிக்கின்றார்கள். பிறந்த இடம் நெல்லூர். இந்நூல் அரங்கேற்றியவிடம், பாண்டியநாட்டிலுள்ள திருப்புல்லாணியென்னுந் திவ்வியக்ஷேத்திரத்தில் சக்கரதீர்த்தக்கரையிலுள்ள ஒருமண்டபம். இவருடையகாலம் ஏறக்குறைய 350-வருடங்களுக்கு முற்பட்டது.

(d) சௌந்தரிய லகரி என்னும் பிரபந்தமும் சில தனிப்பாடல்களுமாம்.

## 2. Question.

(a) அரிச்சந்திரபுராணம் என்பதற்குப் பொருள் யாது?

(b) இலக்கணக்குறிப்பென்ன? சூத்திரமுண்டானால் கூறுக.

(c) இந்நூல் எத்தனை உறுப்படங்கிய பிண்டம்?

(d) இது எவ்வகைச் செய்யுளாற் செய்யப்பட்டது?

(e) இந்தச் சரித்திரம் முதற்கதையா? கிளைக்கதையா?

(f) ஆதியில் யாருக்கு யாரால் சொல்லப்பட்டது?

(g) இது தமிழ்ப்பாஷையில் வேறுபாவினாலும் செய்யப்பட்டுள்ளதா?

(h) அரிச்சந்திரனுடைய வமிசமென்ன?

## Answer.

(a) அரிச்சந்திரனுடைய பழமையாகிய சரித்திரத்தையுணர்த்தும் செய்யுட்களாலமைந்தநூல் என்பது பொருள்.

(b) அரிச்சந்திரன—உயர்திணை யாண்பாற்படர்க்கை இயற்பெயராகிய இடுகுறிப் பெயர்ச்சொல். புராணம்—பால்பகா அஃறிணைப் பண்புப்பெயர்ச்சொல். பழமை என்னும் பண்புணர்த்திய புராணமென்பது அக்காலத்து நிகழ்ந்த சரித்திரத்தை யுணர்த்துவதால் பண்பாகுபெயர். அச்சரித்திரம் தன்னையுணர்த்தும் செய்யுளையுணர்த்துவதால் காரியவாகுபெயர். அச்செய்யுள் தனது தொகுதியாகிய நூலையுணர்த்துவதால் கருவியாகுபெயர். அன்றிச் சினையாகுபெயருமாம். ஆகலால் இது மும்மடியாகுபெயர். அரிச்சந்திரன் + புராணம் என்பது கபிலரதுபாட்டு என்பதுபோல செய்யுட்கிழமைப் பொருளதாகிய பொருட்பிரிவின் கிழமைப்பொருளில்வந்த ஆறும் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். விரிந்தால் அரிச்சந்திரனது புராணம் என விரியும். நிலைமொழியீற்று னகரங்கெட்டது சந்தி. "பொதுப்பெயர் உயர்திணைப்பெயர்கள் ஈற்றுமெய்-வலிவரின் இயல்பாம் ஆவியரமுன் - வன்மை மிகா சில விகாரமாம் உயர்திணை" (நன்-உயி-சூ-9.)

(c) காண்டம், படலம், செய்யுள் என மூன்றுறுப்படங்கிய பிண்டமாம்.

(d) பலவகைப்பட்ட விருத்தங்களாற் செய்யப்பட்டுள்ளது.

(e) கந்தபுராணத்திலுள்ள ஓர் கிளைக்கதை.

(f) முந்தி பிரமதேவனால் நாரதருக்கும், பிந்தி சூதமுனிவரால் சௌனகாதி முனிவர்களுக்குஞ் சொல்லப்பட்டது.

(g) அரிச்சந்திர வெண்பாவென வெண்பாவினாலுஞ் செய்யப்பட்ட வேறு நூலும் உளது. அது இதற்குப்பிற்பட்டது.

(h) சூரியவமிசம். இராமருக்குப் பாட்டன்.

## 3. Question.

(a) அரிச்சந்திரனை யடிமைகொண்டவன் யார்? அவன்வரலாறென்ன?

(b) சந்திரமதியை யடிமைகொண்டவன் யார்? அவன்வரலாறென்ன?

## Answer.

(a) அரிச்சந்திரனுடைய தந்தையாகிய திரிசங்குமகாராஜன் தன்னைச் சரீரத்தோடு சுவர்க்கத்திற்கனுப்பும்படி தனது குலகுருவாகிய வசிட்டமாமுனிவரை வேண்ட, அம்முனிவர் அது முடியாதகாரியமென்று புகல, மன்னவன் அப்படியானால் சரீரத்தோடு சுவர்க்கமேற்றவல்ல ஆசிரியனைத் தேடிக்கொள்ளட்டுமாவென்றனன். உடனே முனிவர் சினந்து குருவாக்குக் கெதிர்வாக்குரைத்தமையால் சண்டாளனாய்ப் போகக்கடவையெனச் சபித்தனர். இப்படிச் சண்டாள வடிவங்கொண்ட வேந்தன் விசுவாமித்திரரைச் சரண்புகுந்தபோது அம்முனிவர் யாகமியற்றி அதினின்றும் ஒரு இரதத்தை யெழுப்பி அதில் மகாராஜனையேற்றித் தமது தபத்தின் வன்மையால் சுவர்க்கமேற்றினர். அவ்விடத்திலுள்ள தேவர்கள் சண்டாளன் சுவர்க்கம் புகுவதேதென்று அவமதிக்கையில் இயமன் காலாலே உதைத்துத் தேரோடு மன்னவனைத் தலைகீழாகத்தள்ளவே மன்னவன் விசுவாமித்திரரே அபயம் அபயமென்று கூறிவருகையில், விசுவாமித்திரர் சினந்து தபமகிமையால் அந்தரத்திலேயே வேறொரு சுவர்க்கத்தை யுண்டாக்கி அந்தச் சுவர்க்கத்தில் நரபதி திலகனை நிறுத்தினார். அதுவே திரிசங்குசுவர்க்கமென்னப்படுகின்றது. பின்பு இயமன் திரிசங்குமகாராசாவைப் புலையனென்று சுவர்க்கம் புகவொட்டாமல் உதைத்துத் தள்ளிய குற்றத்தால், விசுவாமித்திர முனிவரால் சபிக்கப்பட்டு இப்பிறப்பில் வீரசேனனுக்குப் புத்திரனாய் வீரவாகு எனனும் பெயரினனாய்வந்து அரிச்சந்திரனை அடிமைகொண்டு, சாபவிமோசனமானபின் தன்னுலகுசென்றான்.

(b) சக்களத்திமகனாகிய இயமனால் கால்முறியப்பட்ட சனி நடக்கும்படி வலியில்லாதிருந்து விசுவாமித்திரமுனிவருடைய அனுக்கிரகத்தால் முறிந்தகாலுங் கூடிவரப்பெற்றுத் தவஞ்செய்து கிரகபதமடைந்து பின்பு அம்முனிவரிட்ட கட்டளைப்படியே காலகௌ

சிகனென்னும் பெயருடையவனாகவந்து சந்திரமதியை யடிமை கொண்டனன்.

## 4. Question.

(a) நல்லோர் வகுத்தமுறைமையாம் அறங்கள்நாலெட்டு என்ன?

(b) "இறுக்கும் இறையன்றி யேறவுகவேம்" என்றதில் வாங்க வேண்டிய இறையெவ்வளவு? ஏன்?

(c) "சீரியாரெயினை நீடுகச்சிறிடின் யாரியாரஞ்சலென்பவர்" இதற்கு சொல்லப்பட்ட உபமானமென்ன?

(d) "முனிவாட்டமுற்றாய்" இதற்குக் காரணமென்ன?

(e) அரிச்சந்திரனோடுசேர்த்து எண்ணப்பட்ட சக்கரவர்த்திகள் யார்?

## Answer.

(a) அறங்கள் முப்பத்திரண்டு :—ஆதுலர்க்குச்சாலை, ஓதுவார்க் குணவு, அறுசமயத்தார்க்கு உண்டி, பசுவுக்குவாயுறை, சிறைச்சோறு, ஐயம், தின்பண்டம் நல்கல், அறவைச்சோறு, மகப்பெறுவித்தல், மகவைவளர்த்தல், மகப்பால் வார்த்தல், அறவைப்பிணஞ்சுடுதல், அறவைத்தூரியம், சுண்ணம், நோய்மருந்து, வண்ணார், நாவிதர், கண்ணாடி, காதோலை, கண்மருந்து, தலைக்கு எண்ணெய், பெண்போகம், பிறர்துயர்காத்தல், தண்ணீர்ப்பந்தல், மடம், தடம், சோலை, ஆவுரிஞ்சுதறி, விலங்கிற்குணவு, ஏறுவிடுதல், விலைகொடுத்து உயிர்காத்தல், கன்னிகாதானம் என்பவையாம்.

(b) அரசன் குடிகளிடத்தில் அவர்களுடைய வரவில் ஆறிலொரு பங்கு இறைப்பணம் வாங்கவேண்டியது. ஏனெனில்:—பிதிர்களுக்கும், தெய்வத்துக்கும், விருந்தினருக்கும், ஒக்கலுக்கும், தனக்குமாக ஐந்துபங்கு எடுத்துக்கொண்டு மற்ற ஒருபங்கை அரசனுக்குக் கட்ட வேண்டியதென அறநூலில் விதித்துள்ளது.

(c) "வாரிகாய்ந்து கொதித்திடின் மாற்றத்தண்ணீரியாவர் தருவர்" என்பதாம்.

(d) தேவலோகத்திலே வசிட்டமாமுனிவரோடு செய்துவந்த சபதப்படி அரிச்சந்திரனைப் பொய்த்திறத்தினருக்கக்கூடாமற்போயிற்றே யினியென்செய்வோம் மீளவுந் தவத்திற்குச் செல்லவேண்டுமென விசுவாமித்திரர் கருதினமையால் வாட்டமுற்றனர்.

(e) அரிச்சந்திரன், நளன், முசுகுந்தன், புருகுற்சன், புரூரவன், கார்த்தவீரியன் என ஆறுபேராம்.

## 5. Question.

அடியில்வருஞ் செய்யுட்கள் யாரைப்பார்த்து யார்சொல்லியது? அவை நேர்ந்த சமயமென்ன?

எந்த நல்லுயிரு மென்கிளொரு ரின்னுயிரு மன்னுயிர்களும்
நந்தி னும்முடல் படைக்கர கத்தினி லிருத்திவிடினும்

முந்த வந்தண ரறிக்கிட மொழிப்படி யளித்தபொருளைத்
தந்த தில்லையென வுன்றனெதிர் நின்றுனை செயத்தகுவதோ.

நல்லோர்வகுத்த முறையாமறங்க நாலெட்டி லொன்றுகுறையேம்
இல்லோரையுற்ப மிகழ்மொழிருக்கு மிறையன்றி யேறவுகலேம்
சொல்லோமறுத்துமுரையோ முரைத்ததுறவோர்கள்புத்திகடலேம்
எல்லோர்தமக்கு மினிதேவிளைப்ப மேதாகவர்ததிதுவே.

சேய்மையண்மையி லுயிர்க்கொருதுணை யெனச்சிறந்த
வாய்மையாலகந் தூய்மையா மற்றிலம்புயத்தைத்
தூய்மைசெய்வது நீரலாற்சொல்லின் வேறுளதோ
மோய்மைசெய்யினும் வாய்மையே நோன்பெமக்கறிதி.

## Answer.

(1) அரிச்சந்திரன் நாடு, நகர, முதலிய செல்வங்களையெல்லாம் விசுவாமித்திரனுக்குக் கொடுத்துவிட்டு மனைவிமக்களோடு காட்டிற் சென்று வருந்துகையில் அவ்விடத்தும் விசுவாமித்திரன்போய் நீகொடுத்தது இல்லையென்று ஒரு பொய்மாத்திரம் சொல்லையானால் இப்போதே எல்லாவற்றையுங் கொடுத்துவிடுகிறேனென்ற சமயத்தில் அரிச்சந்திரன் முனிவரைப்பார்த்து சொல்லியது.

(2) விசுவாமித்திரனுடைய ஏவுதலினால் பாம்பு கடித்திறந்து காட்டிற்கிடந்த லோகிதாசியனை எடுத்து மடியின்மீது வைத்துக்கொண்டு மகனைப்பார்த்துச் சந்திரமதி புலம்பிக்கூறியது.

(3) காசிநகரத்தரசனுடைய குழவியை வதைபுரிந்ததாக விசுவாமித்திரனுடைய மாய்கையால் பொய்க்குற்றஞ்சாட்டிச் சுடலைக்குக் கொண்டுவந்து சுடலையைக் காத்திருந்த அரிச்சந்திரனைநோக்கி இவளை வெட்டென்றுசொல்லவே அரிச்சந்திரனும் சத்தியந் தவறாமற் படிக்குத் தன்னை யடிமைகொண்ட புலையனுத்தரவினால் வெட்டும்படி யத்தனிக்கையில் முனிவர்வந்து இப்போதாகிலும் ஒருபொய் சொல்லையானால் எல்லாச் செல்வங்களையுந்தந்து விடுகிறேனென்றுகூற அதற்கு அரிச்சந்திரனும், சந்திரமதியும் முனிவரைநோக்கிக் கூறியது.

## 6. Question.

(a) "உனக்களித்த் வரசுரிமை ஒருகாலத்தும் மறுத்தினியான் வாங்கேன்" என்றதில் முனிவனுக் கரசளித்ததெப்படி.

(b) "அறைநீதிமுற்று முணரா வமைச்சை யணிவாயில்வைத்து மறியேம்" என்றதில் தோன்றும் விசேஷணமென்ன ?

(c) வாய்மையாகிய சத்தியத்தை எவ்வாறுவர்ணித்திருக்கின்றது?

(d) "பனியானனைந்து வெயிலாலுலர்ந்து" நின்றது யார்? ஏன்?

(e) "அனியாயவெங்கணரவாலிறந்த" இதில் அனியாயமென்ன?

## Answer.

(a) விசுவாமித்திரர் தமது நீசப்பெண்களை விவாகஞ் செய்து கொள்ளும்படி பீடித்தபோது அரிச்சந்திரன் அரசுமுற்றுந் தரச்

சொல்லினுந் தருவேன் இப்பெண்களை மணம்புணரினென்று வளவில் முனிவர் சமயம்வாய்த்ததென மகிழ்ந்து உலகமுழுவதையும் அரசன் நீருடன் அளிக்கும்படி கேட்டுப் பெற்றுக்கொண்டனர்.

(b) அரசர்களுக்குரிய அங்கங்கள் ஆறினுள் அவ்வரசனுக்கு ஒப்பாகிய அமைச்சன் கல்வியறிவில்லானாயின் அந்நாட்டில் முறையோடு செங்கோல் நடவாது. ஆதலால் அச்சிறப்பைக் கருதி, அறைநீதி முற்றுமுணரா வமைச்சையணிவாயில் வைத்தமறியேம். என்றான்.

(c) தூரமும் சமீபமும் ஆகிய எக்காலத்தும் எவ்விடத்தும் பெறுதற்கரிய உயிர்க்குத் துணையாகச் சிறந்ததென் வர்ணிக்கப்பட்டது.

(d) லோகிதாசியன். ஏனென்றால்:—லோகிதாசியன் தன்னையடிமைகொண்ட அந்தணனுடைய ஏவுதலினால் தர்ப்பை சமித்துக்களை ஒடித்துவரச் சூரியோதயத்துக்குமுந்தி காட்டிற்குச் சென்று வெயில்திரும்புவானாகையால் உதயத்துக்குமுன் பனியும் பின் வெயிலும் வருத்தின.

(e) என்னைக்கடியாமல் என்கண்பார்க்க என்புத்திரனைக் கடித்ததேயென்னும வருத்தத்தினால் "அணியாயவெங்கணரவு" என்றிரங்கினாள்.

## திருவாசகம்.

---

### 1. Question.

(a) திருவாசகம் என்பதற்குப் பொருள்யாது?

(b) இலக்கணம் யாது?

(c) இந்நூல் எந்தச்சமயத்தைக் குறித்தநூல்?

(d) இந்நூலினாற் பெறப்படும் பயனென்னை?

(e) இந்நூலாசிரியருக்கு எத்தனைப்பெயருண்டு? அவ்வவ் பெயர் யாரரால் கொடுக்கப்பட்டது? காரணமென்ன?

(f) அவர் சரித்திரத்தை 15-வரிக்கு மேற்படாமலெழுதுக.

### Answer.

(a) சிறப்பாகிய மொழியினால் செய்யப்பட்ட செய்யுட்களையுடைய நூல்.

(b) திரு=பண்புப்பெயர், வாசகம்=இங்கு அஃறிணைப் பலவின் பாற்படர்க்கைப் பெயர்ச்சொல். திரு+வாசகம், பண்புத்தொகை நிலைத்தொடர், விரித்தால் திருவாகிய வாசகமென விரியும். திரு என்னும் அடையடுத்த வாசகத்தின்பெயர் காரணவாகுபெயராய்ச் செய்யுளையுணர்த்த அச்செய்யுள் நூலையுணர்த்துவதால் அதுவும் அவ்வாகுபெயராம். அவ்வடைமொழி வெற்றிலையென்பது போலதாம். திருவாகிய வாசகத்தையுடைய நூல் எனப் பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைப் பெயரெனினும் ஒக்கும்.

(c) இது சைவசமயத்தைக் குறித்தநூல்.

(d) சைவத்திற் பத்திஞான முதிர்ந்து சிவபிரானைவழிபட்டு முத்தியடைவதற் கேதுவான பயனைத்தரும்.

(e) திருவாதவூரர், தென்னவன்பிரமராயன், மாணிக்கவாசகர், என மூன்றுபெயருள்ளன. முன்னது தந்தையாராலும், பின்னது அரிமர்த்தன பாண்டியராஜனாலும், மற்றது பரமசிவனாலும் கொடுக்கப்பட்டது.

(f) மாணிக்கவாசக சுவாமிகள் அரிமர்த்தன பாண்டியராசன் காலத்திலே திருவாதவூரில் பிராமணர்குலத்திற் பிறந்தவர். இவர் கல்வி ஞானத்திறத்தையறிந்த அவ்வரசன் இவரை முதல்மந்திரியாக்கித் தன்னிடம்வைத்திருந்து சிலநாள் சென்றபின்பு குதிரைவாங்கி வரப் பொற்குவையளித்தான். அதைக்கொண்டுசென்ற இவர் திருப்பெருந்துறையில் குருந்தமரத்தடியி லெழுந்தருளியிருந்த பரமசிவனை ஞானாசிரியராகக்கொண்டு சிவபெருமான்மீது சில பாடல்களைப் பாடித்துதித்து, கொண்டுவந்த பொருளையெல்லாம் சிவாலய முதலிய தருமவிஷயத்திற் செலவிட்டனர். இது அறிந்த அரசன் இவரைத் துன்புறுத்தவே பரமசிவன் கருணைகூர்ந்து நரிகளைக் குதிரைகளாக்கி அரசன்முன்விடுக்கப் பின்னும் பொழுதுவிடியுமுன் பழையபடி குதிரைகளெல்லாம் நரிகளாகி மறைந்தன. அரசனுக்கு மேலும் கோபமுண்டாகி இவரைத் துன்புறுத்தவே பரமசிவன் வையைநதியைப் பெருகச்செய்து பட்டணத்தின்மீது வரவிட்டு அரசனுக்கு அன்பருடைய மகிமையைத் தெரிவித்தனர். அப்பால் மாணிக்கவாசகசுவாமிகள் புத்தரைவாதில்வென்று ஊமைப்பெண்ணைப் பேசச்செய்து பற்பல சிவஸ்தலங்களைச் சேவித்து திருப்பதிகங்களோதி சோதிமயமாக விளங்கிய சிதாகாசத்தில் மறைந்தருளினார். இவர்செய்தநூல்கள் திருவாசகமும் திருக்கோவையாருமேயாம். இவர் அப்பர், சுந்தரர், சம்பந்தர் இவர்களோடும் ஒருவராக எண்ணப்பட்டவர்.

## 2. Question.

(a) "வானேயும் பெறில்வேண்டேன் மண்ணாள்வான் மதித்துமிரேன்" என்றதேன்,

(b) (1) வாராவுலகம் என்பதெது? (2) நோன்பென்பது என்ன?

(c) சிவபிரான் நடனஞ்செய்ததேன்?

(d) சிவபிரானை உண்மையுமாய் இன்மையுமாய் என்றதெப்படி?

(e) உடையான்யார்? உடைமையார்? இது எதுபற்றி?

(f) (1) பதி, பசு, பாசமென்பன எவை? (2) அறியாப்பதமெது?

(g) "ஆயநான் மறையவனு நீயேயாத லறிந்தியா னியாவரினுங் கடையனாய நாயினேனை நலமலிபுநோக்கி" இதன்வரலாறென்ன?

(h) ஆடகமுதலிய நால்வகைப் பொன் எவை?

(i) உலகமயக்கைக் கடந்தார்யார்?

## Answer.

(a) "தேனையு மலர்க்கொன்றைச் சிவனையெம் பெருமானை, மானேயுன் னருள்பெறுநா ளென்றென்றே வருந்துவனே" என்பதற்கு.

(b) (1) மோக்ஷவுலகம். (2) மனமானது ஐம்பொறிகளின் வழியில் செல்லாமல் நிற்றற்பொருட்டு உண்டிசுருங்கல் முதலிய விரதங்களைமேற்கொண்டு அவைகளால் தம்முயிருக்கு வருந்துன்பங்களைப் பொறுத்திருத்தல்.

(c) பதஞ்சலி பகவானுக்கும், வியாக்கிரபாத முனிவருக்கும் அருள்செய்யும்பொருட்டுத் திருத்தில்லையில் நடனஞ்செய்தனர்.

(d) சிவஞானங் கைகூடியவர்களுக்கு உள்ளவனாகவும் அது கைகூடாதவர்களுக்கு இல்லாதவனாகவும் இருக்கின்றான்.

(e) உடையான்=பரமசிவன். உடைமை=அன்பர்கள். இது ஆண்டான் அடிமை என்னும் வழக்குப்பற்றிக் கூறுகின்றார்.

(f) (1) பதி=கடவுள், பசு=ஆன்மாக்கள், பாசம்=மாயை, (2) மானுடப்பிறவி.

(g) சிவபெருமான் திருவாதவூரராகிய மாணிக்கவாசகசுவாமிகளை யடிமைகொள்ளும்படி. திருப்பெருந்துறையில் குருந்தமரத்தடியில் தொண்ணூற்றொன்பது அந்தணர் தம்மைச்சூழ்ந்திருக்கக் கையில் ஒரு புத்தகமேந்தி வீற்றிருந்தனர். பாண்டியனுக்குக் குதிரைவாங்க அவ்வழியாகச்சென்ற திருவாதவூரார் அவரைப்பார்த்து கையிலுள்ள புத்தகம் என்னபுத்தகமென்று வினவினர். சிவபெருமான் சிவஞானபோதம் என்னும் அத்தொடருக்குப் பொருள்விளங்க சிவமூர்த்தியும் உபதேசித்தருள திருவாதவூரருக்கு ஞானம்விளங்கியதால் அவர் துறவாச்சிரமத்தையடைந்தனர். அவருக்குத் தீக்ஷாநாமம் மாணிக்கவாசகர் என்பதாம்.

(h) ஆடகம், கிளிச்சிறை, சாம்பூநதம், சாதரூபம், என்பனவாம்.

(i) மின்னேரனைய பூங்கழல்களடைந்தார்.

## 3. Question.

(a) பூ+கழல்=பூங்கழல், இதற்குச் சூத்திரமென்ன ?

(b) (1) பேசுகேன். (2) போற்றுகின்றார். (3) முனைவன், இவற்றின் பகுபதமென்ன ?

(c) மரணமுள்ளாரை அமரரென்பதற்கு இலக்கணமென்ன ?

(d) (1) கூத்தாட்டு என்னதொடர் ? (2) கூத்து, ஆட்டு என்ன சொற்கள் இவற்றைப்போல வேறு நான்கு எழுதுக.

(e) உருவகமென்பதென்ன ? இரண்டு உதாரணம் காட்டுக.

(f) நம்பி என்பதற்குப் பொருளென்ன ? எங்கிருந்து பிறந்த பெயர்ச்சொல்.

(g) (1) கோயில், மலர்க்கொன்றை, கடைமனம், இவற்றிற் கிலக்கணமென்ன? (2) எப்படியிருந்தால் இலக்கணமுடையனவாகும்?

## Answer.

(a) பூப்பெயர் முன்னின மென்மையுந் தோன்றும் (உயி-சூ-50.)

(b) (1) பேசுகேன் = பேசு-பகுதி, கு-எதிர்காலத் தன்மையொருமை விகுதி, உகரக்கேடு சந்தி, ஏன்-விகுதிமேல் விகுதி, கு-எதிர்கால இடைநிலையெனினும் பொருந்தும். (2) போற்றுகின்றார் — போற்று-பகுதி, ஆநின்று-நிகழ்கால இடைநிலை, ஆர்-பல்லோர் விகுதி, உகரக்கேடுசெய் சந்தி. (3) முனைவன் = முனை பகுதி, வ்-பெயரிடைநிலை, அன் ஆண்பால்விகுதி. தலைவன், இறைவன், இயவன், என்பனவுமப்படியே. வகரம் உடம்படுமெய்யன்று.

(c) உபசாரவழக்கு.

(d) (1) இருபெயரொட்டுப் பண்புத்தொகை நிலைத்தொடர் (2) கூத்து = முதனிலைபெற்ற தொழிற்பெயர். வினை, தொழில், சண்டை, வேட்டை என்பனபோல. ஊட்டு - முதனிலைதிரிந்த தொழிற்பெயர். கோள், ஊண், கேடு, பாட்டு என்பனபோல.

(e) உபமானத்துக்கும் உபமேயத்துக்கும் உள்ள ஒற்றுமையை விளக்குவதாம். அவலக்கடல், பாதமலர்.

(f) விரும்பத்தக்கவன். நம்பி எனனும் உரிச்சொலடியாகப் பிறந்த உயர்திணை யாண்பாற்படர்க்கைப் பெயர்ச்சொல்

(g) (1) இலக்கணப்போலி. (2) கோவில், கொன்றைமலர், மனக்கடை.

## தாயுமானவர்பாடல்.

---

### 1 Question.

(a) தாயுமானவர் சரித்திரத்தை 15-வரிக்குள் எழுதுக.

(b) தாயுமானவர் பாடலுக்குப் பொருளெழுதுக.

(c) இலக்கணக் குறிப்பெழுதுக.

(d) எவ்வகைப்பட்ட செய்யுட்களால் பாடியுள்ளார்.

(e) " தாயுமானவர் எக்காலத்திருள்ளவர். (2) அவர்செய்த வேறுநூலெவை?

## Answer.

(a) தாயுமானவர் வேதாரணியமென்னும் நகரியில் வேளாளமரபில் கேடிலியப்பிள்ளைக்குத் திருமகனாகத் திரிசிரபுரத்திருந்த தாயுமானேசுரர் திருவருளால் அவதரித்து தாயுமானவரெனத் திருப்பெயர்பூண்டனர். மௌனதேசிகரிடத்தில் ஞானோபதேசம் பெற்று பிதா காலமாயினபின்னர் அவருடைய சம்பிரதி உத்தியோகத்தை திரிசிரபுரத்தரசனாகிய விஜய ரகுநாத சொக்கலிங்க நாயகரிடத்தில் நிலகாரியமாற்றி மிக்க புகழடைந்து அரசன் இறந்தபின் அவனுடைய

மனைவி மையல்மிகுதியால் தமதுமீதுகொண்ட தகாதசெய்கைக்கு உடன்படாமல் அந்நகரத்தின் எல்லையைக்கடந்து இராமநாதபுரஞ் சென்று பின்பு தமயனாருடைய வேண்டுகோளின்படி ஒரு திருமண முடித்துக் கனகசபாபதியென்னுங் குமாரனைப் பெற்றுவைத்துப், பின்பு கௌபீனராய்ச்சென்று தவத்தைநமுடித்துக் கடைசியில் இராமநாதபுரத்துக்கருகில் அகண்டாகார சிவத்தொடுங் கலந்தருளினார்.

(b) தாயுமானவரால் செய்யப்பட்ட பாடல்களையுடையநூல்.

(c) தாயுமானவர்=உயர்திணை ஆண்பாற்படர்க்கைக் காரணப்பெயர்ச்சொல். பாடல்=தொழிற்பெயர், இது செய்யுளுக்குத் தொழிலாகுபெயர். தாயுமானவர்+பாடல் இயல்புச்சந்திபெற்ற செய்யுட்கிழமையாகிய பொருட்பிறிதின் கிழமைப்பொருளில்வந்த ஆறும் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். விரித்தால் தாயுமானவரது பாடல் எனவிரியும். இது தாயுமானவரது பாடலையுடையநூல் என ஆறும்வேற்றுமைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித் தொகைப்பெயராய் நூலுக்குக் காரணக்குறியாயிற்று. என்பது இலக்கணம்.

(d) பலவகைப்பட்ட விருத்தங்களினாலும், கண்ணிகளாலும் பாடப்பட்டுள்ளது.

(e) (1) 200 - வருஷத்துக்குமுன்.

(2) வேறொன்றும்புலப்படவில்லை.

## 2. Question.

(1) யானெனுமகந்தையும் அபிமானமுமென்ன? (2) எது உருகும் எது உருகாது? (3) பஞ்சபூதமாவன எவை? (4) சுகம் எதனாலுண்டாகும் எதனாலுண்டாகாது?

## Answer.

(1) நான் என்னும் அகப்பற்றும் எனதென்னும் புறப்பற்றுமாம்.

(2) கல்லேனுமுருகும் கல்நெஞ்ச மொருகாலும் உருகாது.

(3) அப்பு, தேயு, வாயு, பிருதிவி, ஆகாயம் என ஐந்து.

(4) சொல்லான் முழங்குதல்செய்தால் சுகமில்லை. மௌனியாகச் சும்மாவிருந்தால் சுகமுண்டு.

## 3. Question.

(a) மோன உருவெளியாவதென்ன?

(b) மலடி பிள்ளையினருமை யறியாளென்றதற்கு செய்யுளெழுதுக.

(c) கையில்வளர் நெல்லிக்கனியைப் போல்வதென்ன?

(d) கன்றினுக்குச் சேதாவிரங்குதல்போ லென்றதற்கு உபமேயமென்ன?

(e) திருக்கருணை ஒன்றைக்கொடுத்தால் என்னென்ன நீங்கி என்னென்ன உண்டாகும்?

(f) பராபரக்கண்ணியில் இரண்டுசெய்யுளெழுதுக.

## Answer.

(a) மௌனநிலையிற்றோன்றும் (சத்து, சித்து, ஆனந்தம் என்னும்) சச்சிதானந்தத்தின் உருவெளித்தோற்றம்.

(b) "பெற்றவட்கே தெரியுமந்த வருத்தம் பிள்ளை
பெறாப்பேதை யறிவாளோ பேரானந்த
முற்றவர்க்கே கண்ணீர்கம் பலையுண்டாகு
முறாதவரோ கன்னெஞ்ச முடையராவர்." (தாயு-14)

(c) தன்னைக்கண்டார்க்கு உள்ளும் புறம்புமாகிய எங்கும் பரிபூரணமாகத்தோன்றும் சிவமாம்.

(d) என் தந்தையாகிய பராபரமே எப்போது கருணைசெய்வாய் என்றபடி.

(e) பொய்யும் ஆசையும் பொறாமையும் மனத்தினின்றும் நீங்கி மெய்யும், ஞானமும், அருட்செல்வமும் அடியாருக்குச் செய்யும் பணியும் உண்டாகும்.

(f) (1) "ஆரறிவாரென்ன வனந்தரமறை யோலமிடும்
பேரறிவே யின்பப் பெருக்கே பராபரமே" (தாயு-17)

(2) "கண்ணே கருத்தேயென் கற்பகமே கண்ணிறைந்த
விண்ணே யானந்த வியப்பே பராபரமே." (தாயு-21.)

# திருவாய்மொழி.

---

## 1. Question.

(a) இந்நூலாசிரியருடைய சரித்திரத்தைச் சுருக்கி எழுதுக.

(b) திருவாய்மொழிக்குப் பொருள்சொல்லுக.

(c) இலக்கணமென்ன?

(d) சடகோபர் என்றதற்குப் பொருளென்ன?

(e) இவர் மறுநாமங்களென்ன?

(f) இவரோடு சேர்த்து எண்ணப்பட்ட பன்னிரு ஆழ்வார்கள் யார்?

## Answer.

(a) இந்நூலாசிரியராகிய சடகோப ஆழ்வார் செந்தமிழ்ப்பாண்டியவளநாட்டில், திருக்குருகூரில், வைணவசமயத்தில், வேளாண்மரபில் காரி என்பவருக்கும், உடையநங்கையாருக்கும் குமாரராக 4,900-வருஷத்துக்குமுன் திருவவதாரஞ்செய்தனர். இவரையடைந்த மதுரகவியாழ்வார் புருஷார்த்தங்களை அருளிச்செய்ய வேண்டுமென்று பிரார்த்தித்து நின்றனர். அதற்கிரங்கிய சடகோப ஆழ்வார் சகலவேதாந்தசாரமாகிய திருமந்திரங்களின் அர்த்தத்தை நான்கு பிரபந்தங்களாலே அருளிச்செய்யக் கருதி, இருக்குவேதசாரமாகத் திருவிருத்தத்தையும், எசுர்வேதசாரமாகத் திருவாசிரியத்தையும், அதர்வணவேதசாரமாகப் பெரிய திருவந்தாதியையும், சாமவேதசாரமா

கக் திருவாய்மொழியையும் பகர்ந்தனர். மதுரகவி ஆழ்வார் அவற்றைப் பட்டோலைபிடித்தெழுதித் திருமகிழம்பூமாலையை யணிவித்தனர். அப்பால் அனேகருக்குந் தெளிவுறுத்தி 33-ம் ஆண்டில் பரமபதமடைந்தனர்.

(b) திருவாகிய வாய்மையாகிய மொழியினால் செய்யப்பட்ட செய்யுட்களையுடையநூல் என்பது பொருள்.

(c) திரு—விகுதிபெறாத பண்புப்பெயர், வாய்மை (வாயின்தன்மை = சத்தியம்) விகுதி புணர்ந்துகெட்ட பண்புப்பெயர், மொழி= தொழிலடியாகப்பிறந்தபெயர். அல்லது முதனிலைத்தொழிற்பெயர். மொழி செய்யுளையுணர்த்தல் செய்யுள் நூலையுணர்த்துவதால் இரண்டு கருவியாகுபெயர். சினையாகுபெயரொன்னினும் பொருந்தும். இது சிறுசெந்சேவல் என்பதுபோல இரண்டடைகொண்ட காரணப்பெயர். அன்மொழித்தொகையெனினும் பொருந்தும்.

(d) சடவாயுவை நிராகரித்தவர்.

(e) நம்மாழ்வார், மாறன், வகுளாபரணன்.

(f) சடகோப ஆழ்வார், பொய்கை ஆழ்வார், பூதத்தாழ்வார், பெரிய ஆழ்வார், தொண்டரடிப்பொடி ஆழ்வார், திருமழிசை ஆழ்வார், திருமங்கை ஆழ்வார், திருப்பாணாழ்வார், மதுரகவி ஆழ்வார், பேயாழ்வார், திருப்புளியாழ்வார், சூடிக்கொடுத்த நாச்சியார். எனப் பன்னிருவர். கம்பநாட்டாழ்வார் முதலிய, ஆழ்வார்களுமுளர்.

## 2. Question.

அடியிலிவரும் பாட்டுக்குப் பதவுரை யெழுதுக.

கண்ணனை மாயன்றன்னைக் கடல்கடைந் தமுதங்கொண்ட
அண்ணலை யச்சுதன்னை யனந்தனை யனந்தன்றன்மேல்
நண்ணிநன் குறைகின்றானை ஞாலமுண் டுமிழ்ந்தமாலை
யெண்ணுமா றறியமாட்டேன் யாவையு மெவருந்தானே.

## Answer.

(பதவுரை) கண்ணனை-கிருஷ்ணனை, மாயன்தன்னை - மாயவனை, கடல்கடைந்து - திருப்பாற்கடலைக் கடைந்து, அமுதங்கொண்ட-அமிர்தமெடுத்த, அண்ணலை - பெரியோனை, அச்சுதனை-அழிவில்லாதவனை, அனந்தனை முடிவில்லாதவனை, அனந்தன்மேல்-ஆதிசேடன்மேல், நண்ணி - சேர்ந்து, நன்கு-நன்றாக, உறைகின்றானை - யோகநித்திரைசெய்பவனை, ஞாலம் - பூமியை, உண்டு - தன்னுள்வைத்து, உமிழ்ந்த - வெளிப்படுத்திய, மாலை-திருமாலை, எண்ணும் ஆறு-எண்ணுகிறவிதத்தை, அறியமாட்டேன் - தெரிந்துகொள்ளும் வலியிலேன், யாவையும்-சகலமும், எவரும் - யாவரும், தானே-தானே ஆவான்.

## 3. Question.

(a) என்று என்பது பெயராகவும், வினையெச்சமாகவும், இடைசொல்லாகவும் வரும்படி சிறு வாக்கியங்களெழுதுக.

(b) பின்வருஞ் சொற்களுக்குச் சொல்லைப்போலப் பொருளெழுதுக. பங்கயம், மாயவன், திருமால், சிவன், கண்ணன், அச்சுதன், அமலன்.

(c) அஞ்சனவண்ணன், பவளவாய், இவை என்ன உவமைத்தொகை?

(d) (1) அறுசுவை என்ன? (2) புலன் ஐந்தென்ன?

(e) பின்வருஞ் சொற்களுக்குப் பகுபத முடிபு கூறுக.

(1) அறியமாட்டேன். (2) என்கோ.

## Answer.

(a) என்று காண்பேன்—பெயர். நான் கொடுப்பேனென்று என்பொருளை வினையெச்சம். என்றுசொன்னேன் - இடைச்சொல்.

(b) பங்கயம்=சேற்றில் பிறப்பது. மாயவன் - விசித்திர சத்தியையுடையவன். திருமால் - (அடியார்பால்) பித்துடையான். சிவன் - நன்மையைச்செய்பவன். கண்ணன் - தாக்ஷிணியமுடையான். அச்சுதன் - அழியாதவன். அமலன்=களங்கமில்லாதவன்.

(c) வண்ண உவமைத்தொகைகள்.

(d) (1) கைப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு, இனிப்பு
(2) மெய், வாய், கண், மூக்கு, செவி.

(e) (1) அறியமாட்டேன்—அறி-பகுதி, அ-சாரியை, யகரமெய் சந்தி, மாட்டு-ஆற்றலுணர்த்தும் விகுதி, அனைத்துமொரு பகுதி ஏன் தன்மை ஒருமை விகுதி. எதிர்மறை ஆகாரவிகுதி புணர்ந்து கெட்டது. உகரக்கேடுசந்தி.

(2) என்கோ:—என் பகுதி, கு-தன்மையொருமையும், எதிர்காலமும் உணர்த்திவந்த விகுதி.

## திருக்குறள்.

---

## 1. Question

(a) நூலாசிரியர் வரலாறென்ன? சுருக்கி எழுதுக

(b) திருக்குறள் என்பதற்குப் பொருளென்ன?

(c) இலக்கணக் குறிப்பெழுதுக.

(d) இது எவ்வகைப்பாவினாற் செய்யப்பட்டது.

(e) இது எத்தனை உறுப்படங்கிய பிண்டம்.

(f) இந்நூலுக்குரிய மறுபெயர்களென்ன?

(g) திருவள்ளுவருக்கு வழங்கும் மற்றப்பெயர்களென்ன?

(h) இவருடையகாலம் எது?

(i) இவர்காலத்திருந்த புலவர்கள்யார்?

## Answer.

(a) இந்நூலாசிரியராகிய திருவள்ளுவர் தொண்டைமாநாட்டிலே, திருமயிலாப்பூரில், இலுப்பைத்தோப்பில், சைவசமயத்தில், ஆதியென்பவளுக்கும் பகவனென்பவனுக்கும் பிறந்து வேளாளர் எடுத்து வளர்க்க வளர்ந்து, தாம் பிரமதேவனுடைய அமிசமானமையால் சகலகலைகளையும் ஐந்து வயதாயபின்பு இயல்பாகவே கற்றுணர்ந்து பொதியமலையடைந்து தவஞ்செய்துகொண்டிருக்கையில் காவேரிப்பாக்கத்தில் ஒரு வேளாளப்பிரபு தன் பயிர்ச்செய்வனமுழுமையும் ஒரு வேதாளம் அழிக்க அதற்காகத் திருவள்ளுவரைத் தருவிக்கவே திருவள்ளுவர்வந்து தமது தபமகிமையால் துரத்தவே அவ்வேதாளம் ஒழிந்தது. அப்பால் அப்பிரபுவினுடையமகளாகிய வாசுகியைத் திருமணமுடித்துக்கொண்டு உலகிற்கு இல்லறத்தை நடத்திக்காட்டக்கருதித் திருமயிலாப்பூரை மீளவுமடைந்து அங்கு அம்மனைவியாருடன் வசித்து நெய்தற்றொழிலில் ஜீவனஞ்செய்துவந்தனர். இவருக்கு அந்நகரத்து வணிகப்பிரபுவாகிய ஏலேலசிங்கனென்னும் செட்டியார் மாணாக்கராக அவர்க்கு அனுக்கிரகஞ்செய்து அவர் வேண்டுகோளால் அறம், பொருள், இன்பம் என்னும் முப்பாலையுந்திரட்டித் திருக்குறளாகப்பாடி மதுரைக்குச் செல்லுகையில் வழியில் ஔவையாரும், இடைக்காடரும் துணைவரச் சங்கமண்டபமடைந்து தமது நூலினைக்காட்டி அவர்கள் கேட்ட வினாக்கட்கெல்லாம் விடைபகர்ந்து அக்கடைச்சங்கப் புலவரையெல்லாம் வென்றுகொண்டு அவர்கள் தனித்தனி தமது நூலிற்குக் கொடுத்த சாத்துகவிகளையும் பெற்றுத் திரும்பிச் சிலகாலம் மயிலாப்பூரிலிருந்து வசித்து அனேக அற்புதங்கள்செய்து முத்தியடைந்தார்.

(b) சிறப்பாகிய குறள்வெண்பாவாற் பாடப்பட்டநூல் என்பது பொருள்.

(c) திரு=விகுதிபெறாத பால்பகா அஃறிணைப் பண்புப்பெயர். குறள்=சிறுமையை யுணர்த்தும் பண்புப்பெயர். அப்பண்புப்பெயர் சிறுமையையுடைய குறள்வெண்பாவுக்குப் பண்பாகுபெயராகி அது அப்பாக்கள்தொக்க நூலுக்குச் சினையாகுபெயராய்க் காரணக்குறியாயிற்று. ஆதலால் இது இருமடியாகுபெயர். ஆக்கப்பட்டநூலாகுதல் கருதிக் காரணவாகுபெயரெனினும் இழுக்காது.

(d) வெண்பாவின் சிறுமையாகிய குறள்வெண்பாவாலாயது.

(e) பால், இயல், அதிகாரம், செய்யுளென்ன நாற்கூறுபாடடங்கிய பிண்டம்.

(f) திருக்குறள் தமிழ்மறை, முப்பானூல், உத்தரவேதம், தெய்வநூல், திருவள்ளுவர், பொய்யாமொழி, வாயுறைவாழ்த்து, பொதுமறை.

(g) திருவள்ளுவர், பெருநாவலர், தெய்வப்புலவர், நாயனார், தேவர், முதற்பாவலர், நான்முகனார், மாதாநுபங்கி, செந்நாப்போதார்.

(h) 3,000-வருஷத்துக்கு முற்பட்ட கடைச்சங்கத்தார் காலம்.

(i) ஔவையார், இடைக்காடர், கடைச்சங்கப்புலவர்.

## 2. Question.

அடியில்வரும் பொருளுக்குத் தகுதியாகக் குறள் எழுதுக.

(a) தந்தை மகனுக்குச்செய்யவேண்டிய நன்மையென்ன?
(b) மகன் தந்தைக்குச்செய்யவேண்டிய நன்மையென்ன?
(c) வந்தவிருந்தினர் எப்படியிருப்பின் மனங்குழைவார்?
(d) எல்லாவற்றிலுங் காக்கவேண்டியபொருள் யாது?
(e) தீயைப்பார்க்கிலும் அஞ்சத்தகுதியுடையது யாது?
(f) பேரறிவாளனுடைய செல்வம் எப்படிவரும்?

## Answer.

(a) தந்தை மகற்காற்று நன்றி யவையத்து
முந்தி யிருப்பச் செயல். (குற-5.)

(b) மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை
யென்னோற்றான் கொல்லென்னுஞ் சொல். (குற-7.)

(c) மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து. (குற-10.)

(d) யாகாவா ராயினு நாகாக்க காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. (குற-22.)

(e) தீயவை தீய பயத்தலாற் றீயவை
தீயினு மஞ்சப் படும். (குற-31.)

(f) ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
பேரறி வாளன் திரு. (குற-35.)

## 3. Question.

பின்வருஞ் செய்யுட்களுக்குப் பொழிப்புரை வரைக.

(1) தன்னைத்தான் காதல னாயி னெனைத்தொன்றுந்
துன்னற்க தீவினைப் பால். (குற-34.)

(2) புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாத
லறங்கூறு மாக்கந் தரும். (குற-28.)

## Answer.

(1) தன்னைத் தானே விரும்புவானாகில் தீவினைப்பகுப்புகளில் எவ்வளவு சிறிதாகிய ஒரு தீவினையையும் (பிறரிடத்தில்) செய்யாதொழியக்கடவன்.

(2) (காணாதவிடத்தில் ஒருவனை) இகழ்ந்துபேசிக் (கண்டவிடத்தில் அவனுக்கு இனிமை உண்டாகும்படி) பொய்யாக நடித்து (ஒருவன்) உயிர்வாழ்தலைப் பார்க்கிலும் இறப்பதே தருமசாத்திரங்களால் கூறப்பட்ட ஆக்கத்தைத்தரும்.

## 4. Question.

(a) தந்தை, வருவிருந்து. இவை என்ன வழுவமைதி. சூத்திர மென்ன?

(b) விருந்தோம்புவார்க்கு இன்றி முடியாத மூன்றென்ன!

(c) அழுக்காறு, அவா, என்னசொற்கள்? இவற்றினடியாகப்பிறந்தவினை விகற்பம் ஐந்தெழுதுக.

(d) அறத்துக்காகக் கடிபவேண்டிய நான்கென்ன?

(e) பெயர்ச்செவ்வெண் தொகைச்சொல் பெற்றதற்கு உதாரண மென்ன? இன்னும் எந்த எண்கள், தொகைச்சொல் பெறும்? சூத்திரமென்ன?

(f) "என்றபொழுதின்" "வானத்தவர்க்கு நல்விருந்து" இவற்றிலுள்ள உருபுகள் என்னபொருளன. அவ்வேற்றுமை இன்னும் என்னென்னபொருளில்வரும். சூத்திரமென்ன?

(g) இடைச்சொல்லடியாகவும், பெயர்ச்சொல்லடியாகவும் பிறந்த பெயரும், வினையும் இரண்டிரண்டெழுதுக.

(h) "அன்புடையார் என்பு முரியார்பிறர்க்கு" (என்பு—உடல்) பிறர்க்குத் தமது என்பையும் கொடுத்த அன்புடையாரிருந்தால அவர் கதையை எழுதுக.

## Answer.

(a) தாம்+தை—தந்தை. தாம்-பன்மை-தை-ஒருமை. ஆதலால் ஒருமையில் பன்மைவந்த பால்வழுவமைதி. வருவிருந்து - வருதல் தன்மை முன்னிலையிடத்துக்குரிய சொல். அது படர்க்கையில் வந்தது ஆதலால் இடவழுவமைதி. "ஒருமையிற் பன்மையும் பன்மையிலொருமையும் ஒரிடம் பிறவிடந்தழுவலுமுளவே" (பொது-சூ-29.) "தரல்வரல் கொடை செலல் சாருமபடர்க்கை எழுவாய் இரண்டும எஞ்சியவேற்கும்" (பொது-சூ-30.) முறையேகொள்க.

(b) விருந்தினரைத் தூரத்திற் கண்டபோது இனியமுகமும், அது பற்றி அவர் நெருங்கியபோது இனியசொல்லும், அதுபற்றி அவர் உடன்பட்டபோது நன்றுசெய்தலுமாம்.

(c) அழுக்காறு, அவா இரண்டும் பெயர்ச்சொல். அழுக்கறு, அழுக்கறுத்தல் அழுக்கறுவான், அழுக்கற்ற, அழுக்கற்று அவாவு அவாவுதல் அவாவினன், அவாவின, அவாவி, எனவரும.

(d) அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச்சொல்.

(e) "அழுக்காறவாவெகுளி யின்னாச்சொனான்கும்" இதில் நான்கும் என்பது தொகைச்சொல். இன்னும் ஏ எண், என்றா எண், எனா எண். இவையுந் தொகைச்சொலபெற்றே நடக்கும்." பெயர்ச செவ்வெண் ஏ என்றா எனா எண் நான்குந் தொகைபெறும்-உம்மை என்றெனவோடு நான்கெண்ணும் அஃதின்றியும் இயலும்" (இடை-சூ-9.)

(f) என்றபொழுதின்—இன்உருபு ஐந்தாம்வேற்றுமை எல்லைப் பொருளது. நீங்கற்பொருள், ஒப்புப்பொருள், ஏதுப்பொருள் இவற்றிலும்வரும். "ஐந்தாவதனுருபில்லும் இன்னும் நீங்கலொப்பெல்லை ஏதுப்பொருளே" (பெய்-சூ-42.) வானத்தவர்க்கு, —கு. நான்காம் வேற்றுமைத் தருகிப்பொருளது கொடை பகை, நேர்ச்சி, அதுவாதல், பொருட்டு, முறைமை ஆதியாகிய இப்பொருளிலும் வரும். "நான்காவதற்குருபாகும் இவ்வே கொடை பகை நேர்ச்சி-தகவது வாதல் பொருட்டு முறை ஆதியின் இதற்கிதெனல் பொருளே" (பெய-சூ 41.)

(g) மற்றையோர், பிறர். (பெயர்) போன்றான், நிகர்ந்தான் (வினை)—இயைபடி. உறவர், நம்பி. (பெயர்) சான்றான், மாலும். வினை)= உரியடி.

(h) அன்புடையார் என்புமுரியர் பிறர்க்கு என்றதற்குக்கதை:— சிபிச்சக்கரவர்த்தியினுடைய அன்பையும், கொடையையும் வெளிப்படுத்தும்படி அக்கினிதேவன் புறாவுருக்கொண்டனன். இந்திரன் வேடவுருக்கொண்டு அப்புறாவை அம்பினுலெய்ய அது புண்பட்ட உடலோடு பறந்துவந்து சக்கரவர்த்தியின் பாதத்தண்டைவந்து விழுந்தது அதைச் சக்கரவர்த்தியெடுத்து உபசாரணைசெய்திருக்கையில் வேடன்வந்து புறாவைக்கேட்டான் சக்கரவர்த்தி என்னைச் சரணடைந்த புறாவைத்தவிர வேறெதைக் கேட்கினுந் தருவேனெனக் கேட்டு வேடன் பொன்முதலிய பொருளும் வேறுதசையும் எனக்கு வேண்டா. புறாவைக்காக்க விருப்பமிருந்தால் உமது தசையைத் தாருமென்றனன். உடனே மகிழ்ந்து துலைநாட்டி ஒருதட்டில் புறாவைவைத்து மற்றதட்டில் அதனெடைக்குத் தன் தசையை அரிந்தரிந்து போட்டுக்கொண்டுவர புறாநின்றதட்டு தாழ்வதைக்கண்டு மற்றத்தட்டில் தானேறிநின்றனன். உடனே அத்தேவர்களிருவரும் சக்கரவர்த்தியின் கருணையையும் கொடையும் புகழ்ந்துசென்றனர். வேறொருகதை:—ததீசிமுனிவன் இந்திரன் வச்சிராயுதஞ்செய்துகொள்வதற்காகத் தனது முதுகெலும்பைத் தந்தனன்.

## மக்பெத்.

---

### 1 Question.

(a) மக்பெத் என்பவன் யார்?

(b) மக்பெத் இணையற்ற ரணசூரனெனப் புகழ்தற்கு ஆதாரம் ஒன்றுகாட்டுக.

(c) மக்பெத் எவ்விடத்தில் எவ்வுருவாக மாயாரூபிகளைக் கண்டான்?

(d) மக்பெத்துக்கு மாயாரூபிகள் மூவருஞ்சொல்லிய மங்கலவாக்கு என்ன?

(e) மக்பெத் ஸ்காத்லாந்தில் கிரீடாதிபதி ஆகும்தினம் கிட்டியதென உறுதிகொண்டு உள்ளம் பூரித்ததெப்போது?

(*f*) மக்பெத் வீடுசேர்ந்தவுடன் மனைவிக்குத் தெரிவித்ததென்ன?

(*g*) மக்பெத் மனைவியின் குணங்களில் ஆறுவகையெழுதுக.

(*h*) மக்பெத்தின் குணங்களில் மூன்றுவகையெழுதுக.

## Answer.

(*a*) ஸ்காத்திலாந்தின் அரசனாகிய டங்கன் என்பவனுடைய தளகர்த்தனும், அவ்வரசனுக்கு உதிரக்கலப்புள்ள உறவினனுமாம்.

(*b*) ஒருகால் கலகப்பிரியராகிய நார்வேநாட்டுச் சேனைகளோடு துணைநீக உடன்படுத்தி அரசன்மேல் தண்டெடுத்துநெருங்கிய இராணுவவீரர் எண்ணிறந்தோரை, படைகளத்தில் அஞ்சிவருந்தாது எதிர்த்துப் பொருது சிதறவடித்து அபஜெயப்படுத்தி அற்புதவீரதீரனென்று அழியாப்புகழ்பெற்றனன்.

(*c*) உலர்ந்துதேய்ந்த ஒரு சம்பம்புல்வெளியில் தாடியுரோமமுடையவர்களாய் அங்கத்திரைந்து ஆடை தரித்தகோலம் அலங்கோலமானவர்களாய்ப் பெண்கள்போலிருக்கக்கண்டான்.

(*d*) ஒருத்தி "க்ளாமிஸ்பிரபு" என விளித்து மரியாதைசெய்தாள். மற்றொருத்தி "காடர்பிரபுவே! நீவாழி" என மங்களம் பாடினள். மூன்றாவது மாயாரூபி "வாழ்க, வாழ்க! இனி பட்டத்தரசனாவாய்" என்று ஆசீர்வசனங்கூறினள்.

(*e*) அரசனால் அனுப்பப்பட்ட சிலதூதர்கள் அவ்விடம் வந்து மக்குக்கு "காடர் என்னும் பிரபு" பட்டம்சூட்டியதாக அறிக்கைசெய்ய யாக கட்டளைபிறந்தது என்றபோது அவன் மாயாரூபிகள் மொழிந்து மறைவதற்குமுன் அவர்கள் வாக்குகள் ஒன்று அணுவும் தவறாமல் பலித்ததேயென்று சிந்தித்ததருணத்தில்

(*f*) மாயாரூபிகள்மனம் களிகூரத்தக்க சொற்கள் சொல்லியதும் அவற்றில் ஒன்று விரைவிற் பலித்ததுமாகிய நற்செய்தியைச் சொல்லுகிறான்.

(*g*) (1) சூதும்வாதும் குடிகொண்ட மனதுடையவள். (2) பூனைபோலிருந்து புலிபோலப்பாயும் இயற்கையுள்ளவள். (3) ஸ்காத்திலாந்து ராஜகுடும்பத்திற்கு ஒருநீலி. (4) பாவம், பழிக்கு அஞ்சாதவள். (5) இராஜகாதக மனவேகமுடையவள். (6) பிடித்தவிரதம் முடிப்பதே விரதமென்று கங்கணங்கட்டியவள்.

(*h*) (1) இளகிய நெஞ்சமுடையவன். (2) தயை தாக்ஷிண்யமுள்ளவன். (3) பழிக்கு அஞ்சும் இயல்புடையான்.

## 2. Question.

(*a*) பங்குவோ என்பவர் யார்?

(*b*) பங்குவோவுக்கு மாயப்பெண்கள் சொன்னதென்ன?

(*c*) பங்குவோவுடைய குமாரன் பெயரென்ன?

(*d*) பங்குவோவுடைய மரணம் எப்படி? காரணமென்ன?

(e) பங்குவோ ஆவி மக்பெத்துடைய சிம்மாசனமேறியதெப்போது ?

(f) பங்குவோ இறந்தபின்பு மக்பெத்துக்கு இரண்டாமுறை காணப்பட்டதெப்படி ?

(g) பங்குவோவுடைய மகனைப்பற்றித் தெரிந்தவரையிலெழுதுக.

## Answer.

(a) ஸ்காத்திலாந்து தேசத்தரசனாகிய டங்கனுடைய தளபதி.

(b) "நீ மக்பெத்திலும் சிறியோனாயினும் பெரியோன். அவ்வளவு பாக்கியவானல்லனாயினும் அவனிலும் அதிக பாக்கியம்பெற்றவன்" சிங்காதனத்தில் வீற்றிருக்குஞ்சிறப்பு உனக்கு இல்லை. உன்காலம் கழிந்தபின்னர் உன்குமாரர்கள் ஸ்காத்திலாந்தில் ராஜ்யபாரம் தாங்குவார்கள்" என்பதாம்.

(c) ப்லீயான்ஸ்.

(d) மக்பெத் என்பவன் தனக்குப்பின்னர் தனது சிம்மாசனத்துக்கு அதிபதிகளாகப் பங்குவோவுடைய சந்ததியார் அரசாளுவார்களென்று பொறாமைப்பட்டு பங்குவோவை விருந்துக்கழைப்பித்து அவன் வரும்வழியில் கொலைஞரைவைத்து அவனைக்கொன்றான்.

(e) மக்பெத் பங்குவோவை கொலைசெய்வித்து அக்கொலைத்தொழில் வெளிப்படாதபடிக்கு விருந்தினரோடு பங்குவோ வராமைக்காக இரங்கினவன்போல பேசிக்கொண்டிருக்கையில் பங்குவோவின் ஆவி அவ்விடத்திலுள்ள மக்பெத்தினுடைய சிம்மாசனமேறி அவன் கட்புலனுக்குமாத்திரம் கோரவடிவாகத் தோற்றியது.

(f) மக்பெத் இரண்டாமுறையும் மாயப்பெண்களைத்தேடி அவர்கள் வாய்மொழியை அறியவேண்டி முன்சொல்லிய சம்பம்புல்வெளியிலிருந்த ஒரு குகைக்குட்சென்று பங்வோயின் சந்ததியார் அரசுபுரியவருவார்களோவெனத் தேவதையைக்கேட்டபோது ஏதமொன்றுகேட்டு மகுடவர்த்தனர் எட்டுப்பெயர் நிழலுருததாங்கி முன்வர பங்குவோ அவர்களைப் பின்தொடர்ந்து அங்கமெங்கும் குருதிபுரண்டவுருவினனாக நின்று மக்பெத்தைநோக்கி நகைத்து பளிங்கில் விளங்கிய உருக்களைத்தான்கொண்டுவந்த கண்ணாடியிற்காட்டினன்.

(g) மக்பெத் சதிகொலைக்குத் தப்பியோடின ப்லீயான்ஸினுடைய சந்ததியாரே பின்பு பரம்பரையாக ஸ்காத்திலாந்தில் அரசுபுரியலாயினர். அந்த வமிசத்தில் கடைசியானவன் ஆறாவது ஜேம்ஸ் என்னு மன்னவன். அவன் அரசாளும் நாளில் ஸ்காத்திலாந்தும் இங்கிலாந்தும் ஒரு குடைக்கீழ்ப்பட்டு ஒருங்கிணைந்தன. அவ்வரசனுக்கு இங்கிலாந்தின் முதலாவது ஜேம்ஸ் என மற்றொருபட்டப்பெயரும் வழங்கும்.

## 2. Question.

(a) அரசனாகிய டங்கன் செங்கோல்செலுத்திய தேசமென்ன ?

(b) அரசனுக்குரிய புத்திரர்கள் யார் ?

(c) அரசனுக்குண்டாகிய சிறப்புப் பெயரென்ன ?

(d) அரசன் மக்பெத்வீட்டுக்கு விருந்தாகச்சென்ற காரணம் யாது ?

(e) அரசனுடைய பள்ளியறையில் நித்திரித்தவர்கள் யார் ?

(f) அரசன் மக்பெத் மனைவிக்குக் கொடுத்ததென்ன ?

(g) அரசனைவெட்டும்படி மக்பெத் மனைவிக்குப் பேராண்மையுண்டாவதற்கு ஏதுவென்ன ?

(h) அரசனைக் கொலைசெய்யச்சென்றவள் அதுசெய்யாமல் திரும்பியதேன் ?

(i) அரசபுத்திரர் எந்தத்தேசம்போய் ஒளித்திருந்தனர் ?

## Answer.

(a) ஸ்காத்திலாந்துதேசம்.

(b) மால்கம், டோனல்பேன் என்னுமிருவர்.

(c) சாந்தகுணபூரணன்.

(d) பகைஞரை முறியடித்து வெற்றிவீரனாகத் திரும்பிய மக்பெத் தளபதியை முக்கியமாய் அவ்வீரத்து விசாரித்துப் பெருமைப்படுத்துதற்காகவேயாம்.

(e) மெய்க்காப்பாட அரசனது பள்ளியறைக்குள் பணிசெய்யும் வேலையாட்கள் இருவர் படுத்திருந்தனர்.

(f) பட்டையுதிர்க்கு வயிரக்கற்களாலாகிய விலையுயர்ந்த பதக்கம் ஒன்று பரிசாகக் கொடுத்தான்.

(g) மக்பெத்தின் மனைவியானவள் முன்னதாகவே மயக்கமுண்டாகும்படி பள்ளியறையுட் படுத்திருந்த கையாட்கள் இருவருக்கும் மிகுதியாக மதுபானஞ் செய்வித்திருந்தமையால் அவர்கள் தங்கள் செய்கைத்தை முற்றுமறந்தவர்களாய்க் கொடுவாளே போடிவாடியப் குறட்டைவிட்டுத் தூங்கினார்கள். இந்தக்காரணத்தினாலேயே அரசனைக் கொல்லும்படி அவளுக்குப் பேராண்மை உண்டாயது.

(h) மக்பெத்தின் மனையாட்டியாகிய அவள் மன்னவன் முகத்தைக் கிட்டிருந்து உற்றுப்பார்த்து அது ஒருவாறு தன் தந்தைமுகத்திற்குச் சமானமென்று கண்டனள். கண்டவுடன் நெஞ்சிளக்கமுண்டாகி கொலைக்கருத்தைமறந்து கைசோர்ந்து பயங்கொண்டு சென்றவழியே திரும்பிவந்துவிட்டாள்.

(i) மூத்தமகனாகிய மால்கம் அங்கிலேய அரண்மனைக்கும், இளையோனாகிய டோனல்பேன் அயர்லாந்திற்கும் அடைக்கலந்தேடி ஓடிப்போனார்கள்.

## 4. Question.

(a) மக்பெத்துக்குக் குகைக்குள் தேவதைகள் மூவரும் எவ்வாறு தோன்றி என்ன சொல்லினர் ?

(b) மக்பெத் குகையினின்றும் வெளிப்பட்டபின் கேள்விப்பட்ட தென்ன?

(c) மக்பெத்து தன்தேசத்தார் யாவராலுங் கைவிடப்பட்டபோது எண்ணிய தென்ன?

(d) மக்பெத்மனைவி யிறந்ததெப்படி?

(e) மக்பெத்துக்கு ஒழிந்துபோனதிரம் உண்டானதெப்போது?

(f) மக்பெத்துக்குத் தலையாரிவந்து சொன்னதென்ன?

(g) மக்பெத் போர்க்குப் பின்வாங்கியபோது மக்டப் சொன்ன தென்ன?

(h) மக்பெத் மக்டப்பைக் குறித்துச் சொன்னதென்ன?

(i) மக்பெத்தின் மரணமெப்படி?

## Answer.

(a) முதல்தேவதை கவசந்தரித்த சென்னிவடிவாகத்தோன்றி மக்பெத்தைப் பெயர்சொல்லியழைத்து "சொல்லக்கேள் அரசனே! பைவ்பிரபுவை மற்றவர்களைப்போல நம்பத்தக்க இய்டனென்று எண்ணியேமாருதே எச்சரிக்கையாயிரு" என்பதாம.

மற்றொருதேவதை உடம்பெங்கும உதிரமயமான இளம்பிள்ளை வடிவாகத்தோன்றி "மக்பெத் ஒன்றுக்கே பயப்படாதே ஐயமுனை னமட்டும் பயமில்லை. மனிதர்களாலுனக்கு அச்சமுண்டாகுமென்று ஒருபொழுதுமெண்ணாதே. தாய்வயிற்றினின்றும இம்மண்ணுலகில் உதித்தமானிடன் எவனும் உனக்கு ஊறுசெய்ய வல்லவனல்லன துணிகரனாகவும் சிங்கவேற்றைப்போலப் பராக்கிரம முடையவனாகவும் கருமத்தில் கடைப்பிடியோனாகவும் நட" என்பதாம்.

மூன்றாவதுதேவதை சிரசிற் பொன்முடிதரித்த சிங்கார குழந்தை வடிவெடுத்துப் பெரிய பாதபமொன்றைச் சிறுகரத்தாற்பற்றி வெளிப்பட்டு மக்பெத்தைப்பெயரிட்டுக் கூவியழைத்து "பிள்ளாய் ஒருவனுடைய சதியோசனையால் உனக்குத் துன்பமுண்டாகுமென்றெண்ணி வருந்தாதே நீமயக்கமற்று மனமதேறு. டன்ஸினேன் மலையடிவாரமட்டும் பரவிய பர்னம ஆரணியம் நிலைபெயர்ந்து நடைகொண்டு உன்னோடு எதிர்த்துச் சமர்செய்ய வருமளவும் ஒருபொழுதும் உனக்கு அபஜயம் இல்லை" என்பதாம்.

(b) இறந்த அரசனது மூத்தமகனும், பட்டத்துக்கு முறைமையான தாயத்தனுமாகிய மால்கம் மக்பெத்தின் முடியைவாங்கித் தான்தரிக்கச் சண்டைக்கு யத்தனமாகி இங்கிலாந்தில் சேனைகளைச் சேர்க்கிறானென்பதும அச்சேனையிற்சேர்ந்து அவனுக்குத் துணைநிற்கப் பைவ் பிரபு மக்டப் அங்கு விரைந்துசென்றானென்பதுமாம்.

(c) நித்திரையில் நான் டங்கன் மன்னவனைக் கொன்றவண்ணம் எத்தப்புண்ணியவானாயினும் என்னுயிரைமடித்திருப்பானாயின் இப்பொழுது நான் டங்கன்பிரபுபெற்ற உயர்பதவி பெற்றிருப்பேனே. அவர்சமாதியில் அயர்ந்து துயின்று சுகித்திருக்கிறார் ராஜத்ரோகிக

னால் சேரிடும்கேடு இனி அவர்க்கு இல்லை. கூரியவாள், கூற்றினும் அதிவிரைவில் உயிர்க்கொலைபுரியும் கொடுவிஷம், குடிப்பகை, குலப்பகை, பிறதேசத்து மன்னர்பகை இவைகளும் இனி அவரை வருத்தா. என்று எண்ணுதலையெல்லாம் எண்ணித் தியங்கினான்.

(d) தான்செய்த மாபாதகத்தை நினைந்தும், ஊரார் பழிக்கப் படும் நிந்தனைக்குப் பயந்தும், புல்லும் பூமியும் உள்ளவரையில் இந்தப் பொல்லாப் பழிசுமக்கவோ உடம்பெடுத்தேனெனப் புகன்று தன்னுயிரைத் தானே மாய்த்துக்கொண்டனன்.

(e) மால்கம்போர்க்குப் படையெடுத்து முடுகிவருகிறானென்ற செய்தி செவிக்கு எட்டியமாத்திரத்தில் மனஞ்சலிப்பில்லாத மத்த வாரணத்தையொத்த மக்பெத்துக்கு முக்காலே மூன்றுவீசம் ஒழிந்துபோன தீரம் மீளவுமெழுந்தது.

(f) "வேந்தர்மணிமுடிகள் உரையும் வீரக்கழல்தரித்த வீரர்க்கு வீரனாகிய மக்பெத் அரசே! உன் பொற்பாதகமலம்போற்றி; மலை ஏறிநின்று மாற்றான் படையெடுத்துவருவதைக் காணப் பர்ணம்ஆரணியத்தைக் கண்ணெடுத்துப்பார்த்தேன்; அவ்வாரணியம் தன் நிலைபெயர்ந்து அசைவுற்றதாக என் கண்ணிலும் கருத்திலும் பட்டது. இப் பூவுலகில் எந்நாளும் எவருங்காணாத இந்தப்புதுமையைச் சமூகத்தில் அறிக்கைசெய்யத் தாமதித்து ஓடிவந்தேன்" என்றான்.

(g) "படுகொடியா! யமகாதகா! எரிநரகிற்கடிநாயே! அடா சண்டாளா!" என வாய்க்குவந்தபடி வைது ரோஷம்பிறக்க வசை பேசிச் சமர்செய்யத் தூண்டினான்.

(h) "என் பதறிப் பதைத்து வார்த்தைகள் வளர்த்திப் பேசுகிறாய் மக்டப் நீ என்னைச் சண்டைசெய்துவெல்ல நினைப்பது அங்காரத்தில் கத்திவீசி ஆகாயத்தை வெட்டிவிழுத்த நினைப்பதுபோலாகும். உன்கத்தி என் காயத்தில் ஒருபொழுதும் ஏறாது. மாந்திரிக பலத்தாலமைந்த இந்தக் காயம் மானிடர்கையால் மாளாவரம்பெற்றுவளர்ந்ததென்றறி" என இடித்துரைத்தனன்.

(i) அறுதியில் மக்டப் ஜயம்பெற்று மக்பெத்தின் தலையைக்கொய்தான்.

## 5. Question.

அடியில்வரும் பழமொழிகளுக்கு அர்த்தமென்ன?
அவை சேர்ந்த கதாசந்தர்ப்பமென்ன?

(1) மலடிமகன்.
(2) முடவன் கொம்புத்தேனுக் காசைப்பட்டாற் கிட்டுமா?
(3) கைப்பொருள்காணக் கண்ணாடிவேண்டுமோதான்?
(4) கும்பிடப்போனதெய்வங் குறுக்கேவந்ததுபோல.
(5) அஞ்சினவன் கண்ணுக்கு ஆகாயமெல்லாம் பிசாசுதான்.
(6) ஏறவிட்டு ஏணியைவாங்குதல்.

(7) கொடுங்கோன்மன்னர் வாழுநாட்டிற் கடும்புலி வாழுங்காடு நன்றே.

(8) நிலவிற்கு ஒளித்துப் பரதேசம் போவாரும் உண்டோ?

(9) கையிழந்த பழம்பொருள் கைக்ககப்பட்டதுபோல.

## Answer.

(1) மலடியினுடையமகன். இது ஆமைமயிர்க்கம்பளம், ஆகாயத்தாமரை என்பனபோல அசம்பவத்தைக் குறிக்குந் தொடர்மொழி:—இது மக்பெத் மாயப்பெண்கள்மொழியை மெய்யென்று நம்பினதின்பேரில் அது மெய்யல்லவென்பதற்கு சரித்திரமெழுதியவர் சொல்லிவரும் சந்தர்ப்பத்தில் நேர்ந்தது.

(2) தனக்குக் கிடைக்கமாட்டாத பெருங்காரியத்தை எட்டவிரும்புதல் பயனற்றது என்பதைத் தெரிவிக்கின்றது:—இது மக்பெத்தினுடைய பேராசையையும், வீண் நம்பிக்கையும் பார்த்த பங்குவோ என்னுந் தளபதி உமது எண்ணங் கைகூடாதென மக்பெத்துக்குச் சொல்லிய சந்தர்ப்பத்தில் நேர்ந்தது.

(3) வெளிப்படையாகத் தோன்றும்பொருளை ஆராயும்படி வேறு கருவிவேண்டியதில்லை என்பதைத் தெரிவிக்கின்றது:—இதுவும் அதே சந்தர்ப்பத்தில் பங்குவோவால் மக்பெத்துக்குச் சொல்லப்பட்டது.

(4) தேடிப்போனபொருள் இடைவழியில் வலியவந்தகப்பட்டது போல என்பதைத் தெரிவிக்கின்றது:—இது மக்பெத் மனைவி தனது நாயகன் அரசனாகவேண்டுமென நினைத்திருக்கையில் மக்பெத் வந்து மாயப்பெண்கள் சொன்னசொல்லைச் சொன்னபோது அந்தச்சொல்லை அவள் நினைத்து மகிழ்ந்த சந்தர்ப்பத்தில் நேர்ந்தது.

(5) பயந்தவனுடைய கண்களுக்குப் பார்த்தபொருளெல்லாம் பயங்கரமாகவே காணப்படும் என்பதைத் தெரிவிக்கின்றது:—இது மக்பெத் அரசனைக்கொல்லும்படி சென்ற அறைக்குள் அந்தரத்தில் ஒரு கட்டாரியைக்கண்டு தாவியபோது அது கேவல மாயாரூபமாயிருந்த சந்தர்ப்பத்தில் சரித்திரக்காரராற் கூறப்பட்டது.

(6) ஒருவனை ஒருகாரியத்தில் பிரவேசிக்கப்பண்ணிப் பின்பு அக்காரியத்திற்குத் தீங்குசெய்யும்விதம் என்பதைத் தெரிவிக்கின்றது:-இது மக்பெத் அரசனைக்கொன்றபின்பு பங்குவோவின் சந்ததியாரே நமக்குப் பின்பு உலகத்தையாள்வார்கள்; நமது சந்ததியார் ஆளமாட்டார்கள். ஆதலால் அரசனைக்கொன்றதினாலென்னபயனென்று மக்பெத்தும் அவன் மனையாளும் தெய்வத்தைநொந்த சந்தர்ப்பத்தில் நேர்ந்தது.

(7) நீதிதப்பிய அதிகாரஞ்செலுத்தும் அரசனுடைய நாட்டில் வாழ்வதைப்பார்க்கிலும் இரக்கமில்லாதபுலிகள் சஞ்சரிக்கும் காட்டில் வாழுவதே நன்மையுடையது. என்பதைத் தெரிவிக்கின்றது:-இது மக்பெத்தினுடைய அரசாட்சியின் கொடுமையைக்கண்ட அக்

காட்டார் அக்காட்டைவிட்டு வனம்போகும் சந்தர்ப்பத்தில் அவர்களால் நேர்ந்தது.

(8) தப்பக்கூடாதகாரியத்துக்கு எவ்வகை முயற்சிசெய்யினும் பயன்தராது. என்பதைக் குறிக்கின்றது:—இது மக்பெத் மக்டப் படையெடுத்துவந்து தன்னைக் கொல்லுநேரத்தில் ஓடியொளிக்க எங்கும் இடமில்லை என்ற சந்தர்ப்பத்தில் நேர்ந்தது.

(9) முற்காலத்தில் கையைவிட்டுத் தப்பியபொருள் பிற்காலத்தில் கையிலகப்பட்டதுபோல என்பதைத் தெரிவிக்கின்றது:—இது போர்க்களத்தில் போர்தொடங்கிய நேரந்தொட்டு மக்டப் மக்பெத்தைத்தேடி அவனை எதிரிற்கண்ட சந்தர்ப்பத்தில் நேர்ந்தது.

## 6. Question.

(1) காராசங்காய்ச்சி நடுச்செவியிலூற்றியதுபோல இருந்ததென்ன?

(2) யாருக்கு அது நாக்குக்கு நஞ்சும், நாசிகைக்கு அமுதமுமாகும்.

(3) சுகவாசமானவீடுகளை யறிவதெப்படி?

(4) மக்பெத்மனைவியின் முகமும், மொழியும், அகமும் எப்படி யிருந்தன?

(5) சோற்றில் நஞ்சிடும்பாவனையை யாருக்கு யார் சொல்லினார்?

(6) அன்னமிட்டோன் செய்யத்தகும் கடமையென்ன?

(7) தாமரையிலையில் தண்ணீர்த்துளி சறுக்கியதுபோல இருந்ததெவை? ஏன்?

(8) வினைவலியுந், தன்வலியுந் தெரியாமற் குதித்தவன் யார்?

(9) ஜயம்பெறுவது யாருக்கு அசாத்தியம்? இதற்கு உதாரணம் யாது?

(10) காரியத்தளவில் கையறுந்திருந்தவன் யார்? ஏன்?

(11) சிலையிலெழுத்துப் போலிருந்தது யாது?

(12) விறகுக்கிறைத்த நீராவதுபோ லிருந்ததுயாது?

## Answer.

(1) மக்பெத்துக்கு பங்குவோசொல்லிய அருமருந்தன்ன நீதிமொழி.

(2) மக்பெத்தின் மனைவிக்கு ஆம்.

(3) மாளிகையின் அணைசுவர், கபோதகம், குறடு, இரணை முதலியவிடங்களில் வளமான சந்துபொந்துபார்த்துத் தூக்கணாங் குருவிகள் கூடுகட்டியிருப்பதனால் அறியலாகும்.

(4) முகம் சிரிப்பாகவும், மொழி செவிக்கினிமையாகவும், அகம் விஷமாகவும் இருக்கும்.

(5) மக்பெத்துக்கு அவன் மனையாட்டிசொல்லியது.

(6) அதிதியின் உயிரைக் கன்னமிடவருஞ் சண்டாளனை ஆக்குரோஷத்துடன் தடைசெய்வதேயாம்.

(7) மக்பெத்தினுடையமனமும், அவன் மனைவியின்மனமுமாம். (என்) பங்குவோவைக் கொன்றபின்பு அவனுடைய உரு ஆவேசமாகவந்ததினால்.

(8) மக்பெத்.

(9) செங்கோல் செவ்விதாகச் செலுத்தாத அரசர் தங்கோட்டை கொத்தளங்களைப் பிடிக்கத் தாவடிபோகும் சத்துருவை அச்சுறுத்தி ஜயம்பெறுவது அவர்களுக்கு அசாத்தியம் (உதாரணம்) மக்பெத்தே.

(10) மக்பெத் (என்) யாவராலுங் கைவிடப்பட்டான்.

(11) மக்பெத்துக்குப்பின் முடிதாங்குமன்னவர் அவன் சந்ததியாரல்ல; பங்குவோவின் சந்ததியாரென முன் மாயப்பெண்கள் மொழிந்தவாக்கு. (யாருக்கு) மக்பெத்துக்கும், அவன் மனைவிக்குமாம்.

(12) அதிதியாகவந்த டங்கனைக்கொன்று அடைந்த இராஜசெல்வமானது மக்பெத் சந்ததியாருக்கில்லாமல் பங்குவோ சந்ததியாருக்கு அகப்படுவதேயாம்.

## 7 Quostion

(a) மக்டப் என்பவன் யார்?

(b) மக்டப்புக்குச் சிறந்த மற்றொருபெயரென்ன?

(c) மக்டப் என்பவன் மக்பெத்து தாயின்வயிற்றிற் பிறந்தாரியாரும் என்னைக் கொல்லாரென்றபோது சொல்லியதென்ன?

(d) மக்டப் மக்பெத்தின் தலையையரிந்து யாருக்குக் கொடுத்தான்?

(e) அரணியம் நிலைபெயர்ந்து நடந்து வருவதாகச் சேவகன் கூறிய விபரீதத்திற்கு நிமித்தமென்ன?

(f) மக்பெத் கட்டாரியைக் கொண்டுபோனபோது அரசன் சயனமண்டபத்தில் நேர்ந்ததென்ன?

(g) எவ்வகை அக்கிரமத்திற்கு முந்திநிற்பார் யார்?

(h) மெல்லியலெனப் பெண்ணுக்குப் பெயர்வந்ததேன்?

(i) மக்பெத்துக்குக் கேட்ட ஆகாசவாணியென்ன?

(j) வீரர்களிருவரும் பிரார்த்தித்த பிரார்த்தனையென்ன?

## Answer.

(a) ஸ்காத்திலாந்தில் மக்பெத்துக்குச் சினேகனாயிருந்தவன்.

(b) பைவ் பிரபு.

(c) "மாயப்பெண்கள் ஓதிய சித்திரப்பேச்சைத் திண்ணமெனக் கொண்டு மந்திரத்தில் மாங்காய்வீழுமென எண்ணி மதிகெட்டுச் சீரழியும்பேதாய்! அந்த மோகினியைக்கண்டு கேட்பாயானால் பத்து

மாதஞ்சுமந்து பெற்றெடுக்குமுன் பருவமுந்தி மக்டப் தாய்வயிற்றினின்றுங் கீறியெடுக்கப்பட்டவனென்று அது உன் மயக்கந் தெளியச்சொல்லும்" என்று அந்தரங்கத்தை அவன் செவியுட் புகட்டினான்.

(d) மால்கம் என்னும் இளவரசனுக்குக் காணிக்கையாகக் கொடுக்கப்பட்டது.

(e) மக்பெத்தின் கோட்டையைக் கைக்கொள்வதற்குத் தண்டெடுத்துச்சென்ற தளகர்த்தனாகிய மால்கம் பர்னம் ஆரணியத்திற்சேர்ந்தபொழுது தன் படைத்திரட்பெருக்கைப் பகைவர் கண்ணுறாவண்ணம் அவ்வனத்திலுள்ள விருக்ஷங்களில் தழைகளையாமல் தலைக்கொருகொம்புதறித்து அவரவர் தலைமறையக் கரத்தில் நிமிரப்பிடித்துச்செல்லும்படி சைநியங்களுக்குத் திட்டஞ்செய்ய தளபதிசொற்படி படைவீரரனைவரும் தழைசெறி கிளைகளைப்பிடித்து அணிவகுத்துச்சென்ற தோற்றம் எட்டநின்றுபார்த்த தலையாரி கண்ணுக்கு வனமே நின்றநிலை பெயர்த்து கிட்டுவதுபோல் அச்சமுறுத்தியதேயாம்.

(f) மக்பெத் அரசனுடைய சயன அறைக்குள் செல்லுமார்க்கத்தில் அந்தரத்தில் ஒருகட்டாரி அவன் கண்ணுக்குப் புலப்பட்டது. அதன்கைப்பிடி அவன்முகத்திற்கு எதிராகத் திரும்பியிருந்தது. கட்டாரி அலகிலும் முனையிலும் உதிரம் துளித்துளியாக ஒழுகியது. அவன் அதைப்பிடிக்கத்தாவினான். கைக்கு ஒன்றும் அகப்படவில்லை. சுத்தசூனியமாயிருந்தது, கண்டது கட்டாரியே அல்ல. கேவலமாயாரூபமாம்.

(g) வரம்புகடந்த பேராசையுள்ளவர்கள் நாள் ஏறஏற அவ்வாசையென்னும் பேயின்வசப்பட்டவர்களாய் எவ்வகை அக்கிரமத்திற்கும் முந்திநிற்பார்.

(h) மென்மையாகிய குணமுடையராதலைப்பற்றியே. இது பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைப்பெயர்.

## 8. Question.

(1) இருவினைப் பயனாவதென்ன? (2) முக்காலமாவதென்ன? (3) உபசாரமெத்தனை? (4) சேனையெத்தனை?

## Answer.

(1) நல்வினையினாலாகிய சுகமும், தீவினையினாலாகிய துக்கமும்.

(2) இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம்.

(3) ஆசனமளித்தல், கைகழுவநீர்தரல், கால்கழுவநீர்தரல், முக்குடிநீர்தரல், நீராட்டல், ஆடைசாத்தல், முப்புரிநூல்தரல், தேய்வைபூசல், மலர்சாத்தல், மஞ்சளரிசிதூவல், நறும்புகைகாட்டல், விளக்கிடல், கரும்பூரமேற்றல், அமுதமேந்தல், அடைகாய்தரல், மந்திரமலரால் அருச்சித்தல் எனப் பதினாறுவகையாம்.

(4) தேர், யானை, குதிரை, காலாட்படை என நான்கு.

## 9. Question.

அடியில்வரும் பதங்களுக்குப் பாடபுத்தகத்திலுள்ள
பரியாய நாமங்களையெழுதுக.

(1) பிள்ளை. (2) அரசன். (3) சொல். (4) பகைவன். (5) பெண். (6) சண்டை. (7) படுக்கை அறை. (8) பூமி. (9) இரத்தம. (10) படை. (11) நாயகன். (12) காடு.

## Answer.

(1) பிள்ளை:—குமாரன், மைந்தன், புத்திரன், மகன், குழந்தை.

(2) அரசன்:—வேந்தன், இராஜன், மன்னவன், கிரீடாதிபதி, பூபதி.

(3) சொல்:—வாக்கு, மொழி, புகல், வார்த்தை, வசனம், உரை

(4) பகைவன்.—மாற்றான், சத்துரு, எதிரி, பகைஞன.

(5) பெண்.—மாது, மெல்லியல், பேதை, பெருமாட்டி.

(6) சண்டை.—போர், சமர், செரு, அமர்.

(7) படுக்கை அறை:—சயன அறை, பள்ளி அறை, அமளிஅறை

(8) பூமி:—மாநிலம், பார், உலகு, தரா, மண், நிலம், குவலயம்.

(9) இரத்தம.—உதிரம், குருதி.

(10) படை:—சைந்நியம், சேனை, அணி.

(11) நாயகன.—புருஷன், கணவன், மணவாளன்.

(12) காடு.—அரண்யம், வனம், ஆரணியம்.

## 10 Question.

(1) இந்தச் செய்யுள்போல யாருக்குநடந்தது
"தீயவை செய்தார் கெடுத னிழலன்னை
வீயாதடியுறைந்தற்று" (குற-33.)

(2) இந்தச்செய்யுள்போல நன்றியறிந்தாயார்.
"காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினு
ஞாலத்தின் மாணப் பெரிது" (குற-11.)

(3) இந்தச்செய்யுள்போலத் துன்புற்று மகிழ்ந்தார்யார்,
"சுடச்சுடரும் பொன்போ லொளிவிடுந் துன்பஞ்
சுடச்சுடநோக்கிற் பவர்க்கு" (குற-40.)

(4) இந்தச் செய்யுள்போல நடந்தார் யார்?
"மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தந்
தகுதியான் வென்று விடல். (குற-27.)

## Answer.

(1) மக்பெத்துக்கு நடந்தது.
(2) டங்கன என்னும் அரசன்.

(3) மால்கம் என்னும் இளவரசன்.

(4) மக்டப் நடந்தான்.

## 11. Question.

மக்பெத்தினுடைய கதையைச் சுருக்கி 20 வரிக்கு மேற்படாம லெழுதுக.

## Answer.

மக்பெத் என்பவன் ஸ்காத்லாந்து தேசத்தரசனாகிய டங்கனுடைய படைத்தலைவனாகவிருந்து ஒருகால் பங்குவோவென்னுந் தளகர்த்தனையும் உடன்படுத்தி கலகக்காரர் அனைவரைக் கொலைசெய்து அரசனால் சம்மானிக்கப்பட்டிருந்தவன். அப்பால் சில மாயாரூபிகள் சொல்லிய சொல்லைநம்பி அரசாக்ஷி தனக்கு வேண்டுமென்ற மனைவியோடுயோசித்து அரசனை விருந்துக்கழைத்து நித்திரையிலே வதைத்து அரசாக்ஷியைத் தன்வசப்படுத்தி ஆண்டுவந்தனன். பின்பு மாயப்பெண்கள் சொன்னதுபோலவே தனக்குப்பின்பு பங்குவோவுடைய சந்ததியாரோ தன்னுடைய ஆளுகையைக் கைக்கொள்வாரோ என எண்ணி, பொறாமைப்பட்டு பங்குவோவையும் வதைத்தனன். அதன்மேல் பங்குவோவுடைய ஆவேசம் இவனைவெருட்டியதால் பின்னும் தேவதைகளைக்கேட்டு அவர்கள் சொல்லியசொல்லில் உறுதிவைத்து மக்டப்பினுடைய குடும்பத்தாரையும் வதைத்தனன். அதன்மேல் மக்பெத்தின் கொலைக்குத்தப்பி அங்கிலேயதேசத்துக்கோடிப்போன டங்கன் குமாரனாகிய மால்கம் மக்டப்போடுசேர்ந்து சில சேனைகளைக் கூட்டிவந்து மக்பெத்தை எதிர்த்துப் பொருதபோது மக்டப் கையினால் மக்பெத் இறந்தனன். மக்பெத்தின்மனைவி தான்செய்த வஞ்சனையைத் தானேநினைந்து புருஷனிறப்பதற்குமுன் தற்கொலை செய்துகொண்டனள். பின்பு ஸ்காத்லாந்து தேசத்தைப் பங்குவோவுடைய குமாரனாகிய பிலியான்சுவின் சந்ததியாரே அரசாண்டுவந்தனர்.

## 12. Question.

அடியில்வரும் வாக்கியங்களிலுள்ள பிழைகளைப் பிழைகளையுந் திருத்துக.

மயிலாப்பூறிலே வைசயற் குளத்திர்பிரன்த சிவைனேசர் என்னும்பெரபு உருவர் னெடுனால் தவம்பொறிந்து ஒறு புத்திரியைப்பெத்து திருமகுளைப்பேல சுன்தறமிரிக்கக்கன்டு பூம்பாவ எனப்பெயருட்டு இப்பொன்னைத் திருஞாண சம்பன்தசாமிகளுக்கு திருமணஞ்செய்யக்கும்படி வௌர்த்துவந்தாள். ஒறுனாள் பூம்பாவை சேடியரோடு கண்ணிமாடற்றுக்குப் பக்கற்றில் இறுக்கும் பூந்சோலையிட் சென்று பூக்குய்யும்பொழுது ஒருபாம்பு மல்லிகைப்பந்தலிலே ஒலித்துவன்து அவலைத்தீன்றபே உயிற்தொரன்தவள்.

## Answer.

மயிலாப்பூரிலே வைசியர் குலத்திற்பிறந்த சிவநேசர் என்னும் பிரபு ஒருவர் நெடுநாள் தவம்புரிந்து ஒரு புத்திரியைப்பெற்றுத் திருமகளைப்போலச் சுந்தரமிருக்கக்கண்டு பூம்பாவையெனப் பெயரிட்டு

இப்பெண்ணைத் திருஞான சம்பந்தசுவாமிகளுக்குத் திருமணஞ்செய்விக்கும்படி வளர்த்துவந்தனர். ஒருநாள் பூம்பாவை சேடியரோடு கன்னிமாடத்துக்குப் பக்கத்திலிருக்கும் பூஞ்சோலையிற்சென்று பூக்கொய்யும்போது ஒருபாம்பு மல்லிகைப்பந்தரிலே ஒளித்திருந்து அவளைத்தீண்டவே உயிர்துறந்தனள்.

## 13. Question.

அடியில்வரும் பதங்களின் அர்த்தபேதம் எழுதுக.

(1) கரை-கறை. (2) துரை-துறை. (3) கரி-கறி. (4) கலை-களை. (5) புலி-புளி. (6) குலம்-குளம். (7) மணம்-மனம். (8) கன்னி-கண்ணி. (9) பரவை-பறவை. (10) புனை-புணை. (11) முந்நீர்-முன்னீர். (12) எந்நாள் என்னாள். (13) அந்நாள்-அன்னாள். (14) அரசற்கு-அரசர்க்கு. (15) காப்பு-கார்ப்பு. (16) கோருதல்-கோறுதல்.

## Answer.

(1) கரை=ஓரம். கறை=குற்றம். (2) துரை=கனவான். துறை=வழி. (3) கரி=யானை. கறி=பதார்த்தம். (4) கலை=கல்வி. களை=பயிர்க்களை. (5) புலி=வேங்கை. புளி=புளிச்சுவை. (6) குலம்=வம்மிசம். குளம்=தடாகம். (7) மணம்=வாசனை. மனம்=உள்ளம். (8) கன்னி=பெண். கண்ணி=வலை. (9) பரவை=கடல். பறவை=பட்சி. (10) புனை=அலங்காரம். புணை=தெப்பம். (11) முந்நீர்=கடல். முன்னீர்=முன்னிருந்தநீர். (12) எந்நாள்=எந்தநாள். என்னாள்=எனதுநாள். (13) அந்நாள்=அந்தநாள். அன்னாள்=அவள். (14) அரசற்கு=அரசனுக்கு. அரசர்க்கு=அரசருக்கு. (15) காப்பு=காவல். கார்ப்பு=கரிப்பு. (16) கோருதல்=வேண்டல். கோறுதல்=கொலை.

## 14. Question.

இவற்றிற்கு எதிரிடைமொழி கூறுக.

(1) செங்கோல். (2) அங்கம். (3) கோலம். (4) மங்கலம். (5) இதம். (6) இயற்கை. (7) உள்ளது. (8) அசாத்தியம். (9) புகழ்ச்சி. (10) அகம். (11) துன்புறுவோர். (12) அசரீரி. (13) குறுநிலமன்னர். (14) விபத்து. (15) அந்தரங்கம். (16) ஊறு. (17) செய்மை. (18) செய்யன்மின். (19) செய்க. (20) பிறப்பு.

## Answer.

(1) கொடுங்கோல். (2) அனங்கம். (3) அவகோலம். (4) அமங்கலம். (5) அகிதம். (6) செயற்கை. (7) இல்லது. (8) சாத்தியம். (9) இகழ்ச்சி. (10) புறம். (11) இன்புறுவோர். (12) சரீரி. (13) பெருநிலமன்னர். (14) சம்பத்து. (15) பகிரங்கம். (16) பேறு. (17) அண்மை. (18) செய்ம்மின். (19) செய்யற்க. (20) இறப்பு.

# ஆர்த்தர் என்னும் இளவரசன் கதை.

## 1. Question.

(a) ஆர்த்தர் என்னும் இளவரசன்கதை யென்பதற்குப் பொரு ளென்ன ?

(b) பொருட்புணர்ச்சி இலக்கணக்குறிப் பெழுதுக ?

(c) இக்கதை முதலில் எப்பாஷையிலுள்ளது ?

(d) இக்கதையை அப்பாஷையிலெழுதினவர் யார் !

## Answer.

(a) ஆர்த்சர் என்று சொல்லப்படும் இளமையாகிய அரசனது கதையை புணர்த்துவது என்பது பொருள்.

(b) ஆர்த்தர்+என்னும்=அல்வழிப்புணர்ச்சி எழுவாய்த் தொகா நிலைத்தொடர். என்னும்+இளமை—அல்வழி. பெயரெச்சந் தொகாநிலைத்தொடர். இளமை+அரசன்—அல்வழி. பண்புத்தொகை நிலைத்தொடர். அரசன்+கதை=வேற்றுமைப்புணர்ச்சி ஆறும்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். அரசன்கதை என்பது ஆறும்வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர்.

(c) ஆங்கிலேய பாஷையிலுள்ளது.

(d) ஷேக்ஸ்பியர் என்னும் மகாவித்துவான்.

## 3. Question.

(a) ஆர்த்தர் எவற்றால் பவைபோல விளங்கினன் ?

(b) ஆர்த்தருடைய பிதாக்கள் எத்தனைபேர் ? முறையாக எழுதுக.

(c) ஆர்த்தர்தவிர மற்றவர்கள் அந்நாடகத்திலெப்படியானவர்கள்.

(d) ஆர்த்தரைப்பற்றி வழங்கும் உலகநீதிமொழி யென்ன ?

(e) ஆர்த்தர் அபர்த்தன் முகக்களையைப்பார்த்து யாதுரைத்தனர்.

(f) ஆர்த்தர் படித்த கடிதப்படி அபர்த்தன் ஆமெனறபோது அவ்வார்த்தர் சொன்ன பரிதாபமொழிகள் என்ன.

(g) ஆர்த்தர் சலாகை அழல் குளிர்ந்தபின் சொன்னதென்ன ?

(h) ஆர்த்தர் நார்த்டமன் மாளிகையில் யோசித்ததென்ன ?

(i) ஆர்த்தர் இறந்ததெப்படி.

(j) ஆர்த்தர்தாய் இறந்ததெப்படி.

(k) ஆர்த்தர்குறித்த கற்களின் முனைகள் எப்படியிருந்தன.

(l) ஆர்த்தர் என்னசொல்லி உயிர்விட்டனன் ?

(m) ஆர்த்தர் யாருக்கு பௌத்திரன் ?

## Answer.

(a) கள்ளிக்காட்டினிடை அகிலும், காகக்கூட்டத்திடை அன்னமும், குப்பையின்மாணிக்கமும், சேற்றிற் செந்தாமரையும்போல வனையோரிடை ஓர் அருமருந்தென மேன்மைபெற்று விளங்கினான்.

(b) மூன்றுபேர். ஜியாப்பிரி=தகப்பன். ரிச்சர்டு=பெரியதகப்பன். ஜான்=சிற்றப்பன்.

(c) அயலார் நன்மையை எள்ளளவும் எண்ணாது தத்தம் நன்மையையே நாடுகின்றவர்களாய் அறனை மறந்து மறனை நினைந்து மிகக் கொடியார்களாயினர்.

(d) தகப்பனுக்கிட்டது தலைச்சனுக்கு.

(e) ஒருநாள் உதயகாலத்தில் அபர்த்தன் ஆர்த்தரிருந்த சிறைச்சாலைக்குச் செல்லுகையில் மிக்க மனங்கலங்கிக் கவலையுற்றிருந்தது கண்டு ஆர்த்தர் அவனைநோக்கி ஐயா! இன்று நீர் ஏதோ மனக்கவலைகொண்டிருப்பதுபோல உமது முகக்குறி காணப்படுகின்றதே. என்னவிசேடமென வினவினான்.

(f) என்னை அவ்வாறு துன்புறுத்தவும் உனக்கு உள்ளந்துணிகின்றதா? நீ தலைவலியால் தவிக்கும்போது யான் எனது பூப்பட்டுடையால் உன்முடியை இறுக இசைத்து நோய்க்கு இதமாக என் இருகைகளாலும் மெல்லப்பிடித்தேனே! அன்றியும் அவ்வல்லியாமம் உனக்குச் சிறிதும் வருத்தம் தோன்றாதபடி வேண்டிய உபசாரங்களைச்செய்து உன் ஆயாசத்தைத் தணித்தேனே! அவ்வுபசாரங்கள் மோசமென உன்மனதுக்குத் தோன்றுமோ என்னலாமோ? என்போதாதகாலத்துக்கேற்க அவ்வாறு தோன்றினும் தோன்றும்; அஃதங்ஙனமிருக்கக் கடவுளுடைய சட்டளையேயாயினும் நீ என்கண்களைக்கொளுத்தத் துணிவது தகுதியோ? என் கண்களைக்கொளுத்த செங்கருக்கு எவ்வாறு உடன்படும் இந்த நேத்திரம் என்னை நோக்குவது சிறிதளவு சகித்தாயினும் உன்னைவிழித்திருக்குமோ? என இவ்வாறு மனமறுகி மொழிந்தனன்.

(g) இதோபார்! நெருப்பெல்லாப் பொருள்களும் கடுஞ்செயல்புரிய வந்து இரக்கமுற்றன; அனைத்தையு மழிக்கின்ற அழல், கல்லினும் கடிய இரும்பு இவைகட்கும் உன்னினும் இரக்கம் அதிகமாகியதே என்றான்.

(h) அபர்த்தன் உறுதியாக வாக்குத்தத்தஞ்செய்து போயினானும் வேறொருவனைக்கொண்டாகிலும் ஜான் தான்பிடித்தகாரியத்தை முடிப்பனேயொழியச் சும்மாவிடானென்று ஆர்த்தருக்கு நன்றாகத்தோன்றியது. அவ்வாறேத்தினம் நடந்த வர்த்தமானத்தால் நம் முயிரை நமன் இன்றே கைப்பற்றுமெனை ஆர்த்தர் உறுதியாகவெண்ணினான். அதனால் கோட்டையினின்றும் எவ்விதத்திலும் தப்பிப் பிரான்சுதேசம்போகும்படி நினைத்திருந்தான்.

(i) தப்பவகையில்லாமல் கோட்டையின் மதிண்மேல் உட்புறமேறி வெளியில் குதித்தபடியால் அவ்விடத்திருந்த கற்பாறையில் மோதப்பட்டு உயிர்விட்டனன்.

(j) ஆர்த்தருடையதாய் அங்கீர்ஸ் நகரத்தில் ஆர்த்தரைப்பிரிந்த அன்றைத்தினமே அவள் புத்திரசோகம்பொறாது பிராணனைப்போக்கிவிட்டாள்.

(k) ஆர்த்தரை நசுக்கிக்கொல்ல நினைந்திருந்த ஜானுடைய கொடுங்கோன்மைபோலிருந்தன.

(l) ஐயோ! என் சிற்றப்பனுடையசக்தி இச்சிலைகளிலும் அமைந்திருந்தனபோலும்; என்னுயிர் கடவுளிடம்சேரவும், என் எலும்புகள் இங்கிலாந்தில் அடக்கவும் ஆயதெனவுரைத்து உடனே உயிர்துறந்தனன்.

(m) எலெனோர் என்னும் பெயருடையாள்.

## 3. Question.

(1) ஜான் அரசாள்வதற்கு ஏதுவென்ன?

(2) ஜான்அரசுபுரிவது ஆர்த்தருக்கென்ன ஆனந்தமாயிருக்கலாம்

(3) ஜான் படையெடுத்துவந்ததைப்பற்றிப் பிராஞ்சியர் என்னவெண்ணினார்கள்.

(4) ஜானுக்குப்பின் எலெனோர் கேட்டகேள்விக்குக் கான்ஸ்டன்ஸ் எழுந்து என்ன சொன்னாள்?

(5) ஜான் அங்கீர்ஸ்நகரத்தார் சமாதானத்தை ஒப்பியதேன்?

(6) ஜான் ஆர்த்தரை யாராவசமொப்புவித்து என்னசொல்லினன்?

(7) ஜான் ஆர்த்தர்மீது பழிசுமத்த யோசித்ததேன்?

(8) ஜான் அரசிழந்ததெப்படி?

## Answer.

(1) ரிச்சர்டு இறந்தகாலத்தில் ஆர்த்தர் தன் அன்னையான கான்ஸ்டன்ஸ் என்பவளுடன் பிராஞ்சுதேசம் சென்றிருந்தான். இங்கிலாந்தில் அரசுபுரியவேண்டுமென்று வெகுநாளாக விருப்பமுற்றிருந்த ஜான் அச்சமையத்தில் ஆர்த்தரில்லாததைக்கண்டு தன் எண்ணத்தை நிறைவேற்றிக்கொள்ளுவதற்கு அதுதான் ஏற்றதருணமெனத் தெரிந்து ஆர்த்தர் சிறுவனாயிருந்தமையின் அரசாளுவதற் கேற்றவனல்லனெனக் குடிகளுக்குத் தாபம்போதனைசெய்து தானே அரசனாகுவதற்கு வேண்டிய முயற்சிசெய்தான்.

(2) ஆர்த்தர் பிறருடைய நன்மையையே பெரிதாக நினைக்கும் இயல்புடையராதலின் இங்கிலாந்தில் தன் சிற்றப்பனாகிய ஜான் அரசுபுரிவது அவனுக்கு ஆனந்தமாகவேயிருக்கலாம்.

(3) பிராஞ்சுதேசத்தாரனைவரும் ஜான்சொன்னபடி உடனே படையெடுத்துப் பிராஞ்சுதேசத்தரசனுடன் போர்புரியக் கடலைக் கடந்து வந்ததனையே இவனது துணிவு எத்தன்மைத்தென வியப்புற்றனர்.

(4) அநியாயமாய் அபகரிக்கின்றவர் உமது அருமைப்புதல்வனே என்பது வெட்டவெளிச்சம் பட்டப்பகலாக விளங்குகின்றதே "கைப்புண்ணுக்குக் கண்ணாடியேன்" என்றாள்.

(5) எதிரி எவருமின்றி இங்கிலாந்துக்கு அரசனாகி அவ்வரசாட்சிக்கு முக்கியபாத்தியஸ்தனான தன் தமயன் குமாரனைத் தன்வசத்தில் வைத்துக்கொள்ளுவது தனக்கு மிக்கநன்மையெனவறிந்து ஜானும் அதிகமாய் அகங்களித்து ஒப்புக்கொண்டனன்.

(6) ஜான் தான்கொண்ட கருத்துக்கிசைய ஆர்த்தரை அபர்த்தன் என்னும் ஒரு வீரன்வசத்தில் ஒப்புவித்து அவனை இங்கிலாந்துசேர்க்கக் கட்டளையிட்டனன். கட்டளையிடுகையில் இனி ஒருவர்கண்ணிலுமகப்படாமல் நீ இந்த ஆர்த்தரைக் காவல்செய்து வருவையாயின் உன்னையான் ஒருபொழுது மறவேனென வெளிப்படையாய் உறுதிமொழியுங் கூறியனுப்பினான்.

(7) பாரன் உன்னும் ராஜாங்கத்ததிகாரிகள் ஆர்த்தர் இறந்தசெய்தி எட்டின்மாத்திரத்தில் அவர்கள் நமதுமீது மனம் வேறுபட்டிருப்பார். ஆதலின் அனைவரும் ஒன்றுகூடி நம்மை உடனே அதஞ்செய்வார்களேயென அவன் மிகவும் அஞ்சினனாகி தான் தப்புமபடி அப்பழியை அபர்த்தன்மீது சுமத்தலாயினான்.

(8) பாரன் என்னும் ராஜாங்கத்துப் பிரபுக்கள் ஒருங்குசேர்ந்து ஆர்த்தரை ஜான்கொன்றதாக அவன்மீது குற்றஞ்சாட்டி அப்பொழுது இங்கிலாந்தின்மீது படையெடுக்கச் சித்தமாயிருந்த பிராஞ்சு தேசத்தரசன்மகன் லூயிஸ் என்பவனுடன் கூட சேர்ந்துகொண்டு சிரத்தாக்ஷிணியமாக ஜானை அடித்துத் துரத்திவிட்டனர். அரசிழந்த ஜான் பின்பு பட்டபாட்டை சொல்வது முடியாது.

## 4. Question.

(a) பிராஞ்சுதேசத்தரசனிடம் முறையிட்டார் யார்?

(b) பிராஞ்சுதேசத்து அரசனுக்கு இங்கிலாந்துதேசத்து அரசனாகிய ஜான் எழுதிய மறுமொழியென்ன?

(c) பிராஞ்சு அரசனோடு ஆஸ்திரியா அரசன் உடன்பட்டதேன்?

(d) பிராஞ்சு அரசன் அங்கீர்ஸ் நகரத்தில் சொன்னதென்ன?

(e) பிராஞ்சு அரச்ன் அங்கீர்ஸ் நகரத்தார் தீர்மானத்தை ஒப்பியதேன்?

(f) பிராஞ்சு அரசன் பெயரென்ன? அவன் மகன்பெயரென்ன?

## Answer.

(a) ஆர்த்தருடைய அன்னையாகிய கான்ஸ்தன்ஸ் என்பவள்.

(b) யான் என்றுங் கைவிடேன்; நீங்கள் அதற்கு உடன்படாதவர்களாயின் படையெடுத்துப் பிராஞ்சுதேசத்திற்குவந்து ஆர்த்தருக்கு உதவிபுரிய விரும்பிய வேந்தருடன் போர்செய்ய ஆயத்தமாயிருக்கிறேன் என்பதாம்.

(c) ஆர்த்தரது தந்தையான ரிச்சர்டு ஆசியாவுக்குச்சென்று திரும்புகையில் வழியே ஆஸ்திரியாதேசத்து அரசன் அவனைப்பிடித்துச் சிறைசெய்தவன். ஆதலால் அப்பிழையைப் போக்கிக்கொள்ளும்

நிமித்தமே இப்பொழுது இவன் ஆர்த்தருக்கு உதவிபுரியவந்த பிரா ஞ்சியரோடு சேர்ந்துகொண்டு ஜான்மீது படையெடுக்கத் துணிந்த னன்.

(d) இங்கிலாந்து அரசுக்கு உரியவன் ஆர்த்தரே ஆதலின் அதனை ஜான் அவனுக்குக் கொடுக்கவேண்டுவது அவசியமென வற்புறுத்திப் பேசினான்.

(e) பிராஞ்சுதேசத்திலுள்ள அங்கிலேயரது ஆட்சியனைத்தும் பி ராஞ்சு துரைத்தனத்தைச் சேர்ந்துவிடுகின்றதென மனமகிழ்ந்து அத்தீர்மானத்தை ஒப்புக்கொண்டனன்.

(f) பிலிப்பு. அவன்மகன் லூயிஸ்.

## 5. Question.

(1) அங்கீர்ஸ் நகரத்தார் பிலிப்பு, ஜான் இவ்விருவருடைய வெ ற்றியை ஒப்புக்கொள்ளாதது என்?

(2) அங்கீர்ஸ் நகரத்தார் இருபக்ஷத்தாருக்குஞ் சொன்ன உடன் படிக்கை என்ன?

(3) அங்கீர்ஸ் நகரத்தில் கூடிய ஆலோசனை சபையில் யாரார் வந்திருந்தனர்?

(4) அங்கீர்ஸ் நகரம் எங்குள்ளது?

(5) அங்கீர்ஸ் நகரத்தில் நடந்த சுபசெய்தி ஒன்றென்ன?

## Answer.

(1) யானே வெற்றிகொண்டேன் யானே வெற்றிகொண்டேன் என ஜான், பிலிப்பு இருவரும் இரைந்துகொண்டு கோட்டைவாயி லைத்திறந்து தனக்கே பட்டணத்துள்புக வழிவிடவேண்டுமென இ ருவரும் தனித்தனி நகரத்தவரை வற்புறுத்தினர். அப்பட்டணத்தார் அவர்கள் போர்புரிந்ததைப் பெரியதோர் கோபுரத்துமேனின்று பார்த்திருந்து இருவரும் பின்வாங்கினதாகக் கண்டமையால் இவரு டைய வெற்றியையும் ஒப்புக்கொள்ளாமலும், கோட்டைவாயிலைத் திறலாமலுமிருந்தனர்.

(2) பிலிப்பின் மூத்தமகனான லூயிசுக்கு ஜானுடைய அண்ணன் மகள் பிளாஞ்சி என்பவளை விவாகஞ்செய்விப்பதென்பதும், ஜானுக் குப் பிராஞ்சுதேசத்திலுள்ள நாடுகளை அப்பெண்ணுக்கு ஸ்திரீதன மாகக் கொடுத்துவிடுவதென்பதும் அதற்குப்பிரதி பிலிப்பு ஜானை இங்கிலாந்துக்கு உரிமைபூண்ட அரசனாக ஏற்றுக்கொள்ளுவதுடன் ஆர்த்தரை அவன்கையில் ஒப்புவித்து விடுவதென்பதுமாம்.

(3) அச்சபையில் மூன்றுதேசத்து மன்னவர்களும் ஆர்த்தரும் அ வன் அன்னையும் அவன் பாட்டியாரும் கூடினார்கள்.

(4) இங்கிலாந்து ராஜ்யத்தைச் சேர்ந்திருந்த மேன் என்னும் மா காணத்தில் உள்ளது.

(5) அங்கீர்ஸ் நகரத்தார் தீர்மானப்படி பிராஞ்சுதேசத்தரசனாகிய பிலிப்புவின் மூத்தகுமாரன் லூயிசு என்பவனுக்கும், ஜானுடைய

அண்ணன்மகளாகிய பிளாஞ்சியென்பவளுக்கும் சுபமண சம்பந்து ஒன்று நடந்தது.

## 6 Question.

அடியில்வரும் பழமொழிகளுக்கு அருத்தமும் அவைநேர்ந்த சந்தர்ப்பமும் தெளிவாக எழுதுக.

(a) தானாகவந்த சீதேவியைக் காலாலே உதைத்துத்தள்ளுவது போல.

(b) தந்தையில்லாபிள்ளையைத் தலையிலே தட்டலாமா?

(c) கைப்புண்ணுக்குக் கண்ணாடி யேன்?

(d) உரலிலே தலையை நுழைத்து உலக்கைக்குப் பயந்தால் முடியுமா?

(e) கிணறுவெட்டப் பூதம் புறப்பட்டுவந்ததே.

(f) யானை தன்தலையில் தானே மண்ணைவாரிப் போட்டுக்கொள்ளுவதுபோல.

(g) வாய்ச்தவிடும் போய் அடுப்பு நெருப்பும் அவிந்ததுபோல?

(h) தானொன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைக்குமன்றோ?

(i) அடாதுசெய்தவர் படாது படுவர்.

(j) அரசு அன்று கொல்லும், தெய்வம் நின்றுகொல்லும்.

## Answer.

(a) முயற்சியின்றிக் கிடைத்த நன்மையை அலட்சியஞ்செய்து நீக்கிவிடுவதுபோல. இது:—ஆர்த்தர் தனக்குக் கிடைக்கவேண்டிய ராஜரீகத்தைத் தன சிறறப்பனுக்குக் கொடுத்தாலும் வருத்தப்படான் என்றசந்தர்ப்பத்தில் நேர்ந்தது.

(b) ஆதரவில்லாதவனைக் கெடுக்கவொண்ணாது என்பதற்குதாரணம். இது.—பிராஞ்சுதேசத்தரசன ஜானுக்கெழுதிய திருமுகத்தில எழுதியனுப்பிய சநதர்ப்பததில நேர்ந்தது.

(c) மறைவின்றி தெரியும்பொருளை அறிவதற்குக் கருவி வேண்டியதில்லை என்பதற்குதாரணம். இது:—ஆர்த்தருடைய அன்னை ஆர்த்தருடைய பாட்டியாளைநோக்கி உமது புதல்வரோ எனது மகனுக்குரிய ராஜ்யத்தைக் கைக்கொள்ள உத்தேசிக்கிறது வெளிப்படையாகத் தோற்றுகின்றதே என்றசந்தர்ப்பத்தில் நேர்ந்தது.

(d) துன்பந்தருங் காரியத்தில அகப்பட்டுக்கொண்டபின் துன்பத்துக்குப் பயந்து பயனென்ன? என்பதற்குத் திருஷ்டாந்தம். இது.—ஆர்த்தர் கண்களைச் சுடும்படி அபர்த்தன நெருப்புப்பற்றிய சலாகையைக் கொண்டுவரச்செய்து ஆர்த்தருடைய கைகால்களைக் கட்டும்படி உத்தரவுசெய்ய ஆர்த்தர் என்னைக் கட்டவேண்டுவதில்லை உனது வசத்தி லகப்பட்ட நானே கைகாலசையாமல் நிற்கிறேனென்ற சந்தர்ப்பத்தில் நேர்ந்தது.

(e) இலாபந்தருகின்ற ஒருகாரியத்தைச்செய்ய அதினிடமாக ஒரு பெரியதுன்பம் வந்ததென்பதற்குக் குறிப்பு. இது:—ஜான் ஆர்த்தரைக் கொல்லும்படி முயன்று அபர்த்தனுக்குச் சொல்லவே அபர்த்தனும் அப்படியே செய்தேனென்றனன். ஜான் பின்பு இதை பாரன் ராஜாங்கத்தாருக் கறிவிக்க அவர்கள் இது எப்படியாகும் அவன் இறந்த இடமே போய்ப்பார்க்கவேண்டுமெனச் சென்றபோது ஜானுக்குப் பயந்தோன்றி இது எப்படி முடியுமோவென்று எண்ணிய சந்தர்ப்பத்தில் நேர்ந்தது.

(f) பிறராலல்லாமல் தனக்குத் தானே துன்பந் தேடிக்கொள்ளுவதை யுணர்த்துகின்றது. இது:—ஜான் ஆர்த்தரைக் கொல்லப் போய்ப் பிறராலல்லாமல் தானே தனது நாட்டைவிட்டுத் துரத்தப்படவேண்டியதைத் தேடிக்கொண்டானென்ற சந்தர்ப்பத்தில் நேர்ந்தது.

(g) உள்ளதுங்கெட்டு அடையவேண்டியதையும் இழந்ததுபோல. இது:—ஜான் தனது அரசுரிமையையுங் கைவிட்டு இனியடையவேண்டிய நன்மையையுங் கெடுத்துக்கொண்டான் என்ற சந்தர்ப்பத்தில் நேர்ந்தது.

(h) ஒருவன் தான் எண்ணியபடி முடியாது; கடவுள் எண்ணியபடியே முடியுமென்றதைக் குறிக்கின்றது. இதுவும்:—ஜான் நாட்டைவிட்டுத்துரத்தப்படுஞ் சந்தர்ப்பத்தில் நேர்ந்தது.

(i) தகாதகாரியஞ்செய்பவர் பெருந்துன்பத்தை யனுபவிப்பர் என்பதைக்குறிக்கின்றது. இதுவும்:—ஜான் தன்னாட்டைவிட்டுத் துரத்தப்படுஞ் சந்தர்ப்பத்தில் நேர்ந்தது.

(j) அரசன் குற்றங்கண்டபோதே தண்டிப்பான். தெய்வம் பொறுத்து தண்டிக்குமென்பதைக் குறிக்கின்றது. இதுவும்:—ஜான் நாட்டைவிட்டுத் துரத்தப்படும் சந்தர்ப்பத்தில் நேர்ந்தது.

## 7. Question.

பின்வருந் தொடர்மொழிகள் யாரைநோக்கி யார்சொன்னவை.

(a) பொய்சொன்னவாய்க்குப் போஜனங்கிடைக்காதடா!

(b) உள்ளங்கை நெல்லிக்கனிபோல யாவும் பிரத்தியக்ஷமாயிருக்க.

(c) வெட்டவெளிச்சம் பட்டப்பகலாக விளங்குகின்றது.

(d) என் போதாதகாலத்துக்கேற்க அவ்வாறு தோன்றினுந் தோன்றும்.

(e) கறந்தபால் கறந்தபடி எங்கேரமெடுத்தோதியும்.

## Answer.

(a) பாரன் என்னும் ராஜாங்கத் ததிகாரிகளில் மூவர் அபர்த்தனுக்குச்சொல்லியது.

(b) இதுவும் அவ்வதிகாரிகள் மூவரும் அபர்த்தனுக்குச் சொல்லியது.

(c) ஆர்த்தருடைய தாய் ஜானுடைய தாய்க்குச் சொல்லியது.

(d) ஆர்த்தர் அபர்த்தனுக்குச் சிறைச்சாலையில் சொல்லியது.

(e) அபர்த்தன் பாரன் அதிகாரிகள் மூவருக்குஞ் சொல்லியது.

## 8. Question.

(1) நானிலமாவதென்ன? இதற்கிலக்கணமென்ன? வேறிரண்டெழுதுக.

(2) ஸ்திரீதனமாவதென்ன? இது எப்படி வழங்குகின்றது.

(3) சுபகாரிய துரந்தரர் பரகாரிய பராமுகரென்றாலென்ன?

(4) திருமுகமென்பதென்ன? இதற்கிலக்கணமென்ன? வேறிரண்டெழுதுக.

(5) உபேக்ஷை, துர்ப்போதனை, சுயகாரியம், இவற்றிற் கெதிரிடையென்ன?

(6) குடிகொன் றிறைகொள்பவன் என்பதை முதலாகவுடைய செய்யுள் ஒன்று எழுதுக.

(7) கறந்தபால் கறந்தபடி என்பதென்ன?

(8) ஆர்த்தர் கதையிலறியும் பயனென்ன? அதற்குத் தகுதியாக உமது பாடத்திலுள்ள குறள் வெண்பா ஒன்றெழுதுக.

(9) "எத்தன்மைத்து" இதில் தன்மைத்து என்னசொல்? மற்றப்பால் இடங்களில் எப்படிவரும்.

(10) ஆர்த்தர் கதையைச்சுருக்கி 18-வரிக்குள் எழுதிக்காட்டுக.

## Answer.

(1) நால்வகைநிலம்; மருதம், குறிஞ்சி, முல்லை, நெய்தல் என்பவையாம். இப்பெயர் நான்காகிய நிலத்தையுடைய பூமிக்குவழங்கலால் பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை யென்பது இலக்கணம். பெருந்தகை நினைந்தான், ஆண்டகை வந்தான் என்பனவும் இவையே.

(2) கலியாணத்தில் மணமகளுக்குத் தாய்வீட்டார் கொடுக்கும் பொருள்கள். இது சீதனமென வழங்குகின்றது.

(3) தங்கள் காரியத்தில் முயற்சியுடையாராகி, மற்றவர் காரியத்தில் கவனமில்லாதவராவார் என்பதாம்.

(4) ஓலை. மங்கலவழக்கு என்பது இலக்கணம். நன்காடு, தாலி பெருகிற்று என்பனவும் இவையே.

(5) அபேக்ஷை, சத்போதனை, பரகாரியம்.

(6) குடிகொன் றிறைகொள்ளுங் கோமகற்குக் கற்று
மடிகொன்று பால்கொளலு மாண்பே—குடியோம்பிக்
கொள்ளுமா கொள்வோர்க்குக் காண்டுமே மாநிதியம்
வெள்ளத்தின் மேலும் பல.

(7) உள்ளது உள்ளபடியேயிருத்தல்.

(8) பிறர்க்குக் கேடுசெய்ய நினைப்பவன் தானே கெடுவானென்றதையுணர்ந்து பிறர்க்குக் கேடுசெய்யாதிருத்தலே அக்கதையினாலடையும் பயனாம்.

> "மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழி
> னறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு" (குறள்-32.)

(9) பண்படியாற்பிறந்த ஒன்றன்பாற்படர்க்கைக் குறிப்பு வினைமுற்று. எத்தன்மையன், எத்தன்மையான், எத்தன்மையாள், எத்தன்மையார், எத்தன்மையேன் எத்தன்மையேம், எத்தன்மையாய், எத்தன்மையீர். எனவரும்.

(10) ஜியாப்பிரியென்னுந் தந்தையினுடைய இங்கிலாந்து அரசுரிமை அவன்குமாரனாகிய ஆர்த்தருக்கு உரிமையாயிருக்க ஆர்த்தர் இல்லாதசமயங்கண்டு ஆர்த்தருக்குச் சிற்றப்பனாகிய ஜான் என்பவன் தானேயரசுபுரிந்து வந்தான். இச்சேதிதெரிந்த பிராஞ்சு அரசன் அஸ்திரியாதேசத்தரசனோடு கலந்து ஆர்த்தருக்குதவியாக ஜானின்மீது படையெடுத்து வந்து அங்கர்ஸ நகரஞ் சோதபோது அந்நகரார் பிராஞ்சு அரசன் மகளுக்கு ஜானுடைய மூத்த அண்ணன் மகனை விவாகஞ்செய்து ஜானுக்குப் பிராஞ்சுதேசத்துள்ள நாடுகளைப் பெண்ணுக்குச் சீதனமாகக் கொடுக்கவும் ஜானுக்கு இங்கிலாந்து அரசுரிமை நிலைக்கவும் ஆர்த்தர் ஜானிடத்தில் இருக்கவும் தீர்மானிக்க யாவரும் ஒப்புக்கொண்டு விவாகத்தையும் நடத்தினர். பின்பு, ஜானுடைய கட்டளையால் அபர்த்தன்செய்த தீவினைக்குப் பயந்து ஆர்த்தர் இறந்தான். இதையறிந்த பாரன் ராஜாங்கத்தார் ஜானே ஆர்த்தரைக் கொலைசெய்வித்தானெனத்தேர்ந்து இங்கிலாந்தின்மீது படையெடுக்க அப்போது மூஸ்ஒப்பாயிருந்த பிராஞ்சியரோடு சேர்ந்து வந்து ஜானை அடித்துத் துரத்திவிட்டு இங்கிலாந்தைப் பிடுங்கிக்கொண்டார்கள். என்பதாம். இது தானொன்றுநினைக்கத் தெய்வம் ஒன்று நினைத்ததற்குத் திருட்டாந்தம்.

## பெர்டிட்டா என்பவள் கதை.

---

### 1. Question.

பின்வருந் தொடர்மொழிகளுக்கு அருத்தம் எழுதுக.

(a) ஒருகால் வாரிதியின்மீது வங்கமேறிச்சென்ற இருவர்.

(b) நிர்மானுஷிய மானதோ ரரணிய மடர்ந்த ஓரிடத்தில்.

(c) அமையத்தில் நாற்புறமும் எழிலிகள் எழுந்தன.

(d) ஆக்களும் அஜங்களு மமிதமாய்ப் பரவலாயின.

(e) சுயம்வரமாய் ஒருகன்னியை வரித்துக்கொண்டனன்.

### Answer.

(a) ஒருநாள் கடலின்மீது கப்பலில் ஏறிச்சென்ற இருவர்.

(b) மனிதசஞ்சாரமில்லாததாகிய ஒரு காடு அடர்ந்த ஓரிடத்தில்.

(c) சமயத்தில் நான்குபக்கத்திலும் மேகங்கள் எழுந்துவந்தன.

(d) பசுக்களும், ஆடுகளும் அளவில்லாமல் விர்த்தியாயின.

(e) தன்கோரிக்கையாகவே ஒருபெண்ணைமணமகளாகக் கோரிக் கொண்டனன்.

## 2. Question.

(1) கப்பலிலிருந்து கரையேறிய இருவர் யார்?

(2) குழந்தையைத் தனியே விடும்போது கனவான் சொன்ன தென்ன?

(3) இடையன்மகன் கண்ட கோரமான இரண்டுகாட்சியென்ன?

(4) பெர்டிட்டா என்பதற் கர்த்தமென்ன? அது யார் பெயர்.

(5) குழந்தையின் தாய்தந்தையருடைய பேரென்ன?

(6) இடையன்வீட்டுக்கு ராஜகுமாரன்வந்து பெண்ணைக் காணு தற்குக் காரணஞ்சொல்லுக.

(7) இடையன் குடியிருந்ததேசத்து அரசன்பெயரென்ன? அவ ன் மகன்பெயரென்ன?

(8) பாலினு என்பது யாருடைய பெயர்?

## Answer.

(1) ஒருவன் சிறந்த கனவான்; மற்றவன் மீகாமன்.

(2) "பேதைப்பெண்ணே! நான் நேற்றிரவு கனவில் உன் அன் னையைக்கண்ணுற்றேன். அவள் துக்கக்கடலில் அமிழ்ந்துகிடந்தா ள். என்னுடன்பேசப் பலதரம் முயன்றனளாயினும் நவில நாவெ ழாதுவருந்திப் பின்னர், உனக்குப் பெர்டிட்டாவெனப் பெயரிட்டு உன்னை இக்கடற்கரையில் விட்டுப்போம்படி சொல்லி மறைந்து போயினள். அன்னைமொழிந்தபடி உன்னை இங்கே விட்டுவிடுகிறே ன், உனக்கு க்ஷேமமுண்டாகக்கடவது. காற்றுமழை காணப்படுகின் றனவாதலின் நான்விரைந்து வங்கத்தருகுபோய்ச் சேருகிறேனென வுரைத்து, அக்குழந்தையை அங்குத் தனியேவிட்டுச் சென்றனன்.

(3) கண்ணுக்கெட்டினதூரத்தில் கடலில் ஒருகலம் வெகுஜனங் களோடு முழுகிப்போயினதென்பதும், அவ்வழியேபோன பெரிய மனிதனொருவனைக் கரடி துரத்திக் கொன்றுவிட்டதென்பதுமாம்.

(4) இடையருடைய பாஷையில் இழக்கப்பட்டதென் றர்த்தமா ம் குழந்தையாகக் கடற்கரையிற்கிடந்த பெண்ணின்பெயர்.

(5) தந்தை=லியாந்திஸ். தாய்=அருமியன்.

(6) இராஜகுமாரன் ஒருநாள் பருந்துவிட்டு விளையாடுகையில் அப்பருந்து அவ்விடையன் வீட்டுவழியாகப் பறந்துபோயது. அ தைத் தொடர்ந்துசென்ற அவ்விளவரசன் பருந்துகாரணமாக இடை யன்வீட்டுக்கு சென்றவளவில் அங்குள்ள பெர்டிட்டாவென்னுங் கட்டழகியைக் கண்ணுற்றனன்.

(7) அரசன்பெயர் பாலிஜன், அவன் மகன்பெயர் பிளாரிஜல்

(8) அருமியினுடைய உயிர்த்தோழியின் பெயர்.

## 3. Question.

(a) பாலிஜனும், அவன்மந்திரியும் கேட்டகேள்விக்கு இடையன் சொன்னதென்ன ?

(b) பாலிஜன்கேள்விக்கு அவன் மகன் சொன்னதென்ன ?

(c) லியாந்திஸ் பெர்டிட்டாவைத் தன் மகளென்று ஒப்புக்கொள்வதற்கு ஆதாரமென்ன ?

(d) தகப்பன் சொல்லுக்குப் பயந்த பிளாரிஜல் என்னசெய்தான் ?

(e) லியாந்திஸ் தன்மகளைக் கேட்டுக்கொண்டதென்ன ?

(f) சிசிலித் தேசத்திலுண்டான ஓர் வதந்தியென்ன ?

## Answer.

(a) அவன்யாரோ யானறியேன். ஆயின் நற்குணங்கள் நிறையப் பெற்றவன், அவன்பெயர் தாரிகல் என்கிறான், என்மகளை நேசித்திருக்கிறான், மிக்க செல்வமுடையவனாகவும் காணப்படுகிறான், என அவன் விடைபகர்ந்தனன்.

(b) தன்தந்தையென்பதை யுணராதவனாகி அச்சிறுவன் இவ்வகை அற்பப்பொருளில் இப்பெண்மணி ஆசைகொள்ளாளென்பதை நன்குணர்ந்தவனாதலின் நான் இவற்றில் ஒருபொருளும் கொள்ளவில்லையென மறுமொழி கூறினான்.

(c) ராஜசபையில் பெர்டிட்டாவைக்காப்பாற்றின கோவலனெழுந்து அப்பெண்மணி பச்சைக்குழந்தையாய் தன்னந்தனியே கடலோரத்தில் ஒருகாட்டிலே பரிதாபமாய்ப் புலம்பக்கண்டு தான் எடுத்து வந்துவளர்த்த வரலாறுகளை விளம்ப அவ்வமையத்தில் அக்குழந்தை அணிந்திருந்த அவ்வணிகளையும் அவற்றின்மேற் கட்டியிருந்த பட்டாடையையுங்கண்டு அரசன் அவையாவும் தன் அருமையான நாயகி அருமியனுடையவை யெனவறிந்து ஆநந்தக்கடலிலாழ்ந்து பெர்டிட்டா நெடுநாளாகக் காணாதிருந்த தன் அருமைமகளேயென நிச்சயித்து சபைநடுவே சந்தோஷமாக யாவருக்குஞ் சொல்லினன்.

(d) அப்பொழுது சிசிலித்தேசத்துக்குச் செல்லச் சித்தமாயிருந்த மரக்கலமேறித் தானும் பெர்டிட்டாவும் அத்தேசம்சென்று முற்காலந்தொட்டுத் தன் தந்தைக்கு உயிர்த்தோழனாயிருந்த அத்தேசத்திறைவனைக் காண்பதென மனவுறுதிகொண்டதினால் மரக்கலமேறி குறித்தவண்ணம் சிசிலித்தேசத்தரசனிடம்போய்ச் சேர்ந்தான்.

(e) நெடுநாளைக்குமுன் தான் மதிமயக்கங்கொண்டு மனைவிமக்களைப் பகைத்து பின்னர் ஒருநாளும் தன்கண்ணிற் படாதபடி மகளை நெடுந்தூரத்துக்கப்பால் உய்த்துவரக் கட்டளையிட்டதும், அந்தத்துயரந்தாளாது மனைவி மாண்டுபோனதுமாகிய துக்கக்கதைகளைக்கதைத்துத் தன்பிழையைப் பொறுக்குமாறு மகளை வேண்டினான்.

(f) உயிருள்ளதுபோலவே அருமியனது பதுமை ஒன்று பாலிஞ செய்துவைத்திருக்கிறுளென வெகுநாளாய் அங்கோர் வதந்தியுண்டு.

## 4. Question.

பின்வரும் பதங்களுக்குப் பரியாயநாமங்களெழுதுக. (1) மகள் (2) இடையன் (3) கப்பல் (4) கப்பலோட்டி.

## Answer.

(1) மகள்=பிள்ளை, சிறுமி, மகவு, குழந்தை, குழவி, பேதை, பெண்.

(2) இடையன்=கோவலன், ஆயன்.

(3) கப்பல்=கலம், மரக்கலம், வங்கம்.

(4) கப்பலோட்டி=மீகாமன், மாலுமி.

## 5. Question.

அடியில்வரும் பழமொழிகள் யாருக்கு யார் சொல்லியது. எந்தச் சமயம்.

(1) ஊமைகண்ட கனவு.

(2) ஆயிரங்காலத்துப்பயிர்.

(3) பழம்நழுவிப் பாலில் விழுந்ததுபோல.

(4) விதியை மதியால் தடுக்கலாமா ?

## Answer.

(1) பெர்டிட்டா பிளாரிஜலுக்குச் சொல்லியது ? அரசனுத்தரவின்படி பிளாரிஜல் தன்னைப் பிரிதலுக்காக இரங்கிய நேரம்.

(2) அரசஞகிய பாலிஜன் இடையனுக்குச்சொல்லியது ? இடையன் இருவருக்கும் கலியாணம் நடத்த உத்தேசிக்குஞ்சமயத்தில்.

(3) இடையன் பிளாரிஜலுக்குச் சொல்லியது. இடையன் தன் மகளைப் பிளாரிஜலுக்குக் கொடுக்க நினைத்தசமயத்தில்.

(4) பெர்டிட்டா பிளாரிஜலுக்குச் சொல்லியது ? இதுவும், அரசனுத்தரவிஞல் பிளாரிஜல் தன்னைவிட்டுப்பிரியும்படி வேண்டியிரங்கிய சமயம்.

# மிராந்தாவின் கதை.

## 1. Question.

(1) மிராந்தா தீவிலே எத்தனைவருஷகாலமிருந்தாள் ?

(2) தியூனிஸ் நகரத்து மன்னன் கலியாணத்துக்கு யாரார் வந்திருந்தனர்.

(3) பிராஸ்பிரோ தொழில் செய்யச்சொல்லிக்கொடுத்த கட்டளையிஞல் பெர்தினுந்துகொண்ட உறுதியென்ன ?

(4) அந்தோனியோவின் துர்க்குணத்தைப்பற்றியெழுதுக.

(5) நேபில்ஸ் நகரத்தில் நடந்த சுபசெய்தி ஒன்றென்ன ?

(6) மிராந்தாவின் குணங்களைப்பற்றி ஐந்துவகைக்குக் குறையா தெழுதுக.
(7) ஏரில் என்னும் தேவதையின் வரலாறென்ன ?
(8) இராக்ஷதத்தன்மையுடையான் யார் ? அவன் பின்பு யாருக்கு ஐக்கியமானான் ?
(9) மிராந்தா நகரத்தைவிட்டுத் துரத்தப்பட்டபோது வயதென்ன ?

## Answer.

(1) பன்னிரண்டு வருஷம்.

(2) நேபில்ஸ் நகரத்தரசனும் அவனது புதல்வர் பெர்தினந்து, சபாஸ்தியான் என்பவர்களும் பிராஸ்பிரோவின் சகோதரன் அந்தோனியாவும், கான்ஸலோவுமாம்.

(3) அப்பொழுது பெர்தினந்து உலகத்தில் பிழைப்பின்றி எக்காரியமும் செய்து முடிக்கலாகாது. பிள்ளைகள் விளையாடுகின்றனரே அது உழைப்பின்றி ஆகின்றதா ? மிக்க ஊதியம்வேண்டிப் பற்பல காரியங்கள் செய்கின்றாரே அவை உழைப்பில்லாமல் உண்டாகின்றனவா ? உழைப்பில்லான் பழிப்படைவான் ஆதலின் உயர்வும் தாழ்வும் தொழில்செய்பவனைப் பற்றியவையேயொழியத் தொழிலைப்பற்றியவையல்லவென உள்ளத்தில் உறுதிகொண்டு துணிந்து பிராஸ்பிரோ இட்ட வேலைகளை யிட்டமுடன்செய்ய ஆரம்பித்தனன்.

(4) அந்தோனியோவானவன் முதன்முறை தன்வசத்தில் தன்தமயனால் ஒப்புவிக்கப்பட்ட இராச்சியத்தைத் தானே அபகரிக்கவெண்ணி அதற்குரிய உபாயங்கள் செய்யத்தொடங்கி நேபில்ஸ்தேசத்தரசனோடு நேசம்பாராட்டி அவ்வரசனைக்கொண்டே அத்தமயனையும், தமயனுக்கு ஒரே குமாரத்தியாகிய மிராந்தாவென்னும் குணவதியையும் ஒரு பாழாகிய கலத்திலேற்றி ஒரு தீவிற்செலுத்தினன். இரண்டாமுறையும் நேபில்ஸ் நகரத்தரசன் குமாரனாகிய சபாஸ்தியானோடு கூடிக்கொண்டு பெர்தினந்து கடலில்மூழ்கி மாண்டானென நிச்சயித்து நேபில்ஸ் நகரத்தரசன் நித்திரைசெய்கையில் அவனைக்கொன்று அவனுடைய அரசை சபாஸ்தியானுக்குக் கொடுக்க எண்ணினான். அது தெய்வகடாக்ஷத்தினால் தப்பியது.

(5) நேபில்ஸ் நகரத்தரசனுடைய மூத்தமகனான பெர்தினந்துக்கும், மிலன் நகரத்தரசனாகிய பிராஸ்பிரோவின்மகளாகிய மிராந்தா என்பவளுக்கும் சுபமணம் ஒன்று நடந்தது.

(6) அன்புடையவள், அருளுடையவள், அறிவுடையவள், இனியவை கூறுபவள், இன்னாசெய்யாதவள், ஒழுக்கமுடையவள், ஊக்கமுடையவள், செய்ந்நன்றியறிபவள், குறிப்பறிபவள், குற்றங்கடிபவள்.

(7) இது பிராஸ்பிரோ சென்றதீவிலிருந்த ஒரு சூனியக்காரியால் ஒரு மரப்பொந்தில் சிறையிருந்து, பின்பு பிராஸ்பிரோவால் அது நீங்கி அவனுக்குப் பணிவிடைசெய்துகொண்டிருந்தது.

(8) காலிபன் என்பவன். பிராஸ்பிரோவுக்கு அடிமையாயினன்

(9) மூன்றுவயதும் முற்றுப்பெறவில்லை.

## 2. Question.

அடியில்வரும் பழமொழிகளுக்குத் தகுதியாக இங்கிலீஷ் மொழிபெயர்ப்பு எழுதுக.

### (Proverbs.)

Page.

32. சொல்வார் சொன்னாலும் கேட்பார்க்கு மதியில்லையா?
32. மலடிமகன்.
33. முடவன் கொம்புத்தேனுக்கு ஆசைகொண்டால் கிட்டுமோ?
33. கைப்பொருள்காணக் கண்ணாடி வேண்டுவதேன்?
34. பூனைபோலிருந்து புலிபோலப்பாயும் இயற்கையுள்ளவன்.
34. கும்பிடப்போனதெய்வம் குறுக்கேவந்தது.
39. அஞ்சினவன் கண்ணுக்கு ஆகாயமெல்லாம் பிசாசுதானே.
42. ஏறவிட்டு ஏணியை வாங்குமவன்போல்.
45. ஜயமுள்ளமட்டும் பயமில்லை. [டு நன்றே.
48 கொடுங்கோன்மன்னர் வாழும்நாட்டிற் கடும்புலிவாழுங் கா
52. மந்திரத்தில் மாங்காய்விழுமென எண்ணுதல்.
56. சர்ப்பனுக்கு இட்டது தலைச்சனுக்கு.
56. தானாகவந்த சீதேவியைக் காலால் உதைத்துத்தள்ளுவது
58. வெட்டவெளிச்சம் பட்டப்பகல்.
58. கைப்புண்ணுக்குக் கண்ணாடியேன்?
58. பொன் ஆபரணத்திலும் புகழாபரணமே பெரிது. [மா
63. ஊசியிலே தலையை நுழைத்து உலக்கைக்குப் பயந்தால்முடியு
64. கிணறுவெட்டப் பூதம் புறப்பட்டாற்போல். [வதுபோல
67. யானை தன்தலையில் தானே மண்ணைவாரி போட்டுக்கொள்
67. அடாதுசெய்தவர் படாதுபடுவர்.
67. தானொன்றுநினைக்கத் தெய்வம் ஒன்று நினைக்கும்.
67. அரசு அன்று கொல்லும். தெய்வம் நின்றுகொல்லும்.
69. திக்கற்றவர்க்குத் தெய்வமேதுணை.
73. பழம்நழுவிப் பாலில்விழுந்ததுபோல.
73. ஊமைகண்ட கனவு.
74. விதியை மதியால் தடுக்கலாமா?
81. காலத்துக்குத் தகுந்த கோலம்.
81. அவப்பொழுதிலும் தவப்பொழுது நல்லது.
84. நீர்ஆழம் காணலாம் நெஞ்சாழம் காணமுடியாது.
84. காலால் இட்டவேலையைக் கையால் செய்யவேண்டும்.
86. பொறுத்தார் பூமியாள்வார்.

## Answer.

### (Proverbs.)

PAGE.

32. No matter what others say have not those who hear sense to judge for themselves ?

32. The son of a barren woman ; (*i.e*) absolute falsehood.

33. If a lame man longed for the honey that hung from a branch can he get it ?

33. Does it require a mirror to see an object in the hand.

34. She will be quiet as a cat, but will spring like a tiger.

34. The deity one went to worship came to meet one crosswise.

39. To the timid the sky is full of demons.

42. Like the act of a man who removes the ladder after allowing one to mount.

45. There is no fear so long as there is success.

48. A jungle inhabited by fierce tigers is better than a country ruled by a cruel tyrant.

52. To think that mangoes will fall by a charm.

56. What was given to the father will be entailed on the first-born.

56. To kick the goddess of prosperity when she unsought visits you.

58. As clear as broad day-light.

58. Is a mirror required for a sore in the hand.

58. The ornament of reputation is greater than ornaments of gold.

63. Will your fear of the pestle avail aught after your head has become fast in the mortar.

64. As if a demon had sprung out of a well just dug.
67. As an elephant throws sand on its head.
67. The wicked are sure to be ruined.
67. Man proposes, God disposes.
67. The King kills at once, God delays and kills.
69. God is the help of the destitute.
73. Like fruit slipping and falling into milk.
73. The dream of the dumb.
74. Can destiny be averted by prescience.
81. Equippage suited to the occasion.
81. Time is better spent in austerities than in vanity.

84. The depth of water may be ascertained, but not the depth of the heart.

84. We must do with great dutifulness the commands dictated by our superiors.

86. Those who put up with injurios may rule the earth.

# செய்யுளியற்சுருக்கம்.

---

## I. Question.

(a) செய்யுளாவது என்ன? நன்னூல் சூத்திரமென்ன?

(b) வெண்பா என்பதற்குப்பொருளென்னை? அது எத்தனைவகை?

(c) பழமொழி, நீதிநெறிவிளக்கம், குறள் இவற்றிலுள்ளவெண்பா என்னவெண்பா?

(d) வெண்பாவிற்குரிய தளையென்ன? சீரென்ன? அடியென்ன?

(e) இயற்சீர்வெண்டளை, வெண்சீர்வெண்டளை என்பதென்ன? உதாரணமென்ன?

(f) அசை, சீர், தளை, அடி, தொடை இவைகட்கு விபரங்கூறுக.

## Answer.

(a) பலவகைப்பட்ட சொற்களாலும் பொருளிருத்தற் கிடமாகப் புலவர்களால் அலங்காரம்பொருந்தச் செய்யப்படுவதாம். "பல்வகைத்தாதுவின் உயிர்க்குடல் போற்பல - சொல்லாற்பொருட் கிட - னாக உணர்வினின்-வல்லோர் அணிபெறச் செய்வன செய்யுள்." (பெய-11-சூ.)

(b) வேற்றுத்தளை கலப்பின்மையாகிய பாவாம். குறள்வெண்பா, சிந்தியல்வெண்பா, நேரிசைவெண்பா, இன்னிசைவெண்பா, சவலைவெண்பா, பஃறொடைவெண்பா என ஆறுவகைப்படும்.

(c) பழமொழியிலும், நீதிநெறியிலும், உள்ளவை நேரிசைவெண்பாவும், இன்னிசைவெண்பாவுமாம். குறளிலுள்ளவை குறள்வெண்பாவேயாம். குறள்வெண்பாவினபெயர் அதனாற்சமைந்த நூலுக்கு ஆனமையால் நூல் காரணவாகுபெயர்.

(d) தளையாவது:—இயற்சீர்வெண்டளையும், வெண்சீர்வெண்டளையுமாம். சீராவது:—இயற்சீரும், வெண்சீருமாம். அடியாவது:—ஈற்றடி முச்சீரடியும் மற்றவை நாற்சீரடியுமாம்.

(e) தேமா, புளிமா என்னும் வாய்பாட்டு நேரசைச்சீர்முன் நிரையசைச்சீர்வந்து புணர்வதும், கருவிளம், கூவிளம் என்னும் வாய்பாட்டு நிரையசைச்சீர்முன் நேரசைச்சீர்வந்து புணர்வதும் இயற்சீர் வெண்டளையாம்.

தேமாங்காய், புளிமாங்காய், கருவிளங்காய், கூவிளங்காய் என்னும் வாய்பாட்டு நேரசைச்சீர்முன் நேரசைச்சீர்வந்து புணர்வது வெண்சீர் வெண்டளையாம்.

"நன்றி-மறப்பது-நன்றன்று-நன்றல்ல
தன்றே-மறப்பது-நன்று. (குறள்-17.)

நன்றி+மறப்பது=தேமாமுன் நிரைபுணர்ந்ததால் இயற்சீர் வெண்டளை.

மறப்பது + நன்றன்று = கருவிளமுன் நேர்புணர்ந்ததால் இயற்சீர் வெண்டளை.

நன்றன்று + நன்றல்ல = தேமாங்காய்முன் நேர்புணர்ந்ததால் வெண்சீர்வெண்டளை.

நன்றல்ல + தன்றே = தேமாங்காய்முன் நேர்புணர்ந்ததால் வெண்சீர்வெண்டளை.

தன்றே + மறப்பது = தேமாமுன் நிரைபுணர்ந்ததால் இயற்சீர்வெண்டளை.

மறப்பது + நன்று = கருவிளமுன் நேர்புணர்ந்ததால் இயற்சீர் வெண்டளை.

(f) அசையாவது:—எழுத்தினாலாக்கப்படுவது. அது நேரசை, நிரையசையென இரண்டு. தனிக்குறிலாவது, தனிநெடிலாவது, குற்றொற்றாவது, நெட்டொற்றாவது இருந்தால் நேரசையாம். (உதாரணம்) அ-ஆ-அம்-ஆம். இருகுறிலாவது இருகுறிலைச்சார்ந்த மெய்யாவது, குறிலும்நெடிலுமாவது குறில்நெடிலைசார்ந்த மெயயாவது இருந்தால் நிரையசையாம். (உதாரணம்) அணி-அறம்-சுறா-விளாம்.

சீராவது:—அசைகளாலாக்கப்படுவதாம் அது:—இரண்டசை கூடினால் ஈரசைச்சீர், அல்லது இயற்சீர், அகவற்சீர் எனவும், மூன்றசைகூடினால் மூவசைச்சீர், அல்லது உரிச்சீர் எனவும், நாலசைகூடினால்நாலசைச்சீர் அல்லது பொதுச்சீர் எனவும், ஓரசையாகவேயிருந்தால் அசைச்சீரெனவும் பெயர்பெறும்.

தளையாவது:—சீரோடு சீர்கட்டப்படுவதாம். அது:—இயற்சீர் வெண்டளை, வெண்சீர் வெண்டளை, கலித்தளை, நேரொன்றாசிரியத்தளை, நிரையொன்றாசிரியத்தளை, ஒன்றிய வஞ்சித்தளை, ஒன்றாவஞ்சித்தளை என எழுவகைப்படும்.

அடியாவது—தளையடுத்து நடப்பதாம். அது:—இருசீர் இணைந்தால் குறளடியெனவும், மூன்றுசீர் இணைந்தால் சிந்தடியெனவும், நான்குசீர் இணைந்தால் நேரடி, அல்லது அளவடியெனவும், ஐந்துசீர் இணைந்தால் நெடிலடியெனவும், அறுசீர்முதல் எத்தனைச்சீர் இணைந்தாலும் கழிநெடிலடியெனவும் ஐவகைப்பட்டு வழங்கும்.

தொடையாவது:—தொடுக்கப்படுவதாம். அது:—முதலெழுத்து ஒத்துவந்தால் மோனைத்தொடையெனவும், இரண்டாமெழுத்து ஒத்துவந்தால் எதுகைத் தொடையெனவும் இருவகைப்படும்.

## II. Question.

(1) பாவென்பது எத்தனைவகைத்து? அவற்றின் இனங்களெவை? [கணமென்ன?

(2) நேரிசை, இன்னிசை, குறள் என்னும் வெண்பாக்களுக்கிலக்

(3) விருத்தங்களுக் கிலக்கணமென்ன? பாடபுத்தகத்திற்காட்டுக.

(4) மோனைக்குரிய எழுத்துகளெவை? [வேண்டும்"

(5) வெண்பாவுக்குரிய ஓசையென்ன? என்ன இராகத்தில் பாட

## Answer.

(1) வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என நான்கு. வெண்பாவிற்கு:—வெண்டுறை, வெண்டாழிசை, வெளிவிருத்தம் எனவும், ஆசிரியப்பாவிற்கு:—ஆசிரியத்துறை, ஆசிரியத்தாழிசை, ஆசிரியவிருத்தம் எனவும், கலிப்பாவிற்கு:—கலித்துறை, கலித்தாழிசை, கலிவிருத்தம், எனவும் வஞ்சிப்பாவிற்கு:—வஞ்சித்துறை, வஞ்சித்தாழிசை, வஞ்சிவிருத்தம எனவும், துறை, தாழிசை, விருத்தம் என இனங்களுளளன.

(2) நேரிசைவெண்பா:—முதல் மூன்றடிகள் நாற்சீரடிகளாகவும், நான்காம் அடிமாத்திரம் முச்சீரடியாகவும் இரண்டாம் அடியின் கடைச்சீர் முதலெதுகைசேர்ப்பத் தனிச்சீர்பெற்றும், வெண்டளைவழுவாமல் செப்பலோசையுடையதாய் ஒரு விகற்பத்தாலேனும் இருவிகற்பத்தாலேனும் நாள், மலர், காசு, பிறப்பு எனனும் வாய்பாட்டுச் சீரால் முடிவதாம். See-பழமொழி 8-16-17-19.

இன்னிசைவெண்பா:—தனிச்சொல்பெறாமல் நான்கடியேயுடைத்தாய நேரிசைவெண்பாவிற் சிறிது பிறழ்ந்துவருதாம், See-பழமொழி 9-10-11-14.

குறள்வெண்பா:—இரண்டடி வெண்பாவாகி முன்னது நாற்சீரடியும், பின்னது முச்சீரடியுமாய் செப்பலோசை வழுவாமல் வெண்டளை பிழையாமல ஒருவிகற்பததாலேனும், இருவிகற்பத்தாலேனும நாள், மலர், காசு, பிறப்பு என்னும் வாய்பாட்டு அசைச்சீரால் முடிவதாம், See-குறள். 18-17-14-13-ஒருவிகற்பம். 2-7-11-15 - இருவிகற்பம்.

(3) விருத்தம்:—எந்தச்சீரினாலும், தளையினாலும், அடியினாலும், தொடையினாலும் வரபபெற்று நான்கடியும் ஒரே அளவாய்ச சந்தப்பிறழ்ச்சியின்றி வருவதாம்.

நான்கு சீரடியாகிய கலிவிருத்தம், See-இராமாயணம்-4-5-6.

ஐந்து சீரடியாகிய கலிநிலைத்துறை, See-இராமாயணம்-9-10-11.

அறுசீரடியாகிய ஆசிரியவிருத்தம், See-திருவாய்மொழி-1-2-3.

எழுசீரடியாகிய ஆசிரியவிருத்தம், See-அரிச்சந்திரபுராணம்-6-7-8.

எண்சீரடியாகிய ஆசிரியவிருத்தம், See-திருவாசகம்-4-5.

பதினான்குசீரடியாகிய ஆசிரியவிருத்தம், See-தாயுமானவர்-3-4-5.

(4) (a) அ, ஆ, ஐ, ஔ.
(b) இ, ஈ, எ, ஏ.
(c) உ, ஊ, ஒ, ஓ.
(d) ச, த.
(e) ந, ஞ.
(f) ம, வ.

இவ்வெழுத்துகள் ஒவ்வொருவரி முழுவதும் ஒன்றுக்கொன்று மோனை எழுத்தாகும்.

(5) செப்பலோசை. சங்கராபரணத்தில் பாடவேண்டியது.

# இலக்கணம்.

## 1. Question.

(a) (1) திசைச்சொல். (2) திரிசொல். (3) வடசொல் என்றாலென்ன? முறையே இரண்டிரண்டுதாரணமும், நன்னூல் சூத்திரமும் எழுதுக.

(b) (1) ஆகுபெயர்க்கும். (2) அன்மொழித்தொகைப் பெயர்க்கும் பேதமென்ன? வகையொன்றுக்கு மூன்றுதாரணமும், அன்மொழித்தொகைக்குச் சூத்திரமும் எழுதுக.

(c) (1) தொழிற்பெயர். (2) முதனிலைத்தொழிற்பெயர். (3) முதனிலைதிரிந்த தொழிற்பெயர். (4) முதனிலைபெறாத தொழிற்பெயர் இவற்றிற்கு விதியும், உதாரணமும் காட்டுக.

## Answer.

(a) (1) கொடுந்தமிழ் நாட்டுமொழியும், பிறபாஷைமொழியும் செந்தமிழிற்கலந்து செந்தமிழ்ச்சொல்லை ஒத்துவருவனவாம். (உதாரணம்) தள்ளை—தாய், செப்பு—சொல். "செந்தமிழ் நிலஞ்சேர் பன்னிரு நிலத்தினும்-ஒன்பதிற் றிரண்டினில் தமிழ்கூறு நிலத்தினும்-தங்குறிப்பினவே திசைச்சொலென்ப. (பெய-16 சூ.)

(2) ஒருபொருளைக்குறித்த பலசொல்லாகியும், பலபொருளைக்குறித்த ஒருசொல்லாகியும், கற்றோர்மாத்திரம் அறியும்பொருளினவாய் வருவனவாம் (உதாரணம்) கிள்ளை, சுகம், தத்தை—இவை கிளியென்னும் ஒருபொருளையுணர்த்தின. வாரணம்—இது சங்கு, யானை, கோழி, எனப் பலபொருளுணர்த்தியது. "ஒருபொருள் குறித்த பலசொல் லாகியும்-பலபொருள் குறித்த ஒருசொல் லாகியும்-அரிதுணர்பொருளன திரிசொல்லாகும். (பெய-15-சூ.)

(3) ஆரியத்திற்குந் தமிழிற்கும் பொது எழுத்தாலும், ஆரியத்திற்கேயுரிய சிறப்பெழுத்தாற்றிரிந்த எழுத்தாலும், இவ்விருவகை எழுத்தாலும் செந்தமிழ்மொழியை யொப்பனவாகி வடதிசையிலிருந்து செந்தமிழ் நிலத்துவந்து வழங்குவனவாம். (உதாரணம்) கமலம், அரன். "பொது எழுத்தானும், சிறப்பெழுத்தானும், ஈரெழுத்தானும் இயைவன வடசொல். (பெய-12-சூ.)

(b) (1) ஆகுபெயர்:—ஒருபொருளின் இயற்பெயர் அத்தப்பொருளுக்குச் சம்பந்தமாகிய வேறொருபொருளுக்கு முற்காலந்தொட்டு வழங்கிப் பெரும்பாலும் ஒருமொழியிலேவரும். (உ-ம்.) தாமரைப் பாதம், புளையல் எடுத்தான். வெள்ளைவந்தது.

(2) அன்மொழித்தொகைப்பெயர்:—வேற்றுமைத்தொகை முதலிய ஐந்துதொகையின்பின் வேறுமொழி தொக்கு இருமொழிக்குக் குறையாமல் வரும் (உ-ம்.) பெருந்தகை நினைத்தான். ஆண்டகைவந்தான், பொற்றொடி-தந்தாள், தாழ்குழல் அழைத்தனள். "ஐந்தொகை மொழிமேற் பிறதொகல் அன்மொழி" (பொது-18-சூ.)

(c) (1) தொழிற்பெயர்:—தல், அல்-முதலியவிகுதிகளைப் பெற்று வருவது தொழிற்பெயராம். (உ-ம்.) நடத்தல், வாட்டம்.

(2) முதனிலைத்தொழிற்பெயர்:—தல், அம், முதலிய விகுதிகளைப்பெறாமல் முதனிலையே தொழிற்பெயர்ப் பொருளையுணர்த்துவது முதனிலைத் தொழிற்பெயராம். (உ-ம்.) களை, முளை.

(3) முதனிலைதிரிந்த தொழிற்பெயர்:—தல், அம், முதலிய விகுதிகளைப்பெறாமல் முதனிலைகளே திரிந்து தொழிற்பெயரப் பொருளைத்தருவது முதனிலைதிரிந்த தொழிற்பெயராம். (உ-ம்.) கேடு, ஊண.

(4) முதனிலை பெறாத தொழிற்பெயர்:—பகுதி விகுதி, முதலிய பகுப்பில்லாமலும், மற்ற வினைவிகற்பங்கள் பிறத்தற்கிடமில்லாமலும் வருவது முதனிலைபெறாத தொழிற்பெயராம். (உ-ம்.) சரணை, வேட்டை.

## II Question.

அடியில் வருவனவற்றை உதாரணத்தோடு விளக்குக.

(a) ஏவல் வினைக்கும், முன்னிலைவினைக்கும் வேறுபாடென்ன?

(b) ஏவல்வினைக்கும், வியங்கோள்வினைக்கும் பேதமென்ன?

(c) வியங்கோள் என்றால் அர்த்தமென்ன?

(d) வியங்கோளுக்கும், செய்யுமென்னுமுற்றிற்கும் மாறு என்ன?

## Answer.

(a) ஏவல்வினை விகுதியாற் காலங்காட்டி எதிர்காலத்தில் மாத்திரம் வரும். (உ-ம்.) நடவாய், நடமின். முன்னிலைவினை இடைநிலையாற் காலங்காட்டி முக்காலத்திலும் வரும். (உ-ம்) நடந்தாய், நடக்கின்றாய், நடப்பாய்.

(b) ஏவல்வினை முன்னிலையிடத்தில் ஒருமை பன்மையைமாத்திரம் உணர்த்திவரும் வினைமுற்றாம் (உ-ம்) செய்வாய், செய்மின். வியங்கோள்வினை ஐம்பால மூவிடங்களிலும் செல்லும் வினைமுற்றாம். (உ-ம்.) அவன்செய்க, அவள்செய்க, அவர்செய்க, அதுசெய்க, அவைசெய்க, நான்செய்க, நாம்செய்க, நீசெய்க, நீர்செய்க.

(c) வியங்கோள்=ஏவற்பொருளைக் கொண்டிருப்பது. வியம்=ஏவல்.

(d) வியங்கோள் முன்சொன்னதுபோல ஐம்பால் மூவிடங்களிலும வரும் வினைமுற்றாம். உதாரணம் முன்னர்க்காண்க. செய்யுமென்னுமுற்று ஆண்பால், பெண்பால், ஒன்றன்பால், பலவின்பால ஆகிய இந்நான்குபாலில்மாத்திரம் வரும் வினைமுற்றாம். (உ-ம்.) அவன் செய்யும், அவள்செய்யும், அதுசெய்யும், அவைசெய்யும்.

## III. Question.

(a) செயப்படுபொருள் குன்றியவினைக்கும் குன்றாவினைக்கும் பொதுவினை நான்கு எழுதுக. [துக.

(b) விதிவினைக்கும், மறைவினைக்கும் பொதுவினை மூன்று எழு

(c) செய்வினைக்கும், செயப்பாட்டுவினைக்கும், பொதுவினை மூன்று எழுதுக. [துக.

(d) தன்வினைக்கும், பிறவினைக்கும் பொதுவானபகுதி ஆறு எழு

(e) குறிப்பினாற்பொருளறியுஞ்சொற்களெவை ? சூத்திரமென்ன!

## Answer.

(a) வெளுத்தான், சிந்தினான், சிதறினான், தேற்றினான்.

(b) வாராய், உண்ணாய், செய்யா, (=செய்து, செய்யாமல்).

(c) கடல்சூழுலகம், மீன்விழுங்கினவன், புலிகொன்றான்.

(d) கரை, தேய், மறை, பிரி, அலை, எரி.

(e) (1) ஒன்றொழி பொதுச்சொல். (2) ஆகுபெயர்ச்சொல். (3) வலித்தல் முதலிய ஒன்பது விகாரச்சொல். (4) தகுதி வழக்குச் சொல். (5) அன்மொழித்தொகைப் பெயர்ச்சொல். (6) தொகைக் குறிப்புச்சொல். (7) முதற்குறிப்புச்சொல். (8) வினைக் குறிப்புச் சொல். (9) பிறகுறிப்புச்சொல் முதலியவாம். "ஒன்றொழி பொதுச்சொல் விகாரந்தகுதி-ஆகுபெயர் அன்மொழி வினைக்குறிப்பே-முதல்தொகை குறிப்போ டின்னபிறவுங்-குறிப்பின் தருமொழி அல்லன வெளிப்படை. (பெய-சூ-12.)

## IV. Question.

(a) வழுவமைதியென்றாலென்ன ?

(b) திணை, பால், இடம், காலம், மரபு இவற்றின் வழுவமைதிகளுக்கு இரண்டிரண்டுதாரணமும், நன்னூல் சூத்திரமும் காட்டுக.

(c) பண்புத்தொகைக்கும், இருபெயரொட்டுப் பண்புத்தொகைக்கும் பேதமென்ன ? உதாரணமென்ன ? சூத்திரமென்ன ?

## Answer.

(a) இலக்கணத்திற்கு வழுவாயிருப்பினும் பெரியோர்களால் அங்கீகரித்துக்கொள்ளப்பட்டது வழுவமைதியாம். வழு=குற்றம்.

(b)

| | |
|---|---|
| அவன் மணந்தளர்ந்தான்<br>மக்கள் கடவுளுடைமை | திணைவழுவமைதி<br>(பொது-26-28-சூ.) |
| (ஒருவனை) அவர் வந்தார்<br>(புதல்வனை) என்னம்மை வந்தாள் | பால்வழுவமைதி<br>(பொது-28-சூ.) |
| சாத்தன்றாய் செய்வேனே<br>நீயோ அவனோ யாரிது செய்தார் | இடவழுவமைதி<br>(பொது-29-சூ.) |
| போர்செய்தால் இறந்தாய்<br>யான் பண்டெயில்வது இக்கழகம் | காலவழுவமைதி<br>(பொது-33-சூ.) |
| உயர்ந்தோங்கு மலை<br>இச்செயல் யான்செய்தது | மரபுவழுவமைதி<br>(பொது-47-49-சூ.) |

(c) குணப்பெயருக்கும் குணிப்பெயருக்கும் உள்ள ஒற்றுமையை விளக்கும் ஆகியவென்னும் பண்புருபு இடையே மறைந்துவருவது

பண்புத்தொகையாம். உ-ம். கருங்குதிரை, வெள்ளாடு விரிந்தால் கருமையாகிய குதிரை, வெண்மையாகிய ஆடு எனவிரியும்.

ஒருசிறப்புப்பெயருக்கும். ஒரு பொதுப்பெயருக்கும் இடையே ஒற்றுமையைவிளக்கும், ஆகியவென்னும் பண்புருபுதொக்குவருவது இருபெயரொட்டுப் பண்புத்தொகையாம். (உ-ம்.) தருமராசன், பனைமரம். விரிந்தால் தருமனாகியராசன், பனையாகியமரம் எனவிரியும். "பண்பை விளக்கு மொழிதொக் கனவும்-ஒருபொருட் கிரு பெயர்வந்தவுங் குணத்தொகை." (பொது-14-சூ.)

## V. Question.

(a) அடுக்குத்தொடருக்கும், இரட்டைக்கிளவிக்கும் பேதமென்ன? உதாரணமென்ன? சூத்திரமென்ன?

(b) வேற்றுமைப்புணர்ச்சியில் உருபுதொக்குவருவதற்கு இரண்டு உதாரணமும், உருபும்பயனுந் தொக்குவருவதற்கு மூன்றுதாரணமும் எழுதுக.

(c) இடைநிலைபெறாமல் விகுதியாற் காலங்காட்டும் வினைகள் எவை? உதாரணமென்ன? சூத்திரமென்ன?

(d) பெயரிடை நிலைக்கு மூன்றுதாரணமும் சூத்திரமும் எழுதுக.

(e) இருதிணைக்கும் பொதுவினைகளெவை? சூத்திரமென்ன?

## Answer.

(a) தனித்தனிப் பிரிக்கக்கூடியதாயும் யாதாமொரு காரணம்பற்றியும் அடுக்கிவருவது அடுக்குத்தொடராம். (உ-ம்.) பாம்பு பாம்பு. நெருப்பு நெருப்பு. "அசைநிலை பொருள் நிலை இசைநிறைக்கொரு சொல்-இரண்டு மூன்று நான் கெல்லைமுறையடுக்கும்" (பொ-44-சூ.)

இரட்டித்த சொற்கள் எப்பொழுதும் அந்த இரட்டிப்பினின்றும் பிரிந்து இசையாதது இரட்டைக்கிளவி. (உ-ம்.) கலகலவெனப்பேசினான், துடிதுடித்து வீழ்ந்தான். துடித்து எனப் பின்மொழி பிரிந்திசைப்பினும் முன்மொழி பிரிந்திசையாமைகாண்க. "இரட்டைக் கிளவி இரட்டிற் பிரிந்திசையா" (பொது-45-சூ.)

(b) நிலங்கடந்தான், கல்லெறிந்தான் = உருபு தொக்கன. பொன் மோதிரம், இனைமரம், தருமபாடசாலை = உருபும் பயனும் உடன்தொக்கன.

(c) செய்யுமென்னும் வாய்பாட்டு வினைமுற்று, வியங்கோள்வினைமுற்று, ஏவல் ஒருமை பன்மை வினைமுற்றுகள், செய்யுமென்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம், செய, செயின் என்னும் வாய்பாட்டு வினையெச்சங்கள் இகர யகரவீற்றுச் செய்துவென்னும் வாய்பாட்டு வினையெச்சங்கள் முதலியவாம். (உ-ம்.) அதுநடக்கும்; அதுவருக; நீசெய்வாய், நீர்செய்ம்மின்; நடக்குங்குதிரை; நடக்க இருக்கின்றான்; நடக்கின் வருவான்; பாடியாடினான்; போய்ச்சேர்ந்தான்; "றவ் வொ டுகர உம்மை நிகழ்பல்லவும் - தவ்வொடிறப்பும் எதிர்வும் டவ் வொடு - கழிவும் கவ்வொ டெதிர்வும் மின்னேவல் - வியங் கோள் இம்

மார் எதிர்வும் பார்த்தும் - செலவொடுவரவும் செய்யும் நிகழ் பெயர்வும் - எதிர்மறை மும்மையும் ஏற்கும் ஈங்கே. (பத-18-சூ.)

(d) அறிஞன், தலைவன், இறைவன், இவற்றில் ஞகரவகரங்கள் பெயர் இடைநிலைகளாம். "இலக்கியம் கண்டதற் கிலக்கணம் இயம்பலின் - பகுதி விகுதி பகுத்திடைநின்றதை வினைப்பெயர் அல்பெயர்க் கிடைநிலை எனலே" (பத-14-சூ.)

(e) தன்மைவினை, முன்னிலைவினை, வியங்கோள்வினை, பெயரெச்சவினை, வினையெச்சவினை, வேறு, இல்லை, உண்டு, என்னுமுற்று வினைகள் பிறவுமாம். "தன்மைமுன்னிலை வியங்கோள் வேறில்லை யுண்டபெரச்சம் இருதிணைப் பொதுவினை" (வினை-11-சூ.)

## VI. Question.

(a) தன்வினை பிறவினை யாவதானால் எத்தனைவிதங்களாலாகும்? உதாரணமென்ன? நன்னூல் சூத்திரமென்ன?

(b) உவமைத்தொகையாவதென்ன? அது எத்தனைவகைப்படும்? உதாரணமும், சூத்திரமும் காட்டுக.

(c) இயல்பு வழக்கிற்கும், தகுதிவழக்கிற்கும் பேதமென்ன? அதன் உட்பிரிவும், உதாரணமும், சூத்திரமும் விளக்கமாக எழுதுக.

## Answer.

(a) வி, பி, கு, சு, டு, து, பு, று, என்னும் விகுதிகளைப் பெறுவதினாலும், மெல்லொற்று வல்லொற்றாகத் திரிவதினாலும், ஓரொற்று இடையே மிகுவதினாலும் தன்வினைகள் பிறவினைகளாகும். (உ-ம்.) வருவி, நடப்பி, போக்கு, பாய்ச்சு, உருட்டு, நடத்து, எழுப்பு, துயிற்று—இவை விகுதிபெற்றவை. இயங்கு - இயக்கு. திருந்து - திருத்து—இவை மெல்லொற்று வல்லொற்றானவை. உருகு - உருக்கு. ஆடு, ஆட்டு—இவை ஓரொற்றுமிக்கன. "செய்யென் வினைவழி விப்பிதனிவரின் செய்வியென் ஏவல் இணையின் ஈரேவல்" (பத-11-சூ)

(b) உவமைச்சொல்லுக்கும், உபமேயச்சொல்லுக்கும் இடையில் போல முதலிய உவமை உருபுகள் மறைந்துவருவதாம். அது தொழிலுவமை, பயனுவமை, மெய்யுவமை, உருவுவமை என நான்கு வகைப்படும். (உ-ம்.) புலிப்பாய்ந்தான், இருள்மழைக்கை, துடியிடை, மரகதக்கிளி—இவற்றில் முறையேகாண்க. "உவம உருபி லதுவமத்தொகையே. (பொது-15-சூ.)

(c) ஒருபொருளுக்கு இயல்பாக அமைந்த சொல்லால் அப்பொருளைக்கூறுவது இயல்புவழக்கு. அது இலக்கணமுடையது, இலக்கணப்போலி, மரூஉ என மூவகைப்படும். ஒருபொருளின் இயல்பாகியசொல்லை ஒழித்துத் தகுந்த வேறுசொல்லால் அப்பொருளைக் கூறுவது தகுதிவழக்கு. அது இடக்கரடக்கல், மங்கலம், குழூஉக்குறி என மூவகைப்படும்.

(உதாரணம்.)

மண், கல், பொன்—இலக்கணமுடையது.

கோயில், புறங்கடை, தலைக்கடை—இலக்கணப்போலி.

சென்னை, சோணாடு, பாண்டிநாடு=மரூஉ.

கால்கழுவினேன், பவ்வீ, வாய்பூசிவந்தேன்=இடக்கரடக்கல்.

தாலிபெருகிற்று, இமையோர், பசி=மங்கலம்.

பறி, சொல்விளம்பி, கால்வெள்ளை=குழூஉக்குறி.

"இலக்கண முடைய திலக்கணப் போலி-மரூஉ என்றாகும் மூவகை இயல்பும் இடக்க ரடக்கல் மங்கலங் குழூஉக்குறி - எனுமுத் தகுதியோ டாறும் வழக்கியல்." (பெய-10-சூ.)

## VII Question.

(1) பெயரெச்சம் முதலிய எச்சங்களெவை? இரண்டிரண்டுதா ரணங்காட்டுக. [தொடரா ?

(2) வினைத்தொகையும், பண்புத்தொகையும் விரிந்தால் என்ன

(3) வலித்தல்முதலிய ஒன்பது விகாரங்களுக்கும் ஒவ்வொருதார ணம் எழுதுக. [சூத்திரமென்ன ?

(4) பெயர்ச்சொல்லுக்கும், இடைச்சொல்லுக்கும் பேதமென்ன?

(5) உரிச்சொல்லுக்கும் பண்புச்சொல்லுக்கும் பேதமென்ன ?

(6) விகுதிபெறாத ஆண்பாற்பெயரும், பெண்பாற்பெயரும் ஐந்து மொழிக.

## Answer.

(1) பெயரெச்சம், வினையெச்சம், உம்மையெச்சம், சொல்லெச்சம், பிரிநிலையெச்சம், எனவெச்சம், ஒழியிசையெச்சம், இசையெச்சம், எதிர்மறையெச்சம், குறிப்பெச்சம் எனப் பத்துவகைப்படும்.

உ-ம். செய்தசாத்தன், பெரியசாத்தன்=பெயரெச்சம்.

வந்துபோனான், விருந்தின்றியுண்டான்=வினையெச்சம்.

சாத்தனும் வந்தான், தேவனும் போனான்=உம்மையெச்சம்.

வருவேன் என்றான், ஒருபொருளில்லென்றான்=சொல்லெச்சம்.

சாத்தனே கொண்டான், சாத்தனோ கொண்டான்=பிரிநிலையெச்சம்.

விண்ணென இசைத்தது, இடியென இடித்தது=எனவெச்சம்.

கூரியதோர் வாண்மன், உண்ணவோ வந்தான்=ஒழியிசையெச்சம்.

வரனுமுரியன், கொடுத்தாலும் நன்று=எதிர்மறையெச்சம்.

(நூலே) கற்றதனாலாய பயனென்கொல்=இசையெச்சம்.

வாய்பூசிவந்தேன், புளித்தின்றான்=குறிப்பெச்சம்.

(2) முறையே பெயரெச்சத்தொடரும் இடைச்சொற் றொடருமாம்.

(உ-ம்.) சுடுகாடு=சுட்டகாடு, கருங்குதிரை=கரியகுதிரை.

(3) குறுந்தாட் பூதம்=குறுந்தாள் (மெல்லொற்று வலித்தலாயது.)

தண்டையினக்கிளி=தட்டை (வல்லொற்று மெலித்தலாயது.)

போத்தரூர் புல்லறிவினூர்=பொத்தரூர் (குறில் நீட்டப்பட்டது.)
கன்றென்றேன்றியேன்=றியேன் (நெடில் குறுக்கப்பட்டது.)
சிறியிலை வெதிரினெல்=சிறியவிலை (அகரந் தொகுக்கப்பட்டது.)
வினையும்மே=வினையுமே (மகரமெய் விரிக்கப்பட்டது.

(4) பெயர்ச்சொல்லாவது:—இருதிணை ஐம்பாற் பொருளையும், மூன்றிடத்தும் நின்று தெரிவித்து எட்டுவேற்றுமை உருபும் சார்தற்கு இடனாக வினையைக்கொண்டு முடிவதாம். (உ-ம்.) மரம்வளர்ந்தது "இடுகுறி காரணம் மரபோடாக்கம் - தொடர்ந்து தொழிலல காலந்தோற்ற - வேற்றுமைக்கிட னாந் திணைபாலிடத்தொன்- றேற்பவும் பொதுவும் ஆவனபெயரே" (பெய-18-சூ.)

இடைச்சொல்லாவது:—தனித்து நடக்குந் தன்மையின்றி எட்டு வேற்றுமையுருபும் சார்தற் கிடம்பெறாமல், பெயரையேனும் வினையையேனும் பின்னு முன்னுமாக அடுத்துவருவதாம். (உ-ம்.) அவனே கொண்டான் என்பதில் - ஏ. "வேற்றுமை வினைசாரியை ஒப்புருபுகள் - தத்தம் பொருள இசைநிறை அசைநிலை - குறிப்பெனெண் பகுதியில் தனித்தியலின்றிப்-பெயரினும் வினையினும் பின்முன்னோரிடத் தொன்றும் பலவும் வந்தொன்றுவ திடைச்சொல்" (இடை. 1-சூ.)

(5) உரிச்சொல்லாவது:—குணத்தைத் தெரிவித்துப் பெயருக்கும், வினைக்கும் உரிமைபூண்டு எட்டுவேற்றுமையுருபு சார்தற்கு இடம்பெறாமல் செய்யுளுக்குரியதாய் வருவதாம். பண்புச்சொல்லாவது:—பெயர்த்தன்மையையடைந்து எட்டுவேற்றுமை உருபுகளுஞ் சார்வதற்கு இடனாகும்.

(6) கோ, வேள், குரிசில், தோன்றல், ஆடவன்=ஆண்பாற்பெயர்.
நங்கை, தையல், மாது, பெண், மடந்தை=பெண்பாற்பெயர்

## VIII. Question.

(*a*) பால்பகா அஃறிணைப்பெயரென்பதென்ன? அது ஒருமையில் வருவதற்கு இரண்டு உதாரணமும், பன்மையில்வருவதற்கு மூன்றுதாரணமும், சூத்திரமும் எழுதுக.

(*b*) முதலுக்கு ஐ உருபுவந்தால் சினைக்கு என்னவரவேண்டும்? சூத்திரமென்ன?

(*c*) விளிவேற்றுமை ஏலாத பெயர்ச்சொற்களெவை?

(*d*) எவ்வெவ்வேற்றுமை எவ்வெவற்றைக்கொண்டு முடியும்? உதாரணமும், சூத்திரமும் நன்குவிளக்குக.

(*e*) பகரவிகுதி பலர்பாலிலும் பலவின்பாலிலும் வந்தால் உறுப்பிலக்கணம்(=பகுபத இலக்கணம்) எப்படிக் கூறவேண்டும்?

## Answer.

(*a*) ஒன்றன்பால் விகுதியும் பலவின்பால் விகுதியும் பெறாமல் இருபாலுக்கும் பொதுவாய்வரும் அஃறிணைப் பெயராம். குதிரை நடந்தது. எருது உறங்கியது. (=ஒருமை) மரம்வளர்ந்தன, குதிரை

